# ஆவணம் இதழில் பங்கேற்போர் நினைவுக்கு

தமிழக வரலாற்றை வளப்படுத்தும் அடிப்படைச் சான்றுகள் குறித்து கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்ளல் தமிழகத் தொல்லியல் கழகத்தின் முதன்மையான குறிக்கோள். அந்தக் குறிக்கோளை அடையும் வகையில் கீழ்க்குறிப்பிட்ட பரந்த தலைப்புகளை ஒட்டிக் கட்டுரைகளும் குறிப்புகளும் வரவேற்கப்படுகின்றன.

1. புதியனவாகக் கண்டுபிடிக்கப்பட்ட தொல்பொருள்கள், தொன்மையான ஊரிருக்கைச் சின்னங்கள், கலைப்பொருள்கள், காசுகள், கல்வெட்டுகள், செம்பு அல்லது ஓலைப் பட்டயங்கள், சுவடிகள் ஆகியன பற்றிய குறிப்பு கள்;
2. கல்வெட்டு முதலிய எழுத்தாவணங்களானால் அவற்றின் மூல பாடம், மைப்படி அல்லது கண்படி;
3. மூலச் சான்றுகளை அடிப்படையாக வைத்து எழுதப்பட்ட வரலாற்றுக் கட் டுரைகள், திறனாய்வுகள்;
4. புதிய நூல்கள், கட்டுரைகள் பற்றிய மதிப்பீடு அல்லது குறிப்புகள்;
5. நாளேடுகளில் வந்த அரிய வரலாற்றுச் செய்திகளின் திரட்டு;
6. கருத்தரங்க நிகழ்ச்சிகள் பற்றிய செய்தித் திரட்டு.

மேற்கண்ட யாவற்றுக்கும் ஒளிப்படமும், வரைபடமும் அனுப்பலாம். படங்கள் $8 \times 10$ செ.மீ. மிகாமல் இருக்க வேண்டும்.

கல்வெட்டுகளின் மைப்படிகள், கண்படிகள் அனுப்புவோர் அவற்றின் தெளிவாக ஒளிப்படங்களை மட்டும் ($8 \times 10$ செ.மீ. மிகாமல்) அனுப்புதல் வேண்டும். முழு மைப்படிகளை அனுப்புதல் கூடாது.

வரைப்படங்கள் யாவும் $8 \times 10$ செ.மீ. மிகாமல் இருத்தல் வேண்டும். வரைபடங்களின் விளக்கங்கள் யாவும் தமிழில் இருத்தல் வேண்டும்.

கட்டுரைகள் யாவும் ஆவணம் ஏற்கனவே பின்பற்றிவரும் நடைப் படி வத்தை (Style sheet) பின்பற்ற வேண்டும்.

க்ரந்த எழுத்துகளை எழுத்துப் பெயர்ப்பு செய்ய ஆவணம் வழங்கி வரும் முறைகளைப் பின் பற்றலாம். அல்லது மூல எழுத்துக்களை அப்ப டியே மாற்றாமல் தரலாம்.

**எல்லா வரைவுகளும் தெளிவாகவும் சுருக்கமாகவும் தட்டச்சில் இரு படிகள், "ஆவணம்" பதிப்பாசிரியர், மே/பா. கல்வெட்டியல் துறை, தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர் 613 005 என்ற முகவரிக்கு அனுப்ப வேண்டும். இக்கழக உறுப்பினர்கள் மட்டுமே ஆவணத்தில் பங்கேற்க லாம்.**

ஆவணம்: 10 (1999)



**Avanam,** Journal of the Tamil Nadu Archaeological Society, Thanjavur.

இவ்விதழ் இந்திய வரலாற்று ஆய்வுக் கழகத்தின்
(INDIAN COUNCIL OF HISTORICAL RESEARCH)
நல்கை உதவியுடன் வெளியிடப்படுகிறது.
செய்திகளுக்கு அவ்வக்கட்டுரையாசிரியரே
பொறுப்பு.

அச்சிட்டோர்: அலமு பிரிண்டிங் வொர்க்ஸ்
இராயப்பேட்டை, சென்னை - 600 014

தமிழகத் தொல்லியல் கழகத்தின் தலைவரும், கல்வெட்டியல் அறிஞருமான காலஞ்சென்ற

**குடந்தை திரு. என். சேதுராமன் அவர்களுக்கு**

இவ்விதழ் காணிக்கையாக்கப் பெறுகிறது.

# தமிழகத் தொல்லியல் கழகம்

மே/பா. கல்வெட்டியல் துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் 613 005.

## செயற்குழு

| | |
|---|---|
| தலைவர் | என். சேதுராமன், குடந்தை |
| துணைத்தலைவர் | கொடுமுடி சண்முகன், சென்னை<br>எஸ்.எம். கமால், ராமநாதபுரம் |
| செயலர் | கா. ராஜன், தஞ்சாவூர் |
| இணைச்செயலர் | சு. இராஜவேலு, சென்னை |
| பொருளாளர் | பா. ஜெயக்குமார், தஞ்சாவூர் |
| பதிப்பாசிரியர் | சு. இராசகோபால், சென்னை |
| செயற்குழு உறுப்பினர் | நடன. காசிநாதன், சென்னை |
| | எம்.டி. சம்பத், மைசூர் |
| | வி. ஜீவானந்தன், ஈரோடு |
| | கே. சதாசிவன், திருநெல்வேலி |
| | பி. சந்திரசேகரன், ராஜபாளையம் |
| | மா. கணேசன், அவினாசி |
| | சொ. சாந்தலிங்கம், மதுரை |
| | வெ. இரா. துரைச்சாமி, நாமகிரிப்பேட்டை |

---

பதிப்புக் குழு
எ. சுப்பராயலு, தமிழ்ப் பல்கலைக்கழகம்.
ப. சண்முகம், சென்னைப் பல்கலைக்கழகம்.
கோ. விசய வேணுகோபால், பாண்டிச்சேரி.

# பொருளடக்கம்

# 1. குடுமியான்மலை
# தமிழ்-பிராமிக் கல்வெட்டு

சொ. சாந்தலிங்கம், மதுரை.

புதுக்கோட்டை மாவட்டம் குளத்தூர் வட்டத்தில் அமைந்துள்ள குடுமியான்மலை ஒரு சிற்றூர் எனினும், இங்குள்ள கோயிலினுள் ஒரு பாறை மீது பொறிக்கப்பட்டுள்ள இசைக் கல்வெட்டினால் பெரும் புகழ் பெற்ற தலமாகும். பதினெட்டு ஆண்டுகளுக்கு முன்னர் இங்குள்ள கோயில்களையும் சிற்பங்களையும் கல்வெட்டுகளையும் கள ஆய்வு செய்து வெளியிட்ட நூலில் குடுமியான்மலையின் தென்மேற்குச் சரிவில் அமைந்துள்ள சமணப்பாழியையும் அங்குள்ள கற்படுக்கைகளையும் குறிப்பிட்டு அங்கு கல்வெட்டுகள் காணப்படவில்லை என்று கூறியிருந்தேன்.[1] ஆயினும் இந்நூல் வெளியான பிறகு அதே ஆண்டில் (1981) நானும் எங்கள் துறை ஆய்வாளர் பொ. இராசேந்திரனும் அந்தக் குகைக்கு மீண்டும் செல்ல வாய்ப்புக் கிட்டியபோது அங்குள்ள ஒரு கற்படுக்கையில் மிகவும் தேய்ந்து காணப்படும் ஒரு தமிழ்-பிராமிக் கல்வெட்டைக் கண்டுபிடித்தோம்.

இச்செய்தியைக் கேள்வியுற்ற கல்வெட்டறிஞர் திரு. ஐராவதம் மகாதேவன் நேரில் சென்று பார்வையிட்டார். அவருடன் அங்கு சென்றிருந்த எங்கள் துறை ஆய்வாளர்கள் சு. இராசகோபால், வெ. வேதாசலம் ஆகியோர் சமணப்பாழியின் மேல் முகட்டிலுள்ள ஒரு பெருங்கற்கால ஓவியத்தைத் தற்செயலாகக் கண்டுபிடித்தனர்.[2] கருப்பு வண்ணத்தில் பெரிய அளவில் வரையப்பட்டுள்ள இந்த ஓவியத்தில் இரு வீரர்கள் போரிடும் காட்சி சித்தரிக்கப்பட்டுள்ளது.

ஐராவதம் மகாதேவன் அவர்கள் அறிவுரைப்படி குடுமியான்மலைக்கு மீண்டும் சென்று இக்கல்வெட்டின் மசிப்படியும் ஒளிப்படமும் கவனமாக எடுக்கப்பட்டன.கல்வெட்டின் வாசகம் கீழ் வருமாறு உள்ளது.

நாழள் கொறறந்தய ப.ய

இதன் திருந்திய பாடம் **நாழல் கொற்றந்தய் ப[ளி★]ய்** என்று கொள்ள வேண்டும். நாழல் என்ற ஊரைச் சேர்ந்த கொற்றந்தை என்பான் அமைத்த பள்ளி என்பது பொருள்.

**எழுத்தமைதி:**

இக்கல்வெட்டு பன்னிரண்டு எழுத்துக்களாலானது. இரண்டாவது எழுத்து மிகவும் தேய்ந்துள்ளபோதிலும் அது ழ-கரம் என்று நேரில் அடையாளம் கண்டு கொள்ள முடிந்தது. மூன்றாவது எழுத்து 'ள்' என்று பிழையாக பொறிக்கப்பட்டுள்ளது; இது 'ல்' என்று இருக்க வேண்டும். கொற்றந்தய் என்பது கொற்றந்தை என்ற பெயரின் மாற்று ருவமாகும். பதினோராம் எழுத்து முற்றிலும் அழிந்துபோய் அங்கு இப் பொழுது ஒரு வெற்றிடம் தான் உள்ளது. மற்ற தமிழ்-பிராமிக் கல் வெட்டுகளுடன் ஒப்பிட்டு அழிந்துபோன எழுத்து [ளி*] ஆக இருக்கக் கூடும் என்று ஒருவாறு ஊகிக்கலாம். இறுதியில் உள்ள எழுத்து ய-கரம்; அதன் தலைப்பக்கம் காணப்படும் கீறல் எழுத்தைச் சேர்ந்தது அல்ல என்று நேரில் பார்க்கும்போது தெரிந்தது. 'ள்', 'ந்' என்ற இரு மெய்களின் மீது புள்ளியிடப்பட்டுள்ளது. 'கொ' என்ற உயிர்மெய் எழுத்தின் மீது அது குறில் என்று காட்ட புள்ளியிடப்பட்டுள்ளது இக் கல்வெட்டின் ஒரு சிறப்பாகும்.[3] மூன்று புள்ளிகளும் எழுத்துக்களின் இடது புறத்தில் இடப்பட்டுள்ளன. எழுத்தமைதியின் அடிப்படையில் இக்கல்வெட்டின் காலம் ஏறத்தாழ கி.பி. 2-3 ஆம் நூற்றாண்டுகள் என்று கணிக்கலாம்.



படம் 1:1. குடுமியான் மலை தமிழ் பிராமிக் கல்வெட்டு

**சொல்லாய்வு**

*நாழள் (நாழல்):* சங்க நூல்களில் ஞாழல் என்று குறிக்கப்படும் மரம். இக்காலத்தில் புலி நகக்கொன்றை என்று வழங்கப்படுகிறது. இப்பெயர் நாழல் என்றும் இக்காலத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.[4] இக் கல்வெட்டில் இச்சொல் ஓர் ஊரின் பெயராக வந்துள்ளது. இவ்வாறே

இலக்கியத்திலும் கல்வெட்டிலும் ஞாழல் என்ற சொல் ஊர்ப் பெயர்களில் வருவதைக் காணலாம். குமுழி ஞாழல், கொடி ஞாழல், மதுரை அளக்கர் ஞாழல் என்பவை சங்ககாலப் புலவர்களில் சிலருடைய ஊர்ப் பெயர்களாகும்.[5] ஞாழற் பள்ளி என்ற ஊரின் பெயர் திருவல்ல செப்பேடுகளில் குறிக்கப்பட்டுள்ளது.[6]

*கொற்றந்தய் (கொற்றந்தை):* இது இச்சமணப்பாழியை அமைத்தளித்த கொடையாளியின் பெயராக இருக்கக்கூடும். இப்பெயர் புகளூர் தமிழ்-பிராமிக் கல்வெட்டில் கொற்றந்தை என்று எழுதப்பட்டுள்ளது.[7]

*ப[ளி★] (பள்ளி-ய்):* சமணப்பாழிகள் தமிழ்-பிராமிக் கல்வெட்டுகளில் ப(ள்)ளி என்று குறிப்பிடப்பட்டுள்ளன. இக்கல்வெட்டுகளில் பெரும்பாலும் ஒற்று மிகுதலும் இரட்டித்தலும் தவிர்க்கப்பட்டுள்ளன. சொல்லின் இறுதியில் காணப்படும் ய் என்ற விகுதி தமிழ்பிராமிக் கல்வெட்டுகளில் இகர, ஐகார ஈற்றுப் பெயர்ச்சொற்களுக்குப் பின்னர் பெரும்பாலும் காணப்படுகிறது. மாங்குளம் கல்வெட்டில் பள்ளி என்ற சொல் பளிய் என்று எழுதப்பட்டுள்ளதை இங்கு ஒப்பிட்டுப் பார்க்கலாம்.[8]

---

களஆய்விற்கு இசைவளித்த எங்கள் துறைத்தலைவர் அவர்களுக்கும், இக்கல்வெட்டின் ஆய்விற்குப் பலவகையிலும் ஊக்கமளித்த ஐராவதம் மகாதேவன் அவர்களுக்கும் எனது நன்றி உரித்தாகிறது.

## குறிப்புகள்:

1. சொ. சாந்தலிங்கம், *குடுமியான்மலை*, தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை, சென்னை, 1981,ப.133.
2. *தினமணி*, சென்னை, 10.1.1996.
3. மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்.
   எகர, ஒகரத்து இயற்கையும் அற்றே (*தொல்காப்பியம்*-எழுத்து. 15- 16).
4. *தமிழ் லெக்சிகன்* ('*நாழல்*').
5. *சங்ககாலப் புலவர்கள்*, உ.வே. சாமிநாதய்யர் நூல்நிலையம், சென்னை, 1986
6. Travancore Archaeological Series., Vol.II, III (Reprint) 1992, Huzur Office (Tiruvalla) Plates, Line 558,.
7. I. Mahadevan, *Corpus of the Tamil-Brahmi Inscriptions*, 1966, No.65.
8. மேற்படி எண். 2.

# 2. தாமரைக்கரையில் ஒரு பழம் நடுகல்

வெ. வேதாசலம், மதுரை.

ஈரோடு மாவட்டம் அந்தியூரிலிருந்து மைசூர் செல்லும் வழியில் ஈரெட்டிமலைமீது அடர்ந்த காட்டின் நடுவே உள்ளது தாமரைக்கரை கிராமம். இக்கிராமத்திலுள்ள வீரபத்திரசுவாமி கோயிலின் வளாகத்தில் தனிக்கல்லில் பொறிக்கப்பட்ட நடுகல் ஒன்று உள்ளது.[1] இந் நடுகல் முன்பு இவ்வூரில் மேற்புறம் இருந்த கொல்லை ஒன்றில் இருந்தது. அங்கு இப்போது நாயக்கர் காலத்தினைச் சார்ந்த மூன்று புலிக்குத்தி நடுகற்கள் உள்ளன.

இந்நடுகல்லின் மேற்பகுதி உடைந்துள்ளது. கீழ்பகுதி மட்டும் மூன்று வரிகளுடன் கூடிய கல்வெட்டுடன் காணப்படுகிறது. இதில் பொறிக்கப்பட்டுள்ள வரிவடிவ அமைதியைக் கொண்டு இதன் காலத்தினை கி.பி. 5-6ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கூறலாம். தமிழ்-பிராமி எழுத்துக்கள் தமிழாகவும் வட்டெழுத்தாகவும் மாறுகின்ற கால கட்டத்தில் இக்கல்வெட்டு எழுதப்பட்டுள்ளது. இதில் காணப்படும் எழுத்துகள் பூலாங்குறிச்சி, இருளப்பட்டிக் கல்வெட்டுகளின் எழுத்தமைதியை ஒத்துள்ளன. ஈரெட்டிமலையின் மற்றொரு பகுதியில் 'துற கய்யுள்ளாருகல்' என்று படிக்கப்பட்ட மற்றொரு நடுகல் கல்வெட்டோடு இதனை ஒப்பிடலாம்.[2] இக்கல்வெட்டில் பழமையான வட்டெழுத்துக்களின் வளர்ச்சியைப் பார்க்க முடிகிறது. மகரம், தகரம் ஆகியவை வட்டெழுத்துக்களாக மாறியுள்ள நிலையைக் காணமுடிகிறது. தகரத்தில் உள்ள குறுக்குக்கோடு பிறை போன்று மேல்நோக்கிய வளைவாக இடப்பட்டுள்ளது. இதேபோன்று மகரத்திலுள்ள குறுக்குக் கோடும் வளைந்துள்ளது. இக்கல்வெட்டின் மற்றொரு சிறப்பு அனைத்து மெய்யெழுத்துகளும் புள்ளியிட்டு எழுதப்பெற்றுள்ளமையாகும். இக்கல்வெட்டு வடக்கிருந்து உயிர்துறந்தவரின் நினைவாக எடுக்கப்பட்ட கல்லாக இருக்கலாம்

...ன் கருமதச்சாத்தன் கல்

---

1. இக்கல்பற்றி சம்பை ஆசிரியர் திரு. அ. பழனியப்பன் கொடுத்த தகவலின் பேரில் முனைவர் சு. இராசகோபாலும் கட்டுரையாசிரியரும் சென்று ஆய்வு செய்தனர்.
2. கல்வெட்டு, தொல்பொருள் ஆய்வுத்துறை, எண். 20, பக்.16, 19.



படம் 2.
தாமரைக்கரை
நடுகல்.



படம் 3:1
எடுத்தவாய் நத்தம் நடுகல்

# 3. விழுப்புரம் மாவட்டத்தில் புதிய நடுகற்கள்

*சி. வீரராகவன், மங்கையர்க்கரசி, விழுப்புரம்.*

## 3:1

இடம் : விழுப்புரம் மாவட்டம், கள்ளக்குறிச்சி வட்டம், எடுத்த வாய்நத்தம் (கச்சராப்பாளையம்) ஆத்துக்காடு திரு. சார் வாய்காரருக்குச் சொந்தமான காடு.

காலம் : கி.பி. 6-ஆம் நூற்றாண்டு தொடக்கம் (எழுத்ததமைதியின் அடிப்படையில்)

செய்தி : வீரனின் தலைக்கு மேல் ஆறுவரிகளில் வட்டெழுத்துக ளில் வாசகம் பொறிக்கப்பட்டுள்ளது. இந்நடுகல்லின் உய ரம் 95 செ.மீ. அகலம் 65 செ.மீ. கனம் 20 செ.மீ. வீரனின் உருவம் நேராக நின்ற நிலையில் செதுக்கப்பட்டுள்ளது. வலக்கையில் கட்டாரியும், இடக்கையில் வில்லும் அம் பும் பற்றியுள்ளான். கழுத்தில் ஒரு அணி காணப்படுகிறது. தலைமுடி அலங்காரம் இருளப்பட்டி நடுகல்லில் காணும் வீரனது சிற்பத்தை ஒத்துள்ளது. இடையில் கச்சையும் கட் டாரி உறையும் தொங்கியவாறு செதுக்கப்பட்டிருப்பது வீர னது கம்பீரத்தை வெளிப்படுத்துகிறது. தொறுக்கொண்ட பூசலில் இறந்த ஒரு வீரன் பற்றி செய்தி தருகிறது.

1. கடைவெண்
2. ம[லை]க்கோட்
3. [டு] வேட்டுவரு இ
4. ருவாய் தொ[று]க் கொ
5. ளுட் பட்டான் கம்பா
6. டரு மகன் சாமி கல்

## 3:2

இடம் : விழுப்புரம் மாவட்டம் உளுந்தூர்பேட்டை வட்டம், கல் சிறு நாகலூர், திரு.ரங்கராஜனின் வயல்

காலம் : கி.பி. 7-ஆம் நூற்றாண்டு.

செய்தி : இந்நடுகல்லில் உள்ள வீரன் இடப்பக்கம் பார்த்த நிலையில் போர் செய்வது போன்றுள்ளான். வீரனது வலக்கையில் நீண்ட வாளும் இடக்கையில் நீண்ட கேடயமும், இடைக் கச்சையில் கட்டாரியும் செதுக்கப்பட்டுள்ளன. ஒரு பெரிய படையோடு கோசரும் மழவரும் ஊரன் இருக்கை என்ற ஊரின் மீது போர் தொடுத்து அழித்த போது கோவலூரைச் சேர்ந்த குமரர் என்ற வீரன் இறந்து பட்டான் என்பது செய்தி.

1. கோ[ச]ரும் மழுவரும் வடமா தண்டத்தோடு
2. ஊரன் இருக்கை ஏறி [வ]ணகோ சருகு
3. உத்தி[ப்] பட்டார் கோவலூர்க்
4. குமர[ர்]
5. ..... கல்

## 3:3

இடம் : விழுப்புரம் மாவட்டம், உளுந்தூர்ப்பேட்டை வட்டம், கல் சிறு நாகலூர், திரு. ரங்கராஜனின் வயல்

காலம் : பல்லவன் இரண்டாம் நந்திவர்மன் (?), (கி.பி. 731-96).

செய்தி : இந்நடுகல்லில் உள்ள வீரன் நேராக நின்ற நிலையில் இடைக்கச்சையில் கட்டாரி, வலக் கையில் நீண்ட வாள் இடது கையில் கேடயம் ஆகியவற்றுடன் காணப்படுகிறான். தலைக்கு மேலும் வலப்பக்கமும் வட்டெழுத்து பொறிப்புகள் காணப்படுகின்றன. ஒரு போர் நிகழ்ச்சியில் கைக்கூர் என்ற ஊரை தீக்கிரையாக்கி கோவலூரைச் சேர்ந்த ஒரு வீரன் இறந்துபட்டான்.

1. நந்திபோத்தரைசரு மலை[கு]ருகில் செங்கோடு
2. தைக்கால கைகூர் சுட்டு எறிந்துபட்டார் கோவலூர்
3. பெ .... ர்

---

இக்கல்வெட்டுப் பாடங்களைப் படிக்க உதவிய திருவாளர்கள் ஐராவதம் மகாதேவன், நடன. காசிநாதன், சு. இராசகோபால் ஆகியோருக்கு நன்றி.

# 4. கீழ்ப்பெரும்பாக்கம் முருகன் சிற்பக் கல்வெட்டு

*சி.வீரராகவன், மங்கையர்க்கரசி, விழுப்புரம்.*

இடம் : விழுப்புரம் மாவட்டம், விழுப்புரம் நகருக்கு 2 கி.மீ. தொலைவில் உள்ள கீழ்ப்பெரும்பாக்கத்தில் உள்ள ஒரு தனிக்கல்.

காலம் : கி.பி. 7ஆம் நூற்றாண்டு.

செய்தி : சிற்பத்தின் அருகாமையில் அதே காலத்தைச் சார்ந்த ஜேஷ்டை சிற்பம் ஒன்று உள்ளது. அரிய இம்முருகன் சிற்பம் கருங்கல் பலகையில் கருக்கப்பட்டுள்ளது. இதன் மேற்புறம் அரைவட்ட வடிவத்துடன் உள்ளது. சிற்பத்தின் உயரம் 108 செ.மீ. அகலம் 62 செ.மீ. கனம் 20 செ.மீ. கருங்கல் பலகையைச் சுற்றி அழகிய வேலைப்பாடுடன் கரடு வெட்டப்பட்டுள்ளது. சிற்பம் திறந்த வெளியில் இருந்தாலும் இன்றும் நல்ல நிலையில் உள்ளது. தாமரை மலர் மீது சுகாசன நிலையில் அமர்ந்த முருகனின் வலக்கால் மடக்கியும் இடக்கால் தொங்கிய வண்ணமும் உள்ளன. தலையில் கரண்ட மகுடம் உள்ளது. செவிகளை மகர குண்டலமும், கழுத்தினைக் கண்டிகையும், கைகளைக் கடகமும், கால்களைக் கழல்களும், வயிற்றுப் பகுதியை உதரபந்தமும் அலங்கரிக்கின்றன. இவ்வனைத்து அலங்காரங்களுடன் முருகன் சிறந்த மறவனாகவும் சித்தரிக்கப்பட்டுள்ளான். மேல் வலக்கையில் சிறிய அளவிலான வஜ்ஜிராயுதமும், முன் வலக்கையில் தாமரை மொட்டும் உள்ளன. இடது முன் கை தொடையில் ஊன்றியுள்ளது. முருகனின் கக்கங்களுக்கு கீழேயும் தொடைக்கு மேலும் உள்ள குறுகிய இடத்தில் நான்கு வரிகளில் கல்வெட்டுப் பொறிப்புகள் காணப்படுகின்றன. எழுத்துகள் வட்டெழுத்தும் தமிழும் கலந்துள்ளன.

ந ....க் கொற்றி கொட்டிவித்தது.

---



படம் 4:1. கீழ்ப்பபெரும்பாக்கம் முருகன்



படம் 5.1 தென்மங்கலம் அய்யனார்.

# 5. தென்மங்கலம் அய்யனார் சிற்பக் கல்வெட்டு

**சி. வீரராகவன், மங்கையர்க்கரசி, விழுப்புரம்.**

இடம் : விழுப்புரம் மாவட்டம், திருக்கோயிலூர் வட்டம், தென் மங்கலம் கிராமத்தில் உள்ள காளிகோயில்.

காலம் : கி.பி. 8ஆம் நூற்றாண்டு.

செய்தி : ஒரு சதுரக் கற்பலகையில் அமர்ந்த நிலையில் புடைப் பாக இச்சிற்பம் செதுக்கப்பட்டுள்ளது. இதன் உயரம் 120 செ.மீ. அகலம் 75 செ.மீ. கனம் 15 செ.மீ. அய்ய னார் வலக்காலை மடக்கி குத்திட்டு வைத்து இடக் காலை தொங்க விட்ட வண்ணம் அமர்ந்துள்ளார். முப் புரிநூல் வலமிருந்து இடமாகச் செல்கிறது. வலக்கை வலக்கால் முட்டியின் மீது தொங்கவிட்டும் இடக்கையை பீடத்தின் மீது ஊன்றியவாறு காணப்படு கிறார். தலையை தூக்கிமுடிந்த கொண்டை அலங்கரிக் கின்றது. வலக்காது தோள் அளவு நீண்டு தொங்கியவாறு குண்டலத்துடன் உள்ளது. கழுத்தை கண்டச்சரமும், கைகளைக் கடகமும், கால்களைக் கழல் களும், இடையைக் குறுவாளுடன் கூடிய இடைக்கச்சை யும் அலங்கரிக்கின்றன. சிற்பத்தின் இடப்புறம் யானையின் தலையும், வலப்புறம் குதிரையின் உருவ மும், குதிரைக்குப்பின் கொண்டையுடன் கூடிய பெண் களின் உருவமும் காணப்படுகின்றன. ஆசனத்திற்குச் சற்று கீழ் கலசம், பஞ்சபாத்திரம், சேவல் போன்றவை உள்ளன. இவற்றில் சேவலின் உருவம் சிறப்பான கலை யம்சத்துடன் காட்சியளிக்கிறது. ஆசனத்தின் அடிப்பகுதி யில் இருகோடுகளுக்கிடையே 8 செ.மீ. உயரத்தில் தலைக்கட்டுகளுடன் கூடிய எழுத்துகள் கொண்ட கல் வெட்டு. இதன் காலம் 8 ஆம் நூற்றாண்டாகலாம்.

தேர்க்காலர் சருக்கினார் செய்வித்தது.

---

# 6. அநுராதபுரத்தில் ஒரு தமிழ்க் கல்வெட்டு

**எ.சுப்பராயலு, தஞ்சாவூர்;**
**ப. சண்முகம், சென்னை.**

தைஷோ (தோக்கியோ, ஜப்பான்) பல்கலைக்கழத்தின் சார்பாக பேராசிரியர் நொபொரு கராஷிமா அவர்கள் தலைமையில் மேற்கொள் ளப் பெற்ற 'இடைக்காலத்தில் இந்து மாக்கடலில் வணிக நிகழ்ச்சிகள்' என்ற ஆய்வுத்திட்டத்திற்காக இலங்கையில் படியெடுக்கப்பட்ட நான்கு கல்வெட்டுகள் சென்ற இதழில் தரப்பட்டன. (ஆவணம், 9, பக்.32-39). கடந்த ஆண்டு (1998) ஆகஸ்டு மாதம் மேற்கொண்ட கள ஆய்வுகளில் காணப்பட்ட ஒரு கல்வெட்டு இங்கு தரப்படுகிறது.

இலங்கையின் வட பகுதியில் அமைந்த சிறப்பு வாய்ந்த தொன்மை யான நகரம் அநுராதபுரம். பழமையான புத்த விகாரங்களையும் ஸ்தூ பங்களையும் இந்நகரம் கொண்டுள்ளது. மெளரியப் பேரரசர் அசோக ரின் புத்த சமயத் தூதுவர்களான மகேந்திரனும், சங்கமித்திரையும் புத்த சமயத்தைப் பரப்புவதற்காக இவ்விடத்தில் புத்த விகாரைகளையும் ஸ்தூபங்களையும் ஏற்படுத்தினர். இவர்களால் நடப்பட்ட தொன்மை யான போதி மரம் தேசியச் சின்னமாக பாதுகாக்கப்படுகிறது.

இந்நகரத்தின் வட பகுதியில் உள்ள அபயகிரி ஸ்தூபமும் விகாரை யும் மிகப் பழமையானவை. இவற்றை வட்டகாமினி (கி.மு. 88) என்ற இலங்கை மன்னன் கட்டியதாக செய்திகள் உள்ளன. பின்னர் கஜபாகு வினால் (கி.ப. 114-136) புதுப்பித்துக் கட்டப்பெற்றது. இன்றுள்ள ஸ்தூபம் 115 மீட்டர் உயரமுடையது. இத்தூபத்தின் சுற்றாலை கற்பலகைகளால் அமைக்கப்பட்டுள்ளது. இச்சுற்றாலையை அமைக்க பலர் கொடையளித்துள்ளனர். கி.பி. எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்த சிங்கள மொழிக் கல்வெட்டுகள் பல இச்சுற்றாலையில் கண்டுபிடிக்கப் பட்டு வெளியிடப்பட்டுள்ளன.

இத்தமிழ்க் கல்வெட்டு 10 வரிகளில் அமைந்துள்ளது. மன்னர் பெயர் மற்றும் ஆட்சியாண்டு ஏதும் தரப்படவில்லை. எழுத்தமைதி யைக் கொண்டு இக்கல்வெட்டு எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்தது என லாம். சமப்படுத்தப்பட்ட பலகைக் கல்லில் (50 × 30 செ.மீ) எழுத்துகள் ஆழமாக வெட்டப்பட்டுள்ளன. சிலவிடங்களில் நீளவாக்கில் வெடிப் புகள் உள்ளன.

அபயகிரி ஸ்தூபத்திற்கு கல் நடைபாதை ஏற்படுத்துவதற்கு அளிக் கப்பட்ட கொடையை இக்கல்வெட்டு தெரிவிக்கிறது. பதினோரடி

சதுர கற்பணியும் காசும் கொடையாகத் தந்துள்ளார். கொடையாளி யார் என்பது கல்வெட்டில் தெளிவாக இல்லை.

1. செயபாள [னாட்*]
2. டபைகிரி [ஸ்தூபத்தி]
3. ல் கற்படைய் செய்-
4. விச்ச தறை கிழக்-
5. கு மேற்கு பதி-
6. னோரடி தெற்-
7. கு வடக்கு
8. பதினோரடி-
9. யும் காசும் [ஒர]
10. க்கமும்.

தமிழ் நாட்டுக் கல்வெட்டுகளை பெரிதும் ஒத்திருந்தாலும் இக்கல் வெட்டில் முதலிரண்டு வரிசையில் உள்ள கடைசி சில எழுத்துக்க ளைச் சரியாக வாசிக்க இயலவில்லை.

---

இக்கல்வெட்டை வெளியிட அனுமதியளித்த பேராசிரியர் கராஷிமா அவர்களுக்கு நன்றி. இத்திட்டக்குழுவின் ஓர் உறுப்பினரான பேராதனைப் பல்கலைக்கழகப் பேராசிரியர் முனைவர் எஸ்.பத்மநாதன் கல்வெட்டுக்களைப் படியெடுக்கவும் பெயர்த்தெழுதவும் உறுதுணையாக இருந்தார். கல்வெட்டுப்பாடங்களைச் சரிபார்ப்பதில் உதவிபுரிந்த முனைவர் சு. இராசகோபால், முனைவர். வெ. வேதாசலம் ஆகியோருக்கு நன்றி.



படம் 6:1 அநுராதபுரம் - தமிழ்க்கல்வெட்டு.

# 7. சிக்காடு துர்க்கை சிற்பக் கல்வெட்டு

***சி. வீரராகவன், மங்கையர்க்கரசி, விழுப்புரம்.***

*இடம்* : விழுப்புரம் மாவட்டம், உளுந்தூர்ப்பேட்டை வட்டம், சிக்காடு ஏரிக்கரைத் துர்க்கை கோயில்.

*காலம்* : கி.பி. 8-9 ஆம் நூற்றாண்டு.

*செய்தி* : ஒரு சதுரக் கற்பலகையில் நேராக நின்ற நிலையில் புடைப்பாக இப்பாய்கலைப்பாவை சிற்பம் செதுக்கப் பட்டுள்ளது. இச்சிற்பத்தின் உயரம் 137 செ.மீ. அகலம் 97 செ.மீ. கனம் 12 செ.மீ. சிற்பத்தின் மேற்பகுதியில் வலப்பக்கம் சிங்கத் தலையும் நீண்ட சூலாயுதமும், இடப்பக்கம் மானின் தலையும் கிளியின் உருவமும் செதுக்கப்பட்டுள்ளன. எண் கைகளுடன், வலக்கைக ளில் அபயமுத்திரை, பிரயோகச் சக்கரம், நீண்டவாள், மணி ஆகியவையும் இடக்கைகளில் கடி முத்திரை, சங்கு, வில், கேடயம் ஆகியவையும் உள்ளன.

ஸ்ரீநந்திபருமன்.



படம் 7:1 சிக்காடு - துர்கை

# 8. பல்லவ நந்திவர்மனின் (?) கல்வெட்டு

**சி. வீரராகவன், மங்கையர்க்கரசி, விழுப்புரம்.**

இடம் : விழுப்புரம் மாவட்டம், உளுந்தூர்ப்பேட்டை வட்டம், கல் சிறுநாகலூர், சுந்தரமூர்த்தியின் வயலில் குண்டுப் பாறை

காலம் : பல்லவன் மூன்றாம் நந்திவர்மன் (?), யா.3. (கி.பி. 852)

செய்தி : உருண்டை வடிவிலான கற்பாறையில் ஏழு வரிகளில் தமிழ் எழுத்துகளில் பொறிக்கப்பட்டுள்ளது. முனையரையர் நாட்டுப் பெருமானார் சேவகர் செய்த ஒரு கொடை பற்றி இக்கல்வெட்டு குறிக்கின்றது.

1. ஸ்ரீ நதி போத்தரை ச
2. [ரசரு] யாண்டு ஆறாவ
3. து முனையரையர் நாட்டு
4. ப் பெருமானார் சேவகர்
5. நருங்கலத்து [பேரா]லி
6. டு நெல்லு செ...ரெ
7. ரிக் [கு]

---



படம் 8:1 நந்திவர்மன் கல்வெட்டு

# 9. வயலோகம் சோழர் கல்வெட்டு

சு. இராசவேலு, சென்னை.

இடம் : புதுக்கோட்டை மாவட்டம், வயலோகம், ஏரிக்கீழ் கரையிலுள்ள பிடாரிகோயில், மூன்று துண்டுக்கற்க ளில்.

காலம் : முதலாம் ஆதித்தன் யா. *3* (கி.பி. 873).

செய்தி : வயலகத்தில் உள்ள குளத்துக்கு குளப்பட்டியாக வீர சோழ இளங்கோ வேளாரின் இரு படைப்பிரிவுகள் நிலக்கொடை செய்தமை.

1. ஸ்வஸ்திஸ்ரீ கொஇராகேஸரிபன்-
2. மர்க்கி யாண்டு 3-வது இவாண்டு
3. வயலக நாட்டு வயலகத்து குளத்துக்கு
4. குளப்பட்டி செய்த நிலம் இவூர் நாட்டா-
5. ர் பெருஞ்செய்யும் நாற்றுகால் துடர்ச்-
6. செயும் இவை இரண்டும் நிலந் மூன்றுமா இக் குள-
7. த்துக்கு சந்திராத்தியவல் நிப்பதாக செ-
8. ய்தோம் வீர சோழ இளங்கோவேளார் வா-
9. ள் படையும் உடநிலை சேவகரும் இ-
10. சஞ்து இது இரக்ஷிப்பான் பாதம் எங்க-
11. ள் தலை மேலது இ பந்மாஹேச்ϱவரரகைஷ

---

இக்கல்வெட்டை வெளியிட அனுமதி அளித்த இந்தியத் தொல்லியல் அளவீட்டுத்துறை (கல்வெட்டுபிரிவு) இயக்குநர் அவர்களுக்கு நன்றி. களஆய்வில் என்னுடன் வந்த திரு. கரு. இராசேந்திரன் அவர்களுக்கும் நன்றி.

# 10. மேல் நங்கவரம் ஐஞ்ஞூற்றுவர் கல்வெட்டு

கி. ஸ்ரீதரன், திருச்சிராப்பள்ளி;
நாக. கணேசன், கரூர்.

இடம் : கரூர் மாவட்டம்.

காலம் : சுமார் கி.பி. 9ஆம் நூற்றாண்டு.

செய்தி : நடப்பட்டுள்ள கல் 1 மீட்டர் உயரமும், 40 செ.மீ. அகலமும் உடையது. இதன் முன்புறம் திருமறு (ஸ்ரீவத்சம்) இரு விளக்குகளுக்கு இடையே பீடத்தில் அமர்ந்த நிலை. பீடத்தின் கீழே கல்வெட்டு துவங்குகிறது. கல்வெட்டு வரிகளுக்கு நடுவில் கழியில் முனையில் இரு பைகள் கட்டி தொங்குவதைப் போல காணப்படுகிறது. இது பசும்பை ஆக இருக்கலாம். வலது புறம் அரிவாளும், சிற்றுளி போன்ற கருவிகளும், புடைப்புத் சிற்பமாக காணப்படுகின்றன. அதற்கு மேலே சுருள் வட்டம் காணப்படுகிறது. இடதுபுறம் வாளும், கேடயமும் புடைப்புச் சிற்பமாக காணப்படுகிறது. கல்லின் பின்புறம் துர்கையின் வடிவம் (சங்கு, சக்ரத்துடன்) காணப்படுகிறது.

பவத்ரோணாச்மன் என்பவர் ஒரு தோட்டத்தைக் கொடையளித்து அதற்கு ஐஞ்ஞூற்றுவன் என்று பெயர் கொடுத்து வாள்களார், பன்மையார் என்ற படைக்குழுவினரின் காவலில் வைத்த செய்தி சொல்லப்பட்டுள்ளது.

1. ஸ்வஸ்திஸ்ரீ பவத்ரோணச்ாமன்
2. தோட்டம் வள-
3. ஞ்சியர் ஐஞ்ஞூ
4. ற்றுவர்
5. பேர் அஞ்ஞூற்
6. றுவன் இவர்
7. கள் மக்கள்
8. வாள்களாரு

9. ம் பன்மை

10. யாரும் ரட்ஷை

---

கல்வெட்டினைப் பற்றி தகவல் அளித்த மேல்நங்கவரம் திரு.இராமமூர்த்தி, படியெடுக்க உதவிய திரு.ச. நடராசன் ஆகியோருக்கும், இதை வெளியிட அனுமதி நல்கிய எங்கள் துறை இயக்குநர் திரு. கு.தாமோதரன் அவர்களுக்கும் நன்றி.



படம் 10.மேல் நங்கவரம் ஐநூற்றுவர் தூண் துர்க்கையும் கல்வெட்டும்.

# 11. மன்னார்கோட்டை தலைதந்தான் கல்

வெ. வேதாசலம், மதுரை.

விருதுநகர்மாவட்டம் துலுக்கப்பட்டிக்கு அருகில் அமைந்துள்ள மன்னார்கோட்டை சிவன்கோயிலில் உருவம் இல்லாது கல்வெட்டு மட்டும் உள்ள நடுகல் ஒன்று கண்டறியப்பட்டது.[1] இக்கல்வெட்டு எழுத்தமைதி கொண்டு பத்தாம் நூற்றாண்டு என்று கணித்துக் கூற வேண்டியுள்ளது.

தலையை அரிந்து பலி கொடுத்த செயலினைப் பற்றி இது கூறுகிறது. தமிழ்நாட்டின் வடபகுதியில் ஒரத்தி என்ற ஊரில் கன்னரதேவன் காலத்தில் தலையை அரிந்து குடுத்து தற்பலி செய்தவரின் நடுகல் கிடைத்துள்ளது. (இக 1976-771, எண்.211). பாண்டிநாட்டில் இது போன்ற தற்பலியைத் தெரிவிக்கும் கல்வெட்டுகள் மடப்புரம், மல்லல் போன்ற இடங்களில் கிடைத்துள்ளன. மடப்புரம் காளிகோயிலில் தூங்கு தலை குடுத்த இருவர் பற்றித் தெரிவிக்கும் பத்தாம் நூற்றாண்டு கல்வெட்டுள்ளது. மல்லல் காளிகோயில் கல்வெட்டு முதல் குலோத்துங்க சோழன் காலத்தில் படைத்தலைவன் ஒருவனுக்கு வந்த நோயைப் போக்க தூங்குதலை தருவதாக நோற்றுத் தலையரிந்து காளிகோயிலுக்குப் படைத்ததைத் தெரிவிக்கிறது. எனவே, பாண்டிநாட்டில் ஏதோ ஒரு காரணத்தின் பொருட்டு தெய்வத்திடம் வேண்டி நோன்பிருந்து தலையை அரிந்து படைக்கும் தற்பலி வழக்கம் இருந்துள்ளது என்பதை இக்கல்வெட்டுகள் காட்டுகின்றன. இவ்வழக்கத்தினை சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற காவியகாலத்திலிருந்து காண முடிகிறது. கலிங்கத்துப்பரணியிலும் இது பற்றிக் குறிப்பிடப்படுகிறது. இது போன்ற வழக்கத்தினைத் தெரிவிக்கும் மற்றொரு புதிய கல்வெட்டே மன்னார்கோட்டைக் கல்வெட்டாகும். இக்கல்வெட்டும் மன்னார் சிவன்கோயில் அருகில் அமைந்த வாழவந்த அம்மன் கோயிலில் ஒரு காலத்தில் இருந்திருக்க வேண்டும். இக்கல்வெட்டு பெருவணிகன் ஒருவனுக்காக ஊர் தலைவன் ஒருவன் நோற்று தலையரிந்து தற்பலி கொடுத்ததைத் தெரிவிக்கிறது. கலியுகக்கண்டடி தன்மசெட்டி என்ற வணிகனுக்காக சூரங்குடிநாட்டு ஆதனூரான கையமூர் கிழவன் ஸ்ரீ வேழான் சீலப்புகழான் என்பவன் தலை தந்தான் என்று இது கூறுகிறது. சூரங்குடி நாடு என்பது எட்டையபுரத்திலிருந்து தூத்துக்குடி செல்லும் வழியில் அமைந்த பண்டைய நாட்டுப் பிரிவாகும். இப்பகுதியில் இன்றும் ஆதனூர் என்ற ஊர் உள்ளது.

| | | | |
|---|---|---|---|
| 1. | சூரங்குடி | 8. | கழான் க |
| 2. | நாட்டு ஆ | 9. | லியுகக்கண் |
| 3. | தனூரராந | 10. | டடி தன் |
| 4. | கையம் | 11. | மசெட்டிக்கு |
| 5. | ஊர்கிழவன் | 12. | கோன் நோ |
| 6. | ஸ்ரீவேழா | 13. | ற்றி தலை |
| 7 | ன் சீலப்பு | 14. | தந்தான் |

1. கள ஆய்வில் துணைபுரிந்தோர் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறைத் தோழர் திரு. பொ. இராசேந்திரன், திரு. சொ. சாந்தலிங்கம்.



படம் 12:1 பார்த்திவேந்திரவர்மனின் நடுகல்.

# 12. பார்த்திவேந்திரவர்மனின் நடுகல் கல்வெட்டு

**ப. சண்முகம், சென்னை.**

வேலூர் மாவட்டம் குடியாத்தம் வட்டத்தில் பொகலூரை ஒட்டியுள்ள சிறு குன்றின் அடிவாரத்தில் இந்நடுகல் நாட்டப்பெற்றுள்ளது.[1] சென்னைப் பல்கலைக்கழகத் தொல்லியல் துறை இக்கல்வெட்டை 1984 ஆம் ஆண்டில் கண்டுபிடித்தது. அடுத்த ஆண்டு மத்திய அரசின் கல்வெட்டுப் பிரிவினரால் இக்கல்வெட்டு படியெடுக்கப்பட்டது.[2] இக்கல்வெட்டின் முக்கியம் கருதி இங்கு வெளியிடப்படுகிறது.

பலகைக் கல்லின் ஒருபக்கத்தில் இடது காலை முன்வைத்த நிலையில் ஒரு வீரனின் உருவம் செதுக்கப்பட்டுள்ளது. வட்ட வடிவக் கொண்டையுடைய அவ்வீரனின் வலக்கையில் கீழ்நோக்கிய நீண்ட கத்தியும், இடக்கையில் வில்லும் உள்ளன. மூன்று அம்புகள் உடலைத் துளைத்துள்ளன. நடுக்கல்லின் வலப்புற மேல்பகுதியில் இரு பெண்களுக்கு நடுவே அமர்ந்தநிலையில் வீரனின் உருவம் ஒன்றும் உள்ளது. கீழ்ப்பகுதியில் மூடியுடனுள்ள பூரண கும்பம் ஒன்றுள்ளது. அதன் அருகே இரண்டு காளைகள் செதுக்கப்பட்டுள்ளன.

வீரனின் உருவத்தைச் சுற்றி 10ஆம் நூற்றாண்டு தமிழ் எழுத்துகளில் கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. வீரனின் உருவத்திற்கு வலப்புறத்தில் கிரந்த எழுத்தில் முதல்வரி வெட்டப்பட்டுள்ளது. கல்வெட்டின் மற்ற பகுதியில் கிரந்த எழுத்துகள் பயன்படுத்தப்படவில்லை. 7, 8 வரிகள் மேலிருந்து கீழாக வெட்டப்பட்டுள்ளன. பார்த்திவேந்திர வர்மனின் 16ஆம் ஆட்சியாண்டில் (கி.பி. 972) இந் நடுகல் வெட்டப்பட்டது. பராந்தகய நல்லாண்டார் என்பார் விளத்தூரில் நடைபற்ற போரில் ஈடுபட்டு மாண்டதன் நினைவாக இந்நடுகல் எடுப்பிக்கப் பெற்றது.

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. கோ பார்த்திவேந்த்ராதிப-
3. ன்மார்க்கி யாண்டு 16வது
4. புகறூருடை-
5. யர் செ-
6. ங் கா-
7. விதி பராந்தகய நல்லாண்டார் விளத்து-
8. ரழியப் பட்-
9. டார்

பொதுவாகத் தமிழ்நாட்டில் கிடைக்கும் நடுகற்களிலிருந்து இக் கல்வெட்டு சிறிது மாறுபட்டுள்ளது. வீரனை மேலுலகிற்குக் கொண்டு செல்லும் வானவப் பெண்டிர் பொதுவாக இக்காலத் (10ஆம் நூற்றாண்டு) தமிழ்நாட்டு நடுகற்களில் காட்டப்படுவதில்லை. இவ்வழக்கம் கருநாடக ஆந்திர மாநில வழக்கத்தின் தாக்கமாக இருக்கலாம். பூரண கும்பங்கள் தமிழ்நாட்டுப் பகுதி நடுகற்களில் சாதாரணமாகக் காணப்படுபவை.

கல்வெட்டில் போருக்கான காரணமோ, யாரிடம் போரிட்டான் என்றோ சொல்லப்படவில்லை. ஊரழியப்பட்டான் என்ற சொற்றொடரிலிருந்து அவ்வூரில் போர் நடைபெற்றதனால் ஊரழிந்தது எனக் கருதலாம். இக்காலச் சோழ மன்னர் அல்லது சிற்றரசர் போரிலீடுபட்டதாகக் கல்வெட்டில் குறிக்கப்படவில்லை. ஆயினும் கல்வெட்டுச் சிற்பத்தில் ஆவினத்தைக் காட்டியுள்ளதால் தொறுப்பூசல் தொடர்பானது எனக் கருதலாம்.[3]

பார்த்திவேந்திரவர்மன் குறுநில மன்னர் என்பதில் ஐயமில்லை[4] இவனது கல்வெட்டுகள் தமிழ்நாட்டில் காஞ்சிபுரம், வேலூர், விழுப்புரம் மாவட்டங்களிலும், ஆந்திரப்பிரதேசத்தில் சித்தூர் மாவட்டத்திலும் கிடைத்துள்ளன. இப்பகுதிகள் இவன் ஆட்சிப் பொறுப்பில் இருந்தன எனலாம். பார்த்திவேந்திரவர்மனின் 15 ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு பரந்தூரில் கிடைத்தபோதும் அதனை ஐயப்பாட்டுடனே நோக்கினார். க.அ. நீலகண்ட சாஸ்திரியார். மேலும் இக்கல்வெட்டில் உள்ள ஆட்சியாண்டு 13 ஆக இருக்கலாமோ எனவும் ஐயப்பட்டார்.[5] இதுவரை கிடைத்த கல்வெட்டுகளைக் கொண்டு நோக்கும் போது பார்த்திவேந்திரவர்மன் 16 ஆண்டுகள் ஆட்சி செய்துள்ளான் எனக் கருதுவதில் தவறில்லை எனத் தோன்றுகிறது.[6]

கல்வெட்டில் சொல்லப்பட்ட புகறூர் இன்றைய புகளூர் என்பதில் ஐயமில்லை; விளத்தூர்[7] இன்றைய வளத்தூராகலாம். இவ்வூர் புகளூருக்கு மூன்று கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ளது.

---

**குறிப்புகள்**

1. இவ்விடத்தில் மேலும் சில நடுகல் கல்வெட்டுகள் உள்ளன. **இக.** 1921, எண். 145, 146; 1940, எண். 216, 217.
2. **இக**, 1985, எண்.348.
3. மத்திய அரசின் கல்வெட்டு ஆண்டறிக்கையில் எறுமைத் தொறுப் போரில் ஈடுபட்டு இறந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இறந்துபட்ட வீரனின் பெயர் செங்காவிதி எனத் தரப்பட்டுள்ளது. **இக.**1985-348, பக்.3.
4. பிற கருத்துகளுக்குப் பார்க்க: க.அ. நீலகண்ட சாஸ்திரியார், *Colas*, சென்னைப் பல்கலைக்கழகம், 1955, பக்.148-149
5. மேற்கண்ட நூல், பக்.148-149
6. **தெஇக.** 4, 291, 292; **இக.** 1923, எண் 75.
7. மத்திய அரசின் கல்வெட்டுப்பிரிவினர் விளத்தனூர் என வாசித்துள்ளனர்.

# 13. முதல் இராசேந்திர சோழரின் திருவொற்றியூர்க் கல்வெட்டு

சு. சுவாமிநாதன், மைசூர்.

இடம் : சென்னைக்கு அருகில் உள்ள திருவொற்றியூர் சிவன் கோயில்[1].

காலம் : முதல் இராசேந்திரன் யா.16 (கி.பி. 1028).

1 - 26. ("சுவத்தி ஸ்ரீ திருமன்னிவளர இரு நிலமடந்தையும்" என்று தொடங்கும் மெய்க்கீர்த்தி)

27. உடையார் ஸ்ரீராஜேந்திர சோழதேவர்க்கு யாண்டு 16வது ஜயங்கொண்ட சோழமண்டலத்து புழற்கோட்டத்து புழ-

28. ல் நாட்டு திருவொற்றியூருடையார் தேவதாநம் இகணையூருரோம் நிலவி லையாவணக் கையெழுத்து உடை-

29. யார் ஸ்ரீராஜேந்திர சோழ தேவியார் அணுக்கியார் சாத்தந் இராமதேவி யார் திருவொற்றியூருடையார்க்கு கவ-

30. ரிதம் தேவரடியார் 12வர்க்கு பேரால் நிச்சயம் நெல் குறுணியாக ஓராண் டிநுக்கு நெல் முன்நூற்ற-

31. றுபதிந் கலத்துக்கு நிவந்தமாக விற்றுக் குடுத்த நிலத்துக்கு கீழ்பாற் கெல்லை சுட்டப்பட்டிக்கு மேற்கும் தெ-

32. ந்பாற்கெல்லை மணலியாந சிங்கவிஷ்ணுச் சருப்பேதி மங்கலத் தெல் லைக்கு வடக்கும் மேல்பாற்கெ-

33. ல்லை திவாகரந்சேரி மேலைத்துலைவாய்க்கு இளவாயூர் ஸுப்$_3$ரஹமண்யதே$_3$வர் நிலத்துக்கு கிழக்கும் வ-

34. டபாற்கெல்லை வாரியவரப்புத் தெக் கரைக்கு தெற்கும் இநான்கெல்லை நடுஉள்ளும் நடுவு கோதா-

35. வரிப் பிள்ளையார் நிலம் குழி இரண்டாயிரமும் நீங்கலாக பந்நிறு சாண் கோலாலாயிரங் குழி கொண்-

36. டது பட்டி ஒன்றாக அளந்து விட்ட நிலம் பட்டி இருபத்து நாலரை இன் நிலத்துக்குரிய நீரும் நீரோடு கா-

37. லும் துலையுதுலைவாயும் இகணையூரான் கால்வழி நீர்க்கிசைந்த வண் ணம் நீர் பாச்சிக் கொள்வதாகவு-

38. ம் விலைப் பொருளும் இறைப்பொருளும் ஊராகக் கொண்டு விலையற விற்றுக் குடுத்தோம் இகணையூருரோம்.

இக்கல்வெட்டு இராசேந்திர சோழதேவரின் அணுக்கியாரான சாத்தந் இராமதேவி திருவொற்றியூர் சிவன் கோயிலில் பணியாற்றும் 12 தேவரடியார்க்கு உணவளிக்க இகணையூராரிடமிருந்து நிலம் விலைக்கு வாங்கி, வரி விலக்க இறைப்பொருளும் நல்கி நிவந்தமாக அளித்ததைக் கூறுகின்றது.

சோழ மன்னர் முதலாம் பராந்தக சோழர் காலத்தில் 'அணுக்கர்' என்ற பதவி ஏற்படுத்தப்பட்டது.[2] இம்மன்னருடைய வேதாரண்யம் கல்வெட்டொன்று[3] வீரசோழ அணுக்கர் என்பதைக் குறிப்பிடுகிறது. அணுக்கர் என்பதற்கு அண்மையிலிருப்பவர் எனப் பொருள். சிவபெருமான் அருகிலேயே இருக்கும் பேறு பெற்றதனால் சுந்தரருக்கு அணுக்கத் தொண்டர் என்று பெயர் உண்டு. சோழமன்னரது மெய்க்காப்பாளராகிய இவ்வீரசோழ அணுக்கர் அரசனுக்கு எந்த ஊறும் வராமல் மன்னனது அண்மையிலேயே இருப்பர். சோழமன்னர்கள் பல போர்களில் ஈடுபட்டனர். பகை மன்னரால் ஏதாவது தீங்கு நேர்வதைத் தடுக்கவே இத்தகைய பணியாளர்களை நியமித்தனர் என்று கருத இடமுண்டு. முதலாம் பராந்தகன் காலத்திலிருந்து மூன்றாம் குலோத்துங்கன் காலம் வரை இவ்வீரசோழ அணுக்கர்களைப் பற்றி பல கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன[4]. பன்னிரண்டாம் நூற்றாண்டுத் திருவாரூர்க் கல்வெட்டொன்றின்படி பூங்கோயில் நம்பி என்பவர் 'வீரணுக்க விஜயம்' என்ற நூலை எழுதியுள்ளார்[5].

முதலாம் இராசேந்திரன் தான் முதன் முதலில் பெண்களை அணுக்கியர்களாகப் பணிபுரிய நியமித்தார். இம்மன்னரது சிதைந்த திருநாகேசுவரம் கல்வெட்டொன்று[6] சாத்தந் இராமதேவியாரின் தங்கையார் அளித்த கொடையை இயம்புகிறது. திருமழவாடிக் கல்வெட்டு[7] இவரது மற்றொரு அணுக்கியாரான ஐய்யாறந் செம்பொந் என்பவரைக் குறிப்பிடுகின்றது.

நாம் ஆராயும் திருவொற்றியூர் கல்வெட்டில் வரும் அணுக்கியாரும் முதன்முதலில் கோயிலில் பணிபுரிந்த தேவரடியாராக இருந்திருக்கலாம். கோயில்களில் பணிபுரிந்த தேவரடியார்கள் தங்களது திறமையினாலும், ஆற்றலினாலும் மன்னர்களைக் கவர்ந்து அவர்களை மணம் புரிந்து கொண்டனர் என்று கல்வெட்டுகள் இயம்புகின்றன.[8] மற்றவர்களை அணுக்கியர்களாகவும், அரண்மனையில் பணிபுரிய ஊழியர்களாகவும் சோழ மன்னர்கள் தேர்ந்தெடுத்தனர் என்று கருத இடமுண்டு.

**குறிப்புக்கள்**

1. இக்கோயிலிலுள்ள 300க்கு மேற்பட்ட கல்வெட்டுகள் 1911, 1912-ஆம் ஆண்டுகளில் படியெடுக்கப்பட்டு கல்வெட்டு ஆண்டறிக்கைகளில் பதிவு செய்யப்பட்டுள்ளன. இங்குக் கொடுக்கப்படும் கல்வெட்டு இக. 1912, எண்.153 ஆகும்.
2. தெஇக. 17, முன்னுரை 5
3. தெஇக. 17 எண். 466

4. பார்க்க குறிப்பு 2
5. தெஇக. 17, எண். 593
6. தெஇக. 17, எண் 33
7. தெஇக. 5 எண் 644
8. கே.ஜி. கிருஷ்ணன், 'தேவனார் மகள்' *கலைமகள்.*



படம் 14. முன்னூர் இராசேந்திர சோழன் கல்வெட்டு

# 14. முன்னூர் இராசேந்திர சோழன் கல்வெட்டுகள்

**கோ. உத்திராடம், சென்னை.**

விழுப்புரம் மாவட்டம் திண்டிவனம் மரக்காணம் சாலையில் சற்று உள்தள்ளி அமைந்த ஊர் முன்னூர். இங்குள்ள ஆடவல்லேசுவரர் கோயிலில் உள்ள மிகச் சிறிய பல்லவர்காலச் சிற்பத்தொகுதி காரண மாக தொல்லியல் அறிஞர் உலகிற்கு ஏற்கெனவே அறிமுகமான ஊர் இது. பல்லவர் மற்றும் முற்காலச் சோழர்களது சிற்பங்கள் இங்கிருந்த போதிலும் இக்கோயில் குலோத்துங்க சோழன் காலத்தில் புதுப்பிக்கப் பட்டதால் அதற்கு முன்னதான கல்வெட்டுகள் இங்கில்லாது போயின. இங்கு இந்தியத் தொல்லியல் அளவீட்டுத்துறை 1919ஆம் ஆண்டில் 50 கல்வெட்டுகளைப் படியெடுத்துள்ளது. அப்போது படியெடுக்காமல் விட்டுப்போன ஒரு தூணில் உள்ள கல்வெட்டுகள் இங்கு தரப்படுகின் றன. தற்பொழுது தூணின் கீழ்ப்பகுதி இரண்டாக உடைந்துவிட்டது. திருச்சுற்று மாளிகையில் இத்தூண் கிடத்தப்பட்டுள்ளது. இதன் நான்கு புறத்திலும் கல்வெட்டுகள் உள்ளன. தூணின் மேல், கீழ் பகுதிகள் 4 பட்டைகளாகவும் நடுப்பகுதி 8 பட்டையாகவும் இருப்பதாலும் கல் வெட்டு தூண் முழுவதும் இருப்பதாலும் பகுத்துப் படிப்பது சற்று கடி னம்.

## 14:1

| | | |
|---|---|---|
| இடம் | : | முன்னூர் ஆடவல்லேசுவரர் கோயில் திருச்சுற்று மாளி கையில் கிடக்கும் உடைந்த தூணின் முதல்பகுதி |
| காலம் | : | முதல் இராசேந்திரசோழன், யா. 5 (கி.பி. 1017) |
| செய்தி | : | கல்வெட்டு 42 வரிகள் முடிந்ததும் மேலும் 10 வரிகள் உள்ளன. இவை அடுத்த பக்கத்தில் உள்ள கல்வெட்டு டன் தொடர்வதாகத் தெரிகிறது. முன்னூர் மூலத்தான முடைய இறைவனுக்கு விலிவலத்து வெள்ளாளன் ஒருவன் விளக்குக்காக ஆடு 90 கொடுத்ததையும் அதற்கு சபையார் பிணை தந்ததையும் குறிப்பிடுகிறது. |

1 - 22 ("ஸ்வஸ்திஸ்ரீ திருமன்நிவளர" என்று தொடங்கும் மெய்க்கீர்த்தி)

23. மாப்பொருந்தண்டாற் கொண்-

24. ட கோப்பரகேசரி பன்மரான

25. ஸ்ரீராஜேந்திர சோழதேவற்கு
26. யாண்டு 5 ஆவது ஜயங்கொ-
27. ண்ட சோழ மண்டலத்து ஓ-
28. ய்மா நாட்டு ப்$_3$ரஹ்மதேய முஞ்-
29. ஞூறாந ஸ்ரீபண்டிதச் சோழச் சரு-
30. ப்பேதிமங்கலத்து ஸ்ரீமூல-
31. ஸ்தாநத்து பரமஸ்வாமிக்கு வெ-
32. ண்குன்றக் கோட்டத்து நல்லூர்
33. நாட்டு விலிவலத்து வெள்ளா-
34. ளன் குட்டேறந் கோவன் வை-
35. த்த திருநந்தா விளக்கு ஒன்றினு-
36. க்கு ஆடு 90 தொண்ணூறு-
37. ங்கொண்டு சந்திராதி$_3$த்தவ-
38. ற் விளக்கெரிப்பிக்கக் கட-
39. வோமானோம் இப்பரிசுக்கு [பி-
40. ணை] ஸபை$_4$யோ-
41. ம் ஸ்ரீபந்மாஹேச்$_0$வர-
42. ரக்ஷை

## கீழ்ப்பகுதி கல்வெட்டு

1. இ மூலஸ்தானத்து [பரம
2. ஸ்வாமி]க்கு மாங்காடான
3. ... சோழநல்லூர் வே -
4. ளாளன் நம்பூதி நி -
5. ருத்துவ சித்தன் ஸ-
6. ந்தி விளக்கு 1 வைத்த
7. ஆடு 12 மேற்ப்ப -
8. டிக் கோய்யில் மேலை
9. திருச்சுவரில் ஆடவ -
10. லார்க்கு மேற்படி நி (*முற்றுப் பெறவில்லை*)

## 14:2

இடம் : மேற்சொன்ன தூணில் இரண்டாவது பக்கத்தில் உள்ளது.

காலம் : கி.பி. 11 ஆம் நூற்றாண்டு

செய்தி : கல்வெட்டின் தொடக்கம் எது என்று தெரியவில்லை. மூலத்தான முடையார் கோயிலில் உள்ள நடராசருக்கு மதிய வழிபாடு நிகழும்போது வேதம் வல்ல பிராமணருக்கு உணவு வழங்க நல்லூரில் நிலம் கொடுத்த செய்தியைக் குறிப்பிடுகிறது. நிலம் உழுவார் மீது இறைகொள்ளாதிருத்தல் பற்றியும் குறிப்பிடுகிறது. கல்வெட்டுத் தொடர்ச்சி அறியமுடியவில்லை. இறுதியில் மூன்று வரிகளில் 'இது சாலை கிடாரங்கொண்ட சோழன்' என்று கீழிருந்து மேலாக எழுதப்பட்டுள்ளது. மேற்பகுதி கல்வெட்டில் சொல்லப்படும் சாலைக்கு கொடுக்கப்பட்டது என்ற குறிப்பை இவ்வரிகள் உணர்த்துகின்றனவா என்பது தெரியவில்லை.

1. இப்பரிசு நல்லூர்
2. நிலம் எல்லை
3. வட்டத்துள்ள-
4. தெலாம் எங்களு-
5. ர் ஸ்ரீமூலஸ்தாநத்-
6. து ஆடியருளுகி-
7. ன்ற பரமஸ்வாமிக்-
8. கு திருவமிர்து
9. செய்தளுவதற்
10. கு முன் உச்சியம்-
11. போது வேதமு-
12. ம் ஸதுஸ்த்யமும்
13. வல்லப்3ராஹ்மணர்
14. களுக்கு ஊட்டுவ
15. தாக செய்து கு-
16. டுத்தோம் ஸ-
17. பை4யோம் இப்பரிசு -
18. நல்லூர் நிலம்
19. உழுவா-
20. ரைச் சி-
21. ற்றிறை-
22. சோறு
23. மாட்டு
24. வெட்டி
25. அமஞ்-
26. சி சேவ-
27. கம் உட்-
28. பட மற்-
29. றெப்பே-
30. பர்ப்ப-
31. ட்டது
32. ம் காட்-
33. டப் பெறா-
34. தோமா-

35. கவும் இ-
36. நிலத்-
37. துக்கு
38. ம் வந்-
39. த இறை
40. மடக்கும்
41. ...
42. முந்திரி
43. கை நி-
44. லத் தா-
45. லே கைகொள்வ-
46. தாகவும் ஊர்தரம்
47. அழிந்திடிலும்
48. [இசைக்க] முந்திரிகை
49. நிலத்தாலே இறை
50. கொள்வதாகவும் இ-
51. ப்பரிசு நல்லூர் நி-
52. லத்துக்கு மடக்கு-
53. ப்படி முந்திரிகை
54. நிலத்துக்கு வந்-
55. த இறை இறுத்து
56. மிக்கபே$_4$ாகங்கொ-
57. ண்டு ஸ்ரீமூலஸ்தா-
58. னத் தாடியருளுகி (*முற்றுப் பெறவில்லை*)

**கீழ்ப்பகுதி கல்வெட்டு**

1. ன்
2. ங்கொண்ட சோழ
3. இது சாலை கிடார

# 14:3

*இடம் : அதே தூணில் மூன்றாவது பக்கம் உள்ள கல்வெட்டு.*

*காலம் : முதல் இராசேந்திரசோழன் (1012-44).*

*செய்தி : கல்வெட்டில் ஆண்டு எண் சிதைந்து விட்டது. கல் வெட்டின் கீழ்ப்பகுதியில் வேறொரு கல்வெட்டின் வரிகள் உள்ளன. தெளிவாக இல்லை. மூன்று மன்றாடிகள் மூன்று விளக்குகளுக்காகக் கொடுத்த ஆடுகள் பற்றியும் சபை விளக்கெரிக்க ஒப்புக்கொண்டது பற்றியும் குறிப் பிடுகிறது.*

1 - 19. ('ஸ்வஸ்தி ஸ்ரீ திருமன்னிவளர' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தி)
20. மாப்பெரு தண்டாற்கொண்டகோ -
21. ப்பரகேசரி பன்மரான ஸ்ரீரா-
22. ஜேந்திர சோழதேவற்கு யாண்டு
23. ....ஆவது ஜயங்கொண்ட
24. சோழமண்டலத்து ஒய்மா நா-

25. ட்டு ப்$_3$ரஹ்மதேச முஞ்ஞூராகிய
26. ஸ்ரீபண்டித சோழச்சருப்பே-
27. திமங்கலத்து ஸ்ரீமூலஸ்தாந
28. த்து பரமஸ்வாமிக்கு இவ்வூர் மந்றா-
29. டி புத்தநாகிய நிறை கோயி-
30. ற் பெருமந்றாடி வைத்த திருன-
31. ந்தா விளக்கு ½ நாலாடு 45-
32. ம் மந்றாடி நம்பூதியாகிய [பூதன்]
33. யேயக மந்றாடி வைத்த திருந
34. ந்தாவிளக்கு 1-நாலாடு 90ம்
35. இவ்வூர் மந்றாடி கு[ன] ...த
36. மிழநாகிய இருபத்[தென்]வ மந்றா
37. டி வைத்த திருநந்தா விளக்கு ½ நா
38. லாடு 45ம் ஸ்ரீபந்மாஹே
39. ச்$_0$வரர் இர...வைத்தி திருநந்தா
40. விளக்கு 1-நாலாடு 90ம் ஆ-
41. க விளக்கு மூன்றுக்கு சா-
42. வா மூவாப் பேராடாகக் கொ
43. ண்டு சந்த்$_3$ராதித்தவர் வி-
44. ளக்கெரிக்கக் கடவதா-
45. நோம் [ஸபை$_4$]ப் பெருமக்
46. களோம் இது பந்மா
47. ஹேச்$_0$.வரரக்ஷை

## கீழுள்ள கல்வெட்டு

1. நிருத்துவ சித்தந் பூத
2. ந் இந்த
3-6. …
7. மூர்தரம் இப்பரிசு கொண்டு
8. சந்திராத்தரளவும் இது
9. சாலை கிடாரங்கொண்ட
10. …
11. …

## 14:4

இடம் : அதே தூணின் நான்காவது பக்கம்.

காலம் : கி.பி. 11ஆம் நூற்றாண்டு.

செய்தி : கடாரங்கொண்ட சோழன் சாலையில் வேதம் வல்ல பிராமணர்க்கு உணவளிக்க நெய்க்காக ஆடு 90ம் மோருக்காக ஆடு 30ம் கொடுத்த செய்தி சொல்லப்படு கிறது. செய்தியைக் கல்லில் வெட்ட நாடுவகை செய் யும் அதிகாரியின் அனுமதி பெறப்பட்டுள்ளது. சாலைக்கு கலங்கள் இவ்வூர் குயவர்கள் கொடுக்க வேண்டுமென்றும் சொல்லப்பட்டுள்ளது. 37வது வரி யில் 'வோலை' என்ற சொல் தொடர்பில்லாமல் உள் ளது. இச்சொல் கல்லில் கோடிட்டுக் கட்டம் கட்டப்பட்டுள்ளது.

1. இது சாலை கிடார -
2. ங்கொண்ட சோ-
3. ழன் பரமஸ்வா
4. மிகள் உச்சியம்
5. போது அமுது
6. செய்தருளுவதற்கு
7. முன் உத்தமா-
8. க்$_3$ரமாக சாலை கிடா-
9. ரங்கொண்ட சோ-
10. ழ நென்னுந் தி-
11. ருநாமத்தால் சாலை-
12. யில் வேத$_3$மும் ச$_0$து-
13. ஸ்தவமும் வல்ல
14. ப்$_3$ராஹ்மணர்க்கு பே$_4$ா
15. ஜநம் பண்ணி நி
16. சதம் உழக்கு நெய்கு
17. வைத்த ஆடு தொ-
18. ண்ணூறும் மோ
19. ர் 25
20. நாழிக்கு
21. வைத்
22. த ஆடு
23. முப்ப-
24. தும் ஆ-
25. க ஆடு
26. நூற்றி-
27. ருபது
28. இவை
29. சாவாமூ-
30. வாப்பே-
31. ராடா-
32. க இப்ப-

33. ரிசு ச

34. ந்த்ராதி

35. த்தவற்

36. செல்வ

37. வோலை

38. தாக

39. வைத்-

40. தோம்

41. ஸபை$_4$யோம் இ-

42. ப்படி கல்வெட்ட

43. வேண்டு மென்று சொ

44. ல்ல இப்படி இந்நாடு

45. வகை செய்கின்ற

46. சோழ மண்டலத்-

47. து கொருக்கை நித்த

48. விநோத வளநா-

49. ட்டுபாம்புணிக் கூ-

50. ற்றத்து அரசூர் நா-

51. ட்டியத்தாந் சோ-

52. லையாதனுக்கு ஸ-

53. பை$_4$யார் சொல்ல இ-

54. ப்படிக்கல்வெட்டிந-

55. து இச்சாலை கிடார-

56. ங் கொண்ட சோழ-

57. னுக்கு இவ்வூர் குசஞ்

58. செய்வாரேய் சமுந்த்ரா

59. தித்தவர் வேண்டு

60. ங்கல மிடுவாராக.

---

# 15. எய்தனூர் முதற்குலோத்துங்கன் கல்வெட்டு

***ச. கிருஷ்ணமூர்த்தி, சிதம்பரம்.***

இடம் : விழுப்புரம் மாவட்டம், பண்ணுருட்டி வட்டம், எய்தனூர் ஆதிபுரீசுவரர் கோயில் கருவறைத் தென்புறச் சுவர்.
காலம் : சோழன் முதற்குலோத்துங்கன் யா.28 - 29 (கி.பி. 1098-99).
செய்தி : கோயிலில் 1098-99 வரை உள்ள விளக்குக் கொடைகள், அணிகலன்கள் முதலியவற்றின் விவரம் தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளது.

1. ஸ்வஸ்திஸ்ரீ புகழ் மாது விளங்க ஜெய மாது விரும்ப நிலமக
2. ள் நிலவ மலைமகள் புணர உரிமையிற் சிறந்த மணிமுடி சூடி
3. வில்லவர்குலைதர மீநவர் நிலைகெட விக்கலன் சி [ங்கனன்]மேல்
4. கடல் பாயத் திக்கனைத்தும் தம்சக்ரம் நடாத்தி வீரஸிம்மாஸ
5. நத்துப் புவநமுழுதுடையாளொடும் வீற்றிருந்தருளிய கோவி-
6. ராஜகேஸரி பந்மரான சக்கரவத்திகள் ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவர்க்கு
7. யாண்டு 28 ஆவது கங்கைகொண்ட சோழ வளநாட்டுப்பட்
8. டான் பாக்கைநாட்டு சோழகுலவல்லி நல்லூர் திருமாந்துறை ஆண்-
9. டார் கோயில் சிவபிராமணன் இத்தேவர்க்கு அநாதியாக உபை-
10. யங் கொண்டெரித்து வருகிற திருநுந்தாவிளக்கு ஒன்றும் அநாதியாக ஆட்டால்
11. எரித்துவருகிற திருநுந்த[ா]விளக்கொன்றும் யாண்டு 28 ஆவதுக்கு முன் பாக இத்தேவர்
12. திருவாபரணம் தகட்டாரமும் நாணும் தாலியும் உட்படவும் முன்புள்ள வெண்கல் நிறை
13. நாற்பத்து நாற்பலத்தாலும் செம்பு தரா நூற்று பலத்தாலும் பொன்னாய் வந்த பொன் அறுகழ-
14. ஞ்சேமுக்கால் இதில் கொண்டார் சிவ பிராமணந் கோசிகந் திருவேகம்பந் இஷபாகநநா-
15. சோழ சிந்தாமணி ப்ரம்மாராயந் கொண்ட பொந் இருகழஞ்சே ஒன்பது மஞ்சாடியும் ஒரு மாவும் திரு வேகம்ப
16. சிறியான் கொண்ட பொந் முக்கால் மஞ்சாடியும் ஒரு மாவரையும் அந்தரி பட்டந் கொண்ட பொ-
17. ன் நாலு மஞ்சாடியும் திருவேகம்பந் பிச்சதேவந் கொண்ட பொன் கழஞ்சே காலே ஒரு மாவரையும் திருத்-

18. தண்டீச்ர0வரமுடையான் கொண்ட பொந் நாலுமஞ்சாடியும் குன்றியும் பூஷதப்பன் கொண்ட பொ-

19. ன் கழஞ்சரையே னாலு மஞ்சாடியும் ஏழு மாவும் ஆக பொன் அறுக ழஞ்சே முக்காலும் உபையமாக

20. கொண்டு எரிக்கடவோமான திரங்கா விளக்கு ஒன்றும் இவ்வொன்றும் எரிக்கக்கடவோமானோம் இவ

21. .... தேவர்க்கு தேவர்க்கு மேயகிழன் திருவயிந்திரன் செனன் வைய்த்த திரு நந்தா விளக்கொன்று

## பக்கத்தில் வெட்டப்பட்டது

22. ஒன்றிலும் சோழ சிந்தாமணி பிரம்மாராயந் கைக் கொண்-
23. ட திருவிளக்கரையும் திருவேகம்பன் சிறியான் கொண்ட விளக்கரை
24. யே காலும் திருவேகம்பன் பிச்சதேவந் கொண்ட விளக்கு அ-
25. ரைக்காலும் ஆக விளக்கு ஒன்றும் இத்திருவயிந்திரன் சேநந்
26. வடதளி பிரம்ம தேவற்கு வைத்த ஸந்தி விளக்கு ஒன்றும் இதை எரிக்க க
27. டவார் சோழசின்தாமணி பிரம்மமாராயந் மேற்படியாந் இத்
28. தேவர்க்கு வைத்த ஸந்தி விளக்கு ஒன்று இது உபையமாக எரிக்-
29. ககடவார் திருவேகம்ப பிச்ச அரையும் திருவேகம்பந் சிறி-
30. யான் அரையும் எரிக்க கடவார் எய்தநூர் மெய்கிழாந் திரு
31. வயிந்திரன் வீரையந் திருமாந்துறையுடையார்க்கு வைய்த்த
32. ஸந்தி விளக்கு ஒன்றே ஆறு மாமுக்காணியும் தகையார்க்கு மே-
33. ற்படியாந் வையத்த ஸந்தி விளக்கு ஒந்றும் இவை உபை-
34. யமாக எரிக்ககடவார் சோழ சிந்தாமணி பிரம்மமாராயர் இத்திரு-
35. யித்திரன் வீரையந் கணபதியார்க்கு வைத்த ஸந்தி விளக்கு ஒ-
36. ன்றும் இவ்வொன்றுமாக எரிக்கடைவாந்தும் ஸ்பவத்தைய்யந் இ-
37. ய....விளக்குகள் சந்திராதித்தவற் எரிக்க கடவார் சிவமாஹேச்ர0வ
38. ரராகைஷ
39. இத்தேவர்க்கு யாண்டு 29 ஆவது எய்தயூர் மெ-
40. ய் கிழான் திரபாதிரன் வீரயந் பக்கல் காசு கொண்டு
41. உபயமாக சிவ பிராமணன் திருவேகம்பந் மணிஞான பட்
42. டநே ஸந்திராதித்தவல் எரிக்க கடவ ஸந்தி விளக்கு ஒன்று.

# 16. பெருவளையம் கல்வெட்டுகள்

கி குமார், சென்னை.

## 16:1

இடம் : *வேலூர் மாவட்டம், அரக்கோணம் வட்டம், பெருவளையம் கிராமத்தில் ஊருக்குத் தெற்குப் பகுதியில் இடிந்த நிலையில் காணப்படும் சிவன் கோயிலின் கருவறையின் பின்பகுதியில் உள்ள முப்பட்டகக் குமுதத்திலும், உபானத்திலும்.*

காலம் : *விக்கிரம சோழன், யா.4 (கி.பி. 1122).*

செய்தி : *பெருவள்ளியத்து திருப்பனங்காடுடைய மகாதேவர் கோயிலில் திருநந்தாவிளக்கெரிக்க இவ்வூர் சிவபிராமணர்கள் வசம் இவ்வூரைச் சேர்ந்த எட்டுக்கூர்சீராமபட்ட அத்தி சித்தர் என்பார் 15 காசுகளை தானமாக அளித்தது பற்றியது.*

1. ஸ்வஸ்திஸ்ரீ பூமாது புணரப் புவிமாது வளர நாமாது விளங்க ஜயமாது விரும்பத் தன்னிரு பதுமலர் மன்னவர்சூட மன்னிய உரிமையில் மணிமுடிச்சூடிச் செங்கோல் சென்று திசைதொறும் வளர்ப்ப வெங்கலிநீக்கி மெய்யறந் தழைப்பக் கலிங்கம்விரியக் கடல்மலையளவும் வலங்கொள்ளாழி வரையாழி நடாத்தி இருசுடரளவு-
2. ம் ஒருகுடை நிழற்கீழ் முக்கோக்கிழானடிகளோடும் வீரசிம்மாசனத்து வீற்றிருந்தருளிய கோப்பரகேசரி வன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீவிக்கிரம சோழ தேவர்க்கு யாண்டு நாலாவது ஜயங்கொண்ட சோழ மண்டலத்துப் படுவூர்க்கோட்டத்து வள்ளியநாட்டு பெருவள்ளியத்து உடையார் திருப்பனங்காடுடைய மஹாதேவர் கோயிலிற் சிவபிரா-
3. மணன் பாக்கவர் திருப்பனங்காடு பட்டனும் அகஸ்தியன் மாதவ பட்டனும் காசியப நந்கல்லியான் பட்டனும் காசியபன் திருவேங்கம்பமுடையான் பட்டனும் உள்ளிட்ட இவ்வனைவோம் இவ்வூரில் எட்டுக்கூர்ச் சீராம பட்ட அத்திசித்தர் பக்கல் நாங்களித் திருப்பனங்காடுடையார் கோயிலிலே ஒரு திருநந்தாவிளக்கு எரிக்கக் கடவோமாக கொண்ட அ-
4. ந்றாடு நற்காசு பதிந்அஞ்சு இக்காசு பதிந்அஞ்சுக்கும் பொலிசைக்குச் செலவாக இத்திருநந்தாவிளக்கு ஒன்றும் எரிக்கைக்கு இக்கொயிலில் எங்களொபாதியால் வந்த காணியை மான்யமாவதாக சம்மதித்து இத்திருநந்தாவிளக்கு ஒன்றும் சந்திராதித்தவரை எரிக்கக்கடவோமாக சம்மதித்து இக்காசு பதிஅ-
5. ஞ்சும் கைக்கொண்டோம் இவ்வனைவோம் இப்படிக்கு சிவபிராமணர் பணிக்க எழுதினேன் வன்னாயக ஆசாரியனேன் இவைய் என் எழுத்து

இத்தன்மம் [நடத்தென் னருவ] ரகைக்ஷ இப்படிக்கு திருப்பனங்காடு பட்ட நேன் இவை எந் எழுத்து இப்படிக்கு மாதவ பட்ட-

6. நேந் இவை எந் எழுத்து இப்படிக்கு காசியபன் மாநென் இவை எந் எழுத்து இப்படிக்கு திருவேகம்ப முடையான் பட்டனேன் இவை எந் எழுத்து.

# 16:2.

*இடம் : அதே சிவன் கோயிலின் கருவறையின் பின்பகுதியின் உள்ள சுவரின் தென்மேற்கு பகுதியில் செதுக்கப்பட்டுள்ளது.*

*காலம் : விஜயநகர மன்னர் அரியணஉடையார், காளயுத்தி வருஷம் (கி.பி 1378).*

*செய்தி : சிவன் கோயிலுக்கு 20 காசு தானமாக அளித்தது பற்றி கூறுகிறது.*

1. ஸ்வஸ்திஸ்ரீ இராயன் அரியன
2. உடையார்க்கு செல்லா நின்ற
3. காளயுத்தி வருஷத்து படு-
4. வூர்க் கோட்டத்து பெருவெள்ளி-
5. யத்து திருப்பனங்காடுடைய
6. நாயினார் திருக்கொயிலில்
7. நாயனார் [எழுந்தரு]
8. ளப்பண்ணி குளத்தூர் ... கா-
9. முழான் பாண்டியன் ஆ-
10. டி மாசத்து பூருவ பக்ஷத்து
11. வெள்ளிக்கிழமையமைய
12. தசமியும் பெற்ற அத்தத்து
13. விட்டருளி 20 இக்காசு
14. இருபதும் சந்திராதித்த
15. வரை செல்லக் கடவதாகவும் ....லம் இக்கல்வெட்டிக் குடுத்தேன்.
16. காமுழான் பாண்டியன்
17. எழுத்து.

# 17. நத்தம் மூலக்கல்வெட்டுகளும் நகல் கல்வெட்டுகளும் - ஓர் ஒப்பாய்வு.

**இல. தியாகராஜன், அரியலூர்.**

திருச்சி மாவட்டம், லால்குடி வட்டத்தில் நத்தம் எனும் வரலாற்றுப் பழமை மிக்க ஊர் அரியலூர்-திருச்சிப் பெருவழியில் உள்ள புள்ளம்பாடியிலிருந்து வெங்கடாசலபுரம் வழியாக 7 கி.மீ. தூரத்தில் உள்ளது. இங்குள்ள ஆதிமூலப் பெருமாள் கோவில் கி.பி.1216-ல் மூன்றாம் குலோத்துங்க சோழர் காலத்தில் புதுப்பித்துக் கட்டப்பட்டது. சிதைந்த நிலையில் உள்ள இக்கோயிலைப் புதுப்பித்துச் சீரமைக்கும் திருப்பணி தற்போது நடந்து வருகிறது. இதற்காகக் கோயிலைப் பிரித்த போது உள்ளே முதலாம் ராஜராஜன் காலத்துப் பழைய கோயிலின் அடிப் பகுதி கல்வெட்டுடன் இருப்பது தெரியவந்தது.[1]

பழைய கோயிலும் அதைச் சுற்றி அமைக்கப்பட்ட புதிய கோவிலும் ஒருசேர அமையப் பெற்றுள்ள ஆதிமூலப் பெருமாள் கோவிலின் வரலாற்றுச் சிறப்பு மற்றும் கல்வெட்டுகளை ஆய்வு செய்ததில் சோழரின் வரலாற்று உணர்வும் அவர்கள் காலத்தில் கோயில் கட்டுமானப் பணியில் பின்பற்றப்பட்ட புதிய பாணியையும் நாம் அறிய முடிகிறது.

தமிழகக் கோவில் கட்டுமானக் கலை வரலாற்றில் சோழர் காலம் பொற்காலமாகும். சோழ மன்னர்கள் பல கோயில்களைப் புதிதாகக் கட்டியும், பல பழைய செங்கற்கோயில்களைப் புதுப்பித்துக் கற்றளிகளாகவும் கட்டியுள்ளனர். இவ்வாறு புதிதாகக் கட்டப் பெற்ற கோயில்களில் பெரும்பாலும் அதன் அடிப்பகுதி (அதிட்டானப் பகுதி) மட்டும் கருங்கல்லாலும், அதற்கு மேலிருந்து ஸ்தூபி வரை உள்ள கட்டடப் பகுதிகள் செங்கல்லாலும் இருந்துள்ளன. எனவே அவை சிதிலமாகிப் போனதால் முழுவதுமாக புதுக்கிக் கருங்கல்லால் கட்டியுள்ளனர். இவ்வாறு கட்டும்போது அக்கோயிலின் பழைய கற்களைக் கொண்ட கட்டிடப் பகுதிகளை அகற்றிவிட்டு புதிதாகக் கட்டினர். மேலும் பழைய கட்டிடப் பகுதியில் எழுதியிருந்த கல்வெட்டுகளையும் அழித்துவிடாமல் அவற்றை அப்படியே படியெடுத்து எழுதி வைத்துக் கொண்டு அதனை மீண்டும் புதிதாகக் கட்டிய கோவிலில் எழுதியுள்ளனர். பழைய கற்களை (கல்வெட்டுடன் இருந்தவை) புதிய கோவிலில் பயன்படுத்தாமல் தவிர்த்து விட்டனர்.

### பழைய கல்வெட்டைப் படியெடுத்த முறை

1216இல் இக்கோவிலின் ஸ்ரீ விமானம், மண்டபம் ஆகியவற்றை பாற்பனங்கிழான் செந்தாமரைக் கண்ணனான மழவராயன் என்பவர் புதுப்பித்துக் கட்டினார். இதற்குக் காரணம் முன்பிருந்த கோயில் அதிஷ்டானத்துக்கு மேல் செங்கல்லால் (இஷ்டிகை) இருந்ததால் இது ஜீரணித்து விட்டது இதனால் ஸ்தான சங்கடமுண்டாகியதும் (புழங்குவதற்கு வசதியின்றி சிறியதாக இருந்தது) ஆகும். எனவே இதனைப் பிரித்து எடுத்துப் பெரிதுபடுத்திச் செய்யவேண்டும் என மன்னர் ஆணையிட்டார். கோவில் பூஜை நிர்வாகம் ஆகியவற்றைச் செய்கின்ற பட்டர் ஆச்சாரியம் செய்வார் மற்றும் சபையார் ஆகியோரின் ஆணைப் படியும் இக்கோவிலின் புதிய கட்டுமானப் பணி தொடங்கப்பட்டது. அப்படித் தொடங்குவதற்கு முன்பு இக்கோவிலின் ஜகதிப் படையில் முன்பு இருந்த கல்வெட்டுக்களை மூன்று பிராமணர்கள் கொண்ட சமுதாயக் கூட்டம் என்ற குழுவினர் ஊர் கணக்கு அதிகாரி ஒருவரின் கண்காணிப்பின் கீழ் படியெடுத்து புதிய கோவில் சுவரில் மீண்டும் கல்வெட்டாக வெட்ட வேண்டும் என்று சபையார் உத்தரவிட்டனர்.



படம் 17:1 முதலாம் இராசராசன் காலத்துக் கோயிலின் பீடமும்,
முன்றாம் குலேத்துங்கன் காலத்து கோயிலின் பீடமும்.

அப்படிப் பழைய கல்வெட்டைப் படியெடுத்து எழுதுகின்றபோது அவர்களுக்குச் சில இடர்பாடுகள் நேர்ந்தன என்பதையும் கல்வெட்டில் தெரிவித்துள்ளனர். அதாவது அவர்களுக்குப் பழைய கல்வெட்டின் மெய்க்கீர்த்தி உள்பட சில பகுதிகள் தெரியவில்லை என்றும் சில இடங்களில் கல்பொளிவு உள்ளது என்றும், தங்களுக்கு தெரிந்தவரை அப்படியே படியெடுத்து பழைய வரி பாடப்படியே எழுதியுள்ளோம் என்றும் குறிப்பிட்டுள்ளனர். கல்வெட்டில் தெரியாத பகுதி எது என்பதைச் சுட்டிக்காட்ட ஏழு அடி தூரம் சுவரில் எதுவும் எழுதாமல் வெறுமையாய் இடம் விட்டுக் காட்டியுள்ளனர். இது அவர்களின் நேர்மை உணர்வு, ஆவணங்களைக் காப்பதில் காட்டிய அக்கறை முதலிய பண்புகளை நமக்குக் காட்டுவதாக உள்ளது.

படியெடுத்து எழுதப்பட்ட கல்வெட்டு தரும் செய்தியின் சாரம் பின்வருமாறு:

ஸ்ரீராஜராஜதேவரின் இரண்டாமாண்டில் ராஜேந்திரசிங்க வளநாட்டுப் பொய்கை நாட்டைச் சேர்ந்த பிரமதேசம் ஸ்ரீமதுராந்தகச் சதுர்வேதி மங்கலத்து சபையார் (35 பிராமணர்கள் பெயர் குறிக்கப்பட்டுள்ளது) குலதீபசிகாமணி வளநாட்டு பனையூர் நாட்டுப்பிரமதேயம் உத்தம சோழமங்கலத்து அதிகாரி புனவாயிலுடையார் காஸ்யபன் சாத்தன் மாதவன் பஞ்சவன்மாராயர்க்கு சபைப்பொதுவாக இருந்த ஒன்றே காலே அரைமாநிலைத்தை 25 காசுக்கு விற்றுக் கொடுத்தனர். இந்நிலத்துக்குச் சில வரிகளை வசூலிப்பதில்லை எனவும் உறுதியளித்தனர். இந்நில விற்பனை விபரத்தை ஊர் மத்யஸ்தன் வெண்காடனான உத்தமப்பிரியன் எழுதியுள்ளார். பல பிராமணர்கள் கையொப்பம் இட்டுள்ளனர். தான் விலைக்கு வாங்கிய நிலத்தைப் பஞ்சவன் மாராயன் இவ்வூர் திருவிசலூர் பள்ளிகொண்டாழ்வாரின் திருமஞ்சனம், போனக அமுது மற்றும் அமாவாசி உற்சவம் ஆகியவற்றுக்குக் கொடையாகக் கொடுத்தார்.

## இப்போதைய பணியும் மூலக் கல்வெட்டுகளும்

இப்படி கி.பி. 1216-இல் புதுக்கிக் கட்டப்பட்ட கோவிலை இப்போது நத்தம் ஊர் மக்கள், டால்மியா சிமெண்ட் நிறுவனம், அறநிலையத்துறை ஆகியோர் இணைந்து திருப்பணி செய்ய ஏற்பாடு செய்துள்ளனர். புதிய கோவில் அமைக்கும் பணியை நாரணமங்கலம் ஸ்தபதி ராஜகோபால் பொறுப்பேற்று செய்து வருகிறார்.

அத்திருப்பணிக்காகக் கோவில் கட்டிடக் கற்கள் முழுவதையும் பிரித்தபோது மூலவரைச் சுற்றி அமைந்திருந்த பழைய கோயிலின் கருங்கல் பீடப்பகுதி கல்வெட்டுகளுடன் அப்படியே இருப்பது தெரிய வந்தது. அப்பழைய கோவிலின் அதிட்டானப் பகுதியை அகற்றிவிடா

மல் அதை அப்படியே வைத்து அதைச் சுற்றிலும் 5.9 அடி தூரம் அகலம் விட்டு புதிய கோயிலைக் கட்டி இடைப்பட்ட பகுதியை மணல், கல் ஆகியவை கொண்டு நிரப்பியுள்ளனர். இந்தப் பழைய கோவிலின் பீடத்திலிருந்து கி.பி. 993, 1072ஆம் ஆண்டுகளில் எழுதப் பெற்ற முதலாம் இராஜராஜன், முதலாம் குலோத்துங்கன் ஆகியோரின் கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. இந்தச் சோழர் கல்வெட்டுகளின் சில பகுதிகளே 1216இல் படியெடுத்து எழுதப்பட்டவை.

### மூலக் கல்வெட்டுகள் தரும் செய்தி

பழைய கோவிலில் இருந்த மூலக்கல்வெட்டுகள் தருகின்ற செய்திகளின் சாரம் பின்வருமாறு:

பழைய கோவிலின் மேற்குப்பக்க முப்பட்டைக் குமுதப் பகுதியில் முதலாம் இராஜராஜனின் எட்டாம் ஆண்டுக் கல்வெட்டு எழுதப்பட்டுள்ளது. இது 'ஸ்வஸ்தி ஸ்ரீ கோவி ராஜராஜ கேசரி பன்மர்க்கு யாண்டு 8-வது' என்று தொடங்குகிறது. இது வடகரை பிரம்மதேயம் தந்திபன்ம மங்கலத்து யாளுங்கணத்தார் (சபையார்) பற்றிக் குறிப்பிடுகிறது. ஆனால் இக்கல்வெட்டின் பிற பகுதிகள் தேய்ந்து முற்றிலும் அழிந்து விட்டதால் முழுச் செய்தியும் நமக்குக் கிடைக்கவில்லை.

இராஜராஜன் கல்வெட்டின் கீழே உள்ள ஜகதிப் பகுதியின் மேற்கு, தெற்குப் பகுதிகளில் ஏழுவரிகள் கொண்ட முதலாம் குலோத்துங்கனின் இரண்டாம் ஆண்டு கல்வெட்டு (கி.பி 1072) எழுதப்பட்டுள்ளது. இதில் இம்மன்னரின் தொடக்க காலக் கல்வெட்டுகளில் பயன்படுத்தப்பட்ட 'திருமன்னி விளங்கும்' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியும் ராஜகேசரிபன்மரான உடையார் ஸ்ரீராஜேந்த்ர சோழதேவர் என்ற பட்டப் பெயரும் உள்ளன. இக்கல்வெட்டில் ஒரு நிலக் கொடை பற்றிய செய்தி கிடைக்கிறது.

இதிலிருந்து பழைய கோவில் கட்டிடம் முதலாம் இராஜராஜன் காலத்தைச் சேர்ந்தது (கி.பி 993) என்றும் இக்கோவில் வடகரை பிரம்மதேயம் தந்திவர்ம மங்கலத்தைச் சேர்ந்த ஊரின் ஒரு பகுதியாக இருந்தது என்றும் அறிகிறோம்.

### ஒப்பீடு

இப்போது கிடைத்துள்ள பழைய கல்வெட்டுகளையும் (மூலக்கல்வெட்டுகள்) அதனை கி.பி.1216இல் படித்து படியெடுத்து மீண்டும் எழுதிய கல்வெட்டையும் (நகல்) இணைத்து நாம் ஒப்பிட்டுப் பார்க்க முடிகிறது. அப்படி ஒப்பிடுகின்றபோது அவர்கள் படிக்கத் தெரியாமல் விட்ட மெய்க்கீர்த்திப் பகுதி முதலாம் குலோத்துங்கனுடையது எனத் தெரியவருகிறது. மேலும் இராஜராஜன் கல்வெட்டையும், குலோத்துங்

கன் கல்வெட்டையும் ஒன்று எனக்கருதி அவர்கள் இணைத்துப் படித்து எழுதியுள்ளனர் எனவும் அறியமுடிகிறது. மேலே உள்ள மன்னன் பெயரையும் கீழே உள்ள குலோத்துங்கனின் கல்வெட்டில் இருந்த ஆட்சியாண்டையும் ஒன்றாகச் சேர்த்துப் படித்துள்ளனர். இதனை மற்றொரு செய்தி மூலம் உறுதிப்படுத்தலாம். வளநாடு என்ற அமைப்பை கி.பி. 1001ல் முதலாம் ராஜராஜன் உருவாக்கினார் என்பதை அவரின் கல்வெட்டுகளும் வளநாடு பற்றிய ஆய்வுகளும் குறிப்பிடுகின்றன. ஆனால் இவ்வளநாடு இங்கே இவருடைய இரண்டாம் ஆண்டில் (கி. பி. 987) குறிக்கப்பட்டுள்ளது. ஆனால் ராஜராஜனின் மூலக் கல்வெட்டில் வளநாட்டுப் பெயர் எதுவும் குறிப்பிடப்படவில்லை. மாறாக குலோத்துங்கனின் கல்வெட்டில் வளநாட்டுப் பெயர் குறிக்கப்படுகிறது. க்ஷத்ரியசிகாமணி என்ற சொல்லை அவர்கள் குலதீபசிகாமணி என படித்துள்ளனர். மேலும் பழைய கல்வெட்டில் கிரமவித்தன், பட்டன், என எழுதியுள்ளனர். பிற்காலத்தில் கிர, ப ஆகிய சில எழுத்துக்களுக்கு கிரந்த எழுத்தைப் பயன்படுத்தி எழுதியுள்ளனர். அதேபோல் நிலங்களின் அளவுகள் குறியீடுகளாகப் பழைய கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் பின்னால் அதற்குச் சரியான அளவை சொல்லாக எழுதி உள்ளனர்.

மேலும் இவர்கள் கல்பொளிவு எனக் கருதிய இடத்தில் உள்ள கல்வெட்டு வாசகத்தையும் நம்மால் படிக்க முடிகிறது. கல்பொளிவு உள்ள பகுதிகளில் உள்ள கல்வெட்டு சுண்ணாம்புக்கல்லால் ஆன வெள்ளைக் கல்லில் எழுதப்பட்டுள்ளதால் எழுத்துகள் சிதைந்தன போல் காணப்படுகிறது. இருப்பினும் அவற்றை நல்ல வெயிலில் கூர்ந்து நோக்கி வெறும் கண்ணால் படிக்க முடிகிறது. ஆக மூலக் கல்வெட்டுகளின் பாடத்துக்கும் நகல் கல்வெட்டுப்பாடங்களுக்கும் இடையே உள்ள வேறுபாடுகளுக்கு இடையில் ஓரிருநூற்றாண்டுக்காலத்தில் ஏற்பட்ட எழுத்து வளர்ச்சி ஒருபுறமும், பெயர்த்து எழுதியவர்களின் சில கவனக் குறைபாடுகள் இன்னொரு புறமும் காரணமாக அமைந்தன என்று கொள்ள வேண்டும். நகல் கல்வெட்டுகளை வரலாற்றாய்வுக்குப் பயன் படுத்துவதிலும் எச்சரிகையாக இருக்க வேண்டும் என்பதையும் இங்கு பாடமாகக் கொள்ள வேண்டும்.

## மூலக்கல்வெட்டுகள்

## 17:1

இடம் : ஆதிமூலப்பெருமாள் பழைய உட்புறக் கோயில் மேற்குச்சுவர் முப்பட்டைக் குமுதப் பகுதி.

காலம் : முதலாம் இராஜராஜன், யா.8 (கி.பி.993).

1. [ஸ்வஸ்திஸ்ரீ] கோவிராஜராஜகேசரி பன்மர்க்கு யாண்டு 8 ஆவது இதே வற்கு இவ்வாண்டு வடகரை ப்3ரஹ்மதேயம் தந்திபந்ம மங்கலத்து யாளுங்கணத்தாருள்...*

* இக்கல்வெட்டின் மீதிப்பகுதி தேய்ந்து அழிந்து விட்டது.

# 17:2

இடம் : ஆதிமூலப்பெருமாள் பழைய உட்புறக்கோயில் மேற்கு, தெற்குச் சுவர் ஜகதி, பீடப்பகுதி

காலம் : முதலாம் குலோத்துங்க சோழன், யா.2 (கி.பி.1072).

1. ஸ்வஸ்திஸ்ரீ திருமந்நி விளங்கும் இருகுவடனையதன் தோளும் வாளுமே துணையெநக் கேழலர் வஞ்சறை கடந்த வயிராகரத்துக் குஞ்சரக் குழாம் பல வாரி பஞ்சல சக்கரக் கோட்டத்துத் தாரா வரைசறை திக்கு நிகழத் திறைகொண்டருளி அருக்கநுதயத் தாசையிலிருக்கும் கமலமறைய நிலம களறைய முந்நீர் குளித்தவதநால் திருமால் ஆதிகேழலாக யெடுத்து யாதும் சலியா வகை நலமெடுத்து தந்குடை நிழல்கீழிந்புற விருத்தித் திகி ரியும் புலியும் திசைதொறும் நடாத்திப் புகழும்தருமமும் புவிதொறு நிறுத்தி வீரமும் தியாகமும் மாநமும் தருமம் உரிமைச்சுற்றமாகப் பிரியா தத் தலைநிகழ் ஜயமும் தாநும் வீற்றிருந்தருளி குலமணி மகுடம் முறை மையிற் சூடி தந் கழல் தராதிமகுடச் செங்கோல்
2. நாவலம் புவிதொறும் நடாத்திய கோவிராஜகேசரி பன்மரான உடையார் ஸ்ரீராஜேந்த்ரசோழ தேவர்க்கு யாண்டு 2-ஆவது ராஜேந்த்ரசிங்க வள நாட்டு பொய்கை நாட்டு ப்ரஹ்மதேயம் ஸ்ரீமதுராந்தக சருப்பேதிமங்க லத்து ஸபைக்கு ஸமைந்து கண்டேற்று சூர்யதேவ பட்டநும் காஞ்சை பற்பனாப கிரமவித்தநும் காரிகுடி சுவரந் தாமோதரநும் முட்புறத்து எச்சி லைய் கிரமவித்தநும் வங்கிப்புறத்து அத்தோண கிரமவித்தநும் வங்கிபு றத்து பற்பநாப கிரமவித்தநும் சிறு கொட்டையூர் தத்தன் திருநீலகண்ட பட்டநும் சிறுகொட்டையூர் சங்கரந் திருநீலகண்டபட்டநும் இராயூர் மாதவ பட்டநும் பாடகத்துப் பவபூதி கிரமவித்தநும் வங்கிப்புறத்து சோம சற்ம கிரமவி
3. த்தநும் வங்கிப் புறத்து பற்பனாப கிரமவித்தநும் முட்புறத்து உருத்திரபூதி பட்டநும் வங்கிப்புறத்து பஞ்சனெதிவாணபட்டநும் வங்கிப்புறத்து தமடி கிரமவித்தநும் னம்பூர் திருவரங்கதேவ கிரமவித்தநும் கரிப்புறத்து மாதவ கிரமவித்தநும் முட்புறத்து நாகஸ்வாமி பட்டநும் சிறுகொட்டையூர் சங்க ரந் தத்தநும் வங்கிப்புறத்து ஸ்ரீமாதவ கிரமவித்தநும் கந்தோணைய கிரம வித்தநும் வங்கிப்புறத்து திருவொற்றியூர்க் கிரமவித்தநும் நொட்டூர் எச்சகுமாரபட்டநும் துறுமுண்டூர் தம்மடி கிரமவித்தநும் அமத்தநூர்

ஸ்ரீநாராயண கிரமவித்தநும் முட்புறத்து தம்மடிக் கிரமவித்தநும் நொட்டூர் சோலை பிராந் கிரமவித்தநும் வ

4. ங்கிப்புற்தது பற்பனாப கிரமவித்தநும் ...றம தெய காமத்து பெரியநம்பி கிரமவித்தநும் இராயூர் தர்மய பட்டநும் மந்திரத்து கோவிந்தபட்டநும் சிறுகொட்டையூர்த் திரைலோக்கய லோசந்நும் மாடபோசந் இரேவய க்கி ரமவித்தநும் ஆக இவ்வநைவோம் க்ஷத்ரியசிகாமணி வளநாட்டு பநை யூர் நாட்டு ப்ரஹ்மதேயம் உத்தமசோழ மங்கலத்து அதிகாரிகள் புநவாயிலுடையர் காஸ்யபந்ஸாத்தந் மாதவராந பஞ்சவந் ப்ரஹ்மாரா யர்க்கு நாங்கள் கைத்தீட்டு இட்டுக் குடுத்த பரிசாவது இவ்வூர் திருவிச லூர் பள்ளிக் கொண்ட ஆழ்வாற்குத் திங்கள் தோறும் அமாவாஸிநாள் திருமஞ்சனஞ் செய்தருளவும் போ

5. னகவமுது செய்தருளவும் மாஸ உற்சவத்துக்கும் உள்ளிட்டு வேண்டும் நிவந்தங்களுக்கு நாங்கள் இவர்க்கு விற்றுக் கொடுத்த நிலமாவது இவ்வூ ரில் ஸபைப் பொதுவாந நிலம் திரிபுவந மாதேவி வதிக்குக் கிழக்கு சோழ குலசுந்தரி வாக்காலுக்கு வடக்கு இ கண்டத்து 13 ஞ் சதிரத்து நிலம் ¼ 14 ஞ்சதிரத்து வடமேற்கடைய ¼ இங்கே 13ங்கண்ணாற்று 13சதிரத்து நூ¼ ம் 14 சதிரத்து நிலம்¼ இங்கே 7 ங்கண்ணாற்று 13 ஞ் சதிரத்து நிலம் மாக்காணியும் ஆக நிலம் 1¼+ 1/40 இந்நிலம் ஒந்றேகாலே அரைமாவும் முந்பிட்ட தரம் தவிர இவ்வூர் கடைத்தரமாந 11 ஆந்த ரத்தே இறைகொள்ளக் கடவோமாகவும் இந்நிலத்தால் வந்த மடக்கு நிலத் துக்குச் சில்வரியும்

6. வெள்ளாந் வெட்டியும் கொள்ளக் கடவோமல்லாதோமாகவும் இப்பரிசு சந்திராதித்தவல் (தரவலெசாந) நிலத்துக்கு இறைகாவலாக நாங்களிவர் பக்கல் கொண்ட காசு 25 -இக்காசு இருபத்தைஞ்சும் கொண்டு இந்நிவந் தங்கள் செல்கைக்கு இக்கோயிலிலே கல்வெட்டுவிக்கக் கடவாராகவும் இந்நிலத்துக்கு இத்தரமல்லது ஏறத்தரமிடுவோமாகிலும் இறை கொள் வோமாகிலும் சில்வரியும் வெள்ளாந்வெட்டியும் கொள்வோமாகிலும் திருவாணை புவநமுழுதுடை யாராணை எந்று ஸபா விவஸ்தை பண்ணிக் கைத் தீட்டு இட்டுக் குடுத்தோம் அதிகாரிகள் புநவாயிலுடையார் காஸ்ய வந் சாதந் மாதவநாராந பஞ்சவந் ப்ரஹ்மாராயர்க்கு இக்கண்டேற்

7. று ஸர்வ்வ தேவ பட்டநும் வங்கிப்புறத்து ஸர்வதத் ... தத்த ... மாதவ கிரமவித்தநும் இராயூர் தாமயபட்டநும் சிறுகொடையூர் தத்தந் திருநீல கண்டபட்டநும் ஆக இவ்வநைவோம் இவர்கள் பணிக்க எழுதிநேந் இவூர் மத்யஸ்தந் தேவந் வெண்காடநாந உத்தம பிரியநேன் இவை எந்ள முத்து இவை சிறுகொட்டையூர்ச் சங்கரந்திருநீலகண்டந் வங்கிப்புறத்து பற்பநாபக் கிரமவித்தந் எழுத்து நொட்டூர் சோலை ... எழுத்து வங்கிப்பு றத்து பஞ்சநெதி வாணபட்டந் எழுத்து இராயூர் தேவசர்ம ஸோமயாசி யார் மகந்ஸ்ரீமாதவபட்டந் எழுத்து காஞ்சை பற்பநாப கிரமவித்தந் எழுத்து இது ஸ்ரீவைஷ்ணவ [ரக்ஷை].

## 17:3

இடம் : நத்தம் ஆதிமூலப்பெருமாள் கோயில் கருவறைவடக்கு மேற்கு தெற்கு சுவர் பீடம்.

*காலம்* : மூன்றாம் குலோத்துங்கன், 38-*யா*. (*கி.பி*. 1216).

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவநச் சக்கரவத்திகள் மதுரையும் ஈழமுங் கருவூரும் பாண்டியன் முடித்தலையுங் கொண்டு வீராபிஷேகமும் விஜயாபிஷேக மும் பண்ணியருளிய திரிபுவநவீரதேவற்கு யாண்டு 38- வது மார்கழி மாஸத் தொருநாள்ப்பெற ஸ்ரீமதுராந்தகச் சதுர்வேதி மங்கலத்து ஸ்ரீநந்தை எம்பெருமான் ஸ்ரீவிமாநம் அதிஸ்டாநத்துக்கு மேல் ஷ்டிகையாய் ஜீர்ண் ணிக்கயாலும் ஸ்தாந ஸங்கடமுண்டாகையாலும் வாங்கி பெருக்க செய்ய ப்ரஸாதஞ் செய்தருளிந திருமுகமும் பட்டர் ஆச்சாரியஞ் செய்வார்கள் கைய்யோலையும் ஸபையோர் நியோகம் பெறுமுன்பு நின்ற ஸ்ரீவிமா நத்து ஜகதிப்படையில் கல்வெட்டுப் படியெடுத்து செய்த ஜகதிப் படை யில் படிப்படியேக் கல்வெட்ட ஸமுதாயக் கூட்டம் நொட்டூர் பொய்கோயில் நம்பியும் கணற்றுத் தோணய பட்டனும் வங்கிப்புறத்து துாமயப
2. ட்டன் மகந் ஸ்ரீமாத4வ பட்டநும் மாடபோசைச் சங்கு நாராயண பட்டநும் ஊர்க் கணக்கு ப்ரஹ்மப்ரியமனையும் கங்காணியாக படி எடுத்து கல் வெட்டுக என்று ஸபையார் நியோகம் புறப்படுகையில் னாங்கள் படி எடுத்த படிப்படி பழய ஸ்ரீவிமாநத்து ஜகதிப்படை வடமேலை துடங்கி தென் கீழை மூலையறுதியாக மேலில் வரி பாடமே ஸ்ரீமெல்கீர்த்தியுமாய் தெரியாத னவும் கல்பொளிவும் ___ (*7அடி தூரம் எழுதப்படாமல் இடை வெளிவிட்டு காட்டப்பட்டுள்ளது*) ஸ்வஸ்தி ஸ்ரீராஜராஜ பந்மங்கு யாண்டு இரண்டாவது ராஜேந்த்ர சிங்க வளநாட்டுப் பொய்கைய் னாட்டு ப்ரஹ்ம தேசம் ஸ்ரீமதுராந்தகஸதுர்வேதி மங்கலத்து ஸபைய்க்குச் சமைத்து கண் டேற்று ஸர்வ்வ தேவ பட்டநும் காஞ்சைப் பற்பனாப க்ரமவித்தநும் காரிகுடி சாத்தந் தாமோதரநும் முப்புறத்து எசிலேய க்ரமவித்தநும் வங் கிப்புறத்து அத்தோணயக்ரமவித்தநும் (கல்பொளிவு) த்துத பற்மனாப க்ர மவித்தனும்
3. சிறு கொட்டையூர் நக்கன் திருநீலகண்டபட்டனும் சிறுகொட்டையூர் சங்க ரன் திருநீலகண்டபட்டனும் இராயூர் மாதவபட்டனும் பாடகத்துப் பவமுத் தி க்ரமவித்தனும் வங்கிப்புறத்து வாமன க்ரமவித்தனும் வங்கிப் புறத்து பற்பநாப க்ரமவித்தனும் முட்புறத்து உருத்ர மூத்திபட்டனும் பஞ்சநெதி வாணபட்டனும் வங்கிப் புறத்து நாகஸ்வாமி க்ரமவித்தநும் சிறுகொட்டை யூர் சங்கரந் தத்தனும் வங்கிப்புறத்து (கல்பொளிவு) க்ரமவித்தனும் அத்தோணயக்ரமவித்தனும் வங்கிப்புறத்து திருவொற்றியூர் க்ரமவித்த னும் நொட்டூர் எஜ்நகுமாரபட்டனும் துறுமுண்டூர் தம்மடி க்ரமவித்தனும்

அமத்தந்நூர்...யண க்ரமவித்தனும் முப்புறத்து தம்மடி க்ரமவித்தனும் இரா யூர் தர்மயபட்டனும் முப்புறத்து கோவின்த பட்டனும் சிறு கொட்டையூர் தத்த குலோக்ரவித்தனும் மாடபோசன் ரேவக்ரமவித்தனும் நொட்டூ

4. ர் சோலைப்பிராந் பட்டனும் வங்கிப்புறத்து பற்பனாப க்ரமவித்தனும் (கல்பொளிவு) பூத்த ஆகவ க்ரமவித்தனு (ம்) தேசாமங்கலத்து பெரிய நம்ம க்ரமவித்தனும் ஆக இவ்வனைவோம் குலதீப சிகாமணி வளநாட்டுப் பனையூர் நாட்டு ப்ரஹ்மதேசம் உத்தமசோழ மங்கலத்து அதிகாரிகள் புனவாயிலுடையாந் காஸ்யபந் ஸாத்தந் மாதவந் பஞ்சவந் ப்ரஹ்மாராயற்கு நாங்கள் கைத்தீட்டுக் குடுத்த பரிசாவது இவற்கு இவ்வூர் திருவிசலூர் பள்ளிகொண்ட ஆழ்வாற்குத் திங்கள் தோறும் அமாவாசை திருமஞ்சனஞ்செய்தருளவும் (கல்பொளிவு) போனகஞ் செய்தருளவும் மாஸ உற்சவத்துக்கு உள்ளிட்ட வேண்டும் நிலங்களிவற்கு நாங்கள் விற்றுக் குடுத்த நிலமாவது இவ்வூரில் சபைப் பொதுவான நிலம் திரிபுவனமாதேவி வதிக்குக் கிழக்கு சோழகுலசுந்தரி வாக்காலுக்கு வடக்கு இக்கண்டத்து பதின்மூன்றாஞ் சத்திரத்து நிலம் ஆறுமாவும் பதினாலாந் துண்டத்து வடமேற்கடைய நிலம் மாகாணியும் இங்கே ஆறாங்

5. கண்ணாற்று பதின்மூன்றாஞ் சதிரத்து நிலம் ஆறுமாவும் பதினாலாஞ்சதிரத்து நிலம் ஆறுமாவும் இங்கே ஏழாங்கண்ணாற்று பதிமூந்றாஞ்சதிரத்து நிலம் ஆறுமாக் காணியும் ஆக நிலம் ஒன்றேகாலே அரைமாவும் முன்பில் ஆண்டில் தவிர இவ்வூர் கடைத்தரமாந பதிநொன்றாந்தரத்தே இறை கொள்ள கடவோமாகவும் இந்நிலத்தால் வந்த மடக்கு னிலத்தால் சில்வரியும் வெள்ளான்வெட்டியும் கொள்ளக் கடவோ மல்லா தோமாகவும் இப்பரிசு கல்பொளிவு இன்நிலத்து எல்லைச் சாந்த நிலத்து இறைக் குடலாக னாங்கள் இவர் பக்கல் கைக்கொண்ட காசு இருபத்தைஞ்சும் கைக்கொண்டு இந்நிலத்துக்கு ஸந்திராதித்தவரை இக்கோயிலிலே கல்வெட்டிக் குடுக்க கடவோமாகவும் இன்நிலத்து இறைதவிந்து ஏறத்தரம் இடோமாகிலும் இறை கொள்வோமாகிலும் சில்வரி வெள்ளான் வெட்டியும் கொள்வோமாகிலும் திருவாணை புவநமுழுதுடை யாராணையே

6. [எந்று] ஸபாநியோகம் பண்ணிக் கைத்தீட்டு இட்டுக் குடுத்தோம் அதிகாரிகள் புனவாயிலுடையார் காஸ்யபன்சாத்தன் மாதவரான பஞ்சவன் ப்ரஹ்மாராயற்க்கு கண்டேற்று ஸர்வ்வ தேவபட்டனும் வங்கிப்புறத்து ஸர்வ த்மக்ரவித்தனும் (கல்பொளிவு) தேவக்ரம வித்தனும்... தாமயபட்டனும் சிறுகொட்டையூர் தம்மய க்ரமவித்தநும் சிறுகொட்டையூர் நக்கன் திருநீலகண்ட பட்டனும் இவ்வனைவரும் இவர்கள் பணிக்க எழுதினேன் இவ்வூர் மத்யஸ்தன் வெண்காடனான உத்தமப் பிரியனேன் இவை என் எழுத்து இவை சிறுகொட்டையூர் சங்கரன் திருநீல கண்ட பட்டன் எழுத்து இவை வங்கிப்புறத்து (கல்பொளிவு) சீராமக்ரம வித்தன் எழுத்து நொட்டூர் சோலைப்பிரான்பட்டன் எழுத்து நொட்டூர் சோலைப்பிரான் பட்டன் எழுத்து வங்கிப்புறத்து பஞ்சனதி வாண பட்டன் எழுத்து இராயூர் தேவ நாயக பட்ட சோமையாசியார் மகன் ஸ்ரீ வாஸுதேவ பட்டனெழுத்து காஞ்சை பற்பநாபக்ரமவித்தன் எழுத்து ஸ்ரீவைணவற்கூடி கல்வெட்டிக்கு என்னை எழுத்து இட்டு குடுக்க என்று திருவடிகள் பணிக்க எழுத்து

7. இவ்வூர் மத்யஸ்தந் இராஜகேசரி உடையாந் கருமாணிக்காழ்வாந் திரும ழபாடியுடையான் ப்ரஹ்மபிரியன் எழுத்து.

---

1. ஆய்வுக்கு மாணவர் திரு. செல்லப் பெருமாள், கோயில் திருப்பணிக் குழுவினர் திரு. கண்ணதாசன், திரு. அய்யாராஜ், தகவல் அளித்துதவிய திரு. குடவாயில் பாலசுப்பிரமணியம், தினமலர் நிருபர் திரு குடந்தை சுந்தரவடிவேலு ஆகியோரும் உதவினர். இக்கல்வெட்டுகளைப் பற்றி ஆய்வு மேற்கொண்ட செல்வி மு.நளினி முதலியோர் 'திருச்சி மாவட்டத்தில் ராஜேந்திரசோழர் காலக் கல்வெட்டு கண்டுபிடிப்பு' என்ற செய்திக் கட்டுரையை 28.2.99 தினமணி (திருச்சி) நாளிதழில் வெளியிட்டுள்ளனர்.

# 18. நெருஞ்சிக்குடி கல்வெட்டுகள்

**சொ. சாந்தலிங்கம், மதுரை;**
**கரு. இராசேந்திரன், மேலப்பனையூர்.**

புதுக்கோட்டை மாவட்டம், நெருஞ்சிக்குடியில் உதயமார்த்தாண்ட ஈசுவரம் என்ற சிவன்கோயிலில் புதியதாக இவ்விரண்டு கல்வெட்டுகள் கண்டறியப்பட்டுள்ளன. முதல் கல்வெட்டு கி.பி.1020இல் முதல் இராசேந்திர சோழன் ஆட்சியில் எழுதப்பட்டது. நெருஞ்சிக்குடி ஊரார் இவ்வூர் உதயமார்த்தாண்ட ஈசுவரம் கோயிலுக்கு தேவதானமாகக் கொடுத்த நிலத்தின் ஒரு பகுதியை குடுமியான்மலை சேத்ரபாலர் கோயிலுக்குப் பல்வேறு பணி செய்வார்க்கும் வழங்கிய செய்தியைக் கூறுகிறது.

இரண்டாம் கல்வெட்டு மூன்றாம் இராசராச சோழனின் 17ஆம் ஆட்சியாண்டில் (கி.பி. 1238) நெருஞ்சிக்குடி ஊராரிடம் பொன்னமராவதி மறவன் உசிதன் இராசன் அரசகெம்பீரமான் அரைமா நிலம் வாங்கி இங்குள்ள சிவன் கோயிலில் உள்ள திருமுனைப்பிள்ளையார் விழாவுக்குக் கொடுத்தது பற்றியது.

## 18:1

இடம் : கருவறை-மேற்குச்சுவர்-தென்மேற்கு மூலையில் உள்ளது.

காலம் : முதல் இராசேந்திரன், யா. 8 (கி.பி. 1020).

1. ஸ்வஸ்திஸ்ரீ திருமன்னிவளர இருநிலமடந்தையும்
2. போர்ச்செயப் பாவையும் சீர்தனிச் செல்வியும்
3. தன் பெருந்தேவியராகி இன்புற நெடுதுயில் ஊ-
4. ழியுளிடைதுறை நாடுந் துடர்வனவேலி படர்வ-
5. னவாசியும் சுள்ளிசூழ்மதிள் கொள்ளிப்பாக்கையும்
6. நண்ணற்கருமுரண் மண்ணைக்கடக்கமும் பொருகடல் ஈ-
7. ழத்தரையர்தம் முடியும் ஆங்கவர் தேவியர் ஓங்கெழில்
8. முடியும் முன்னவர் பக்கல் தென்னவர் வைத்த
9. சுந்தரமுடியும் இந்திரன் ஆரமும்
10. எரிபடைக்கேரளர் முறைமயில் சூடி குலதன-
11. மாகிய பலர் புகழ் முடியும் செங்கதிர்மாலை-
12. யும் சங்கதிர் வேலைத் தொல்பெருங்-
13. காவல் பல்பழந்தீவும் செருவில் சின-
14. வி இருபத்தொருகால் அரசு களைகட்ட

15. பரசுராமன் மேவரும்சாந்திமத் தீவரண்கருதி இரு-
16. த்தியசெம்பொன் திருத்தகு முடியும்
17. மாப்பொருதண்டாற்கொண்ட கோப்பரகேசரிவர்-
18. மரான ஸ்ரீராஜேந்திரசோழதேவர்க்கு யாண்
19. டு 8-ஆவது கேரளாந்தக வளநாட்டு கோனாட்டு
20. ஒல்லையூர்க்கூற்றத்து நெருஞ்சிக்குடி

*(தொடர்ச்சி - கருவறை தென்சுவர்- தென்மேற்கு மூலை)*

21. ஊரா இசஞ்ச ஊரோம் எங்
22. கள்ளூர் தேவர் உதையமார்த்த-
23. தாண்ட ஈச்0வரத்து பரமேச்0-
24. வரர்க்கு நாங்கள் இத்தேவர்க்கு இறை
25. யிலி தேவதானமாக செய்துகுடுத்த
26. நிலமாவது இவ்வூர்ப்பால்படு குடி
27. காடு பனையொடு குறிச்சி வயலுக்கு கீழ்பாற்கெ-
28. ல்லை பெருங்கூற்றகுடி எல்லைக்கு மேற்கும்
29. தென்பாற்கெல்லை ஆற்றுக்கு வடக்கும்
30. மேற்பாற்கெல்லை இம்மாதேவர் கோயிலுக்கு
31. இந்நிலத்து செய்யான வயக்கலுக்கு பாஞ்ச வா-
32. ய்க்காலுக்கும் இவ்வூர் கற்குடி கூடம் குடிநீங்கா கு-
33. ளப்பட்டியாக ஊரிடை இறையிலி விலை கொடு கு-
34. ளப்பட்டி செய்த கூடத்தான் வயக்கலுக்கு கிழக்கு
35. வடபாற்கெல்லை குளப்பட்டி தொட்டு வாய்களுக்
36. குள்பட்டது விளயன் வயக்கலுக்கும் தேவதா-
37. னத்துக்கும் இவ்வயோரிவயலில் தென்கீழை ஏம்பலு-
38. க்கும் தவசன் குழியுமகப்பட தெற்கும் ஆக இச்சு-
39. ட்டப்பட்ட பெருநான்கெல்லையுளகப்பட்ட நிலத்-
40. துள் இஞ்ஞாட்டு குன்றியூர் நாட்டு திருநலக்குன்ற-
41. த்து சேத்ரபாலதேவர்க்கு திருவமிர்துக்கு இவ்வூர்
42. கற்குடிகூடம் தான் விலை குடுத்து ஊராரிடை சேத்-
43. திரபாலதேவர் பேரால் இவ்வயலில் விலை கொ-
44. ண்ட நடுவில் நக்கன் வயக்கலும் சிறுக்கிழவ-
45. னவன் வயக்கலும் நீங்கலாக நீக்கி நின்ற
46. நிலம்

*(தொடர்ச்சி -இரண்டாம் பகுதி தென்சுவரில் உள்ளது)*

47. முண்ணில ஒழிவின்றி இன்னில-
48. மும் அகவயலில் முன்புள்ள
49. தேவதானங்களுமகப்பட இத்
50. தேவர்க்குப் பணிசெய்யுமா-
51. ணுக்கு நிலம் அரைமாவும் உவச்சு

52. ஐஞ்சாள் கொட்ட முன்பு அகவயலில்
53. ...ளங்கீளைப்பள்ளமும் இதன் மேல்லதுமகப்-
54. பட நிலம் காலும் சங்குள்பட காளமூதுமாள்
55. இரண்டுக்கு நிலம் இரண்டு மாவும் தேவர்க்கு
56. வேண்டும் கலமிடும் குசவனுக்கு நிலம்காணி-
57. யும் திருவலகு திருமெழுக்கு இடுந் தவசனுக்கு
58. நிலம் அரைமா திருப்பதியம் பாடுவார்-
59. க்கு நிலம் அரைமாவும் திருநந்தவனப்புரம்
60. ஒருமாவும் திருநொந்தாவிளக்கு முன்பு
61. கணக்கப்பாக்கமுடையான் அரையன் தேவன்
62. செய்த நாற்பத்தெண்ணாயிர வயக்கலும் இப்ப-
63. னையொடு குறிச்சி வயலில் சாத்தி வயக்க-
64. லுமகப்பட விளக்கு இரண்டுக்கும் திருவமிர்துக்கு
65. முன்பு அகவயலில் இவ்வூர் பராந்தகன்
66. இரவியான இராஜவிச்சாதிர பல்லவரை-
67. யன் செய்த சேந்தன் பெருஞ்செய்யும் தி-
68. ருக்கோட்டை வயக்கலுமுட்பட மூன்று சந்தி-
69. க்கும் அரிசி குறுணி நானாழிக்கும் மூன்று
70. சந்திக்கும் தயிரமுதுக்கும் நெல் நாடுரியும்
71. மூன்று சந்திக்கும் கரியமிர்துக்கு நெல்
72. இருநாழிக்கும் மூன்று சந்திக்கும் நெய்
73. யமிர்துக்கு நெய்முப்பிடிக்கு நெல்முன்-
74. னாழியும்.

*(கல்வெட்டு முற்றுப்பெறவில்லை)*

## 18:2

*இடம் : கருவறை-மேற்குசுவர் - வடமேற்கு மூலையில் உள்ள கல்வெட்டு*

*காலம் : மூன்றாம் இராசராசன், யா. 17 (கி.பி. 1238).*

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச்சக்கரவத்திகள் ராச
2. ராசதேவர்க்கு யாண்டு 17 இரட்டபாடிகொண்ட
3. சோழவளநாட்டு ஒல்லையூர்க்கூற்றத்து நெருஞ்சிக்குடி
4. ஊரோம் பிறமலைநாட்டு பொன்மராவதி ம-
5. றவன் உசிதன் இராசனான அரசகெம்பீர மா-
6. னுக்கு இவ்வூர் வயலில் நிலம் அரைமாவும் இவ்
7. வயக்கல் விலைகொண்டு இவ்வூர் மஹாதேவர்
8. உதயமார்த்தாண்ட ஈச்வரமுடையாற்கு திரு
9. முனைப்பிள்ளையார் விழாவுக்கு திருஅமுதுபடிக்கு இ-

10. ன் நிலம் அரைமாவும் தேவதானமாகக் குடுத்-
11. தோம் அரச கெம்பீரமானுக்கு நெருஞ்-
12. சிக்குடி ஊரோம் இச்செய் போர்தவித்-
13. து உசிதன் வயக்கல் என்று தங்கள் பிதாக்
14. கள்பேரால் கல்வெட்டிக் குடுத்தோம்
15. சாத்திவயக்கல் ஊரோம்.

# 19. நெடுவயல் கல்வெட்டுகள்

கரு. இராசேந்திரன், மேலப்பனையூர்.

## 19:1

இடம் : சிவகங்கை மாவட்டம், திருப்பத்தூர் வட்டம் பிரான்மலைக்கு வடபுறமுள்ள நெடுவயல். ஊர் ஓரமாக உள்ள பழைய சிவன் கோவில் அர்த்தமண்டப முப்பட்டைக் குமுதம்.

காலம் : சோழன் இரண்டாம் இராசாதிராசன், யா. 8 (1184).

செய்தி : புறமலைநாட்டு தெருப்பாற்சோற்றி வியாபாரி இவ்வூர் சிவன்கோவில் காலைச்சந்தி பூசைக்கு நிலக்கொடை வழங்கியமை.

1. ஸ்வஸ்திஸ்ரீ த்ரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ இராஜாதியிராஜ தேவற்கு யாண்டு எட்டாவது பாண்டிமண்டலத்து புறமலை நாட்டு . . . றர் தெருப் பாற்சோற்றி வியாபாரி கொண்ட நெல்லு . . .ற்ற ... தந...கலமும் பழங்... மருதவயலுக்கு புரவு இக்கோயில் சைவப் பிராமணரோம் ஊராய் சமைந்த ஊரோம்
2. ...ள்ள கொண்டான் உய்யவந்தா நானாதேசி... அடைக்கல் ... ...ட்டுச் செட் டியேன் குல சூலக் காலால் குடுத்த நெல் ... முப்ப... ... இம்முதல் கொண்டு சந்திராத்தவல் செலுத்துவாராக...
3. ... ரைவிட்ட ... காலை சந்திக்கு நித்தம் நானாழி அரிசி செல்வதாக இம்மு தல் இக் கோயில் சிவ... கல்வெட்டிக் குடுத்தேன் பள்ளி கொண்டாந் யுய்ய வந்தாநாந தேசி... இப்பெருநாள் கெல்லை உண்ணில மொழிவின்றி சென் பாதியும் ... செல்வதாக கல்வெட்டிக் குடுத்தேந்.

## 19:2

இடம் : அதே கோவில் அர்த்த மண்டபத்தின் தெற்கு நிலைக்கா லிலுள்ள கல்வெட்டு.

காலம் : இரண்டாம் இராஜாதிராஜன் யா.9 (கி.பி. 1175).

செய்தி : புறமலை நாடன் என்ற நிகரிலி சோழ பிள்ளை மாரா யன் திருக்கொடுங்குன்றமுடைய நிஷதராஜன் இக்கோ விலுக்கு திருமடைப்பள்ளிப்புறமாக நிலம் கொடுத்தமை.

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. திரிபுவநச் சக்-
3. கர வத்திகள்
4. ஸ்ரீஇராஜா
5. தி4 ராஜதேவ
6. ற்க்கு யாண்
7. டு 9 ஒன்பதா
8. வது இரா
9. ஜ இராஜ
10. ப் பாண்டி
11. நாட்டு இரா-
12. ஜேந்திர சோ
13. ழ வளநாட்டு-
14. டு புறமலை நா-
15. ட்டு...
16. ...நிகரிலி
17. சோழ பெ...
18. பிள்ளை மாரா-
19. யனேனும்தார் சிவ-
20. நாமத்திநல் தி-
21. ருமடைப்பள்-
22. ளிப்புறமா
23. க இனாட்டு தி-
24. ருவாலந்துறை
25. யுடையா-
26. த் திருக்கொடு-
27. ங்குன்ற முடை-
28. யாந்தே. நி-
29. ஷத ராஜேநேந்-
30. னா விற்றுகு-
31. டுத்த நிலமா-
32. வது எந-
33. ணபற்றில்
34. மருதவயல்
35. வெளிமாங்கு-
36. டி மஹா தேவ-
37. ர் பாதி நீக்கி
38. எந் பாதி நில-
39. மும் இந்நி-
40. லத்தால் வந்த
41. புன்செயும்
42. குளமும் குளப்-
43. புரவு. விற்றுகு-
44. டுத்து

## 19:3

இடம் : அதே கோயில். அர்த்த மண்டபத்தின் வடபுறம் வெளிப்புறச் சுவரிலுள்ள கல்வெட்டு.

காலம் : விஜயநகர அரசு. ஆண்டுகள் பொருந்திவரவில்லை.

செய்தி : இக்கோவில் சிவகாமசுந்தரியை ஞாயபரிபாலர் பாண்டி பெருமாள் செய்து வைத்ததைப் பற்றியது.

1. ஸ்ரீ...ராயர்க்கு செல்லா நின்ற சகாத்தம் 1420 மேல்
2. செல்ல விக்கிறம வருஷம் சித்திரமாதம் 5ந் தேதி ந-
3. வய புறமலை நாட்டு நெடுவயல் ஊர் நிகர் இலாவணதீசுர உடைய நயி னார் கோயில் நாச்சியார்
4. சிவகாம சுந்தரிய்க்கு எழுந்தருளி இருக்க கேரளசிங்க வளநாட்டு அருவி யூரான குலசேகர பட்டணத்து
5. யிரற்றூருடையான் மருமக்க நயினாரான ஞாயபரிபா-
6. லர் பாண்டிப் பெருமாள் நாச்சியார் எழுந்தருளி இருக்க கட்டவித்தான்.

# 20. மணவூர் மூன்றாம் இராசராசன் கல்வெட்டு

*தெ. கல்யாணி, திருச்சிராப்பள்ளி.*

இடம் : *வடார்க்காடு மாவட்டம் திருத்தணி வட்டத்தில் சென்னை-அரக்கோணம் சாலையில் திருவாலங்காட்டிலிருந்து தெற்கே 6 கி.மீ. தொலைவில் உள்ள மணவூரில் திருநந்தீசுவரமுடையார் என்ற சிவன் கோயில் கருவறை தென்சுவர் குமுதம், ஜகதிப்படையில்.*

காலம் : *சோழன் மூன்றாம் இராசராசன் யா.12 (கி.பி. 1228).*

செய்தி : *வீரநாரசிங்கதேவனான யாதவராயன் கோயிலுக்கு நிலம் இறையிலியாகக் கொடுத்தமை. சிறு பாடிக்காவலுள்ளிட்ட வரிகள் நீக்கிக் கொடுக்கப்பட்டது. மணவூர் மணவில் கோட்டத்தின் தலைமையூர் என்பது குறிப்பிடத்தக்கது.*

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்ரவர்த்திகள் ஸ்ரீராஜராஜதேவர்க்கு யாண்டு 12 ஆவது ஜயங்கொண்ட சோழமண்டலத்து மணவிற் கோட்டத்து மணவில் உடையார் சோமநாத தேவர்க்கு வீர நாரசிங்க தேவனான யாதவராயன் விட்ட நிலம் நங்கை தாழி குழி முன்னூற்று நாற்பதும் புரத்து ஸ்ரீகேசவன் குழி நானூற்று எண்பதும் ... குழி முன்னூற்று முப்பதும் கோவன் தோட்டம் குழி
2. நானூற்று எண்பதும் சாந்தி... ஐங்குழி ஐந்நூற்று எண்பதும் பிள்ளையார் சிறு பிள்ளைகளில் செங்கமலாண்டியார் பேரு காணி ...யேன் இந்நாயனார்க்கு குடுக்க கொண்டு தேவதானமாக விட்ட நிலம் தெற்கில் கோவன் தோட்டத்துக் குழி நானூற்று எண்பதும் இந்நாயனார் தீர்த்தக்குள சிவ... கிழக்கு ஏரிக்கரைக்கு வடக்கு திருநந்தவனஞ் செய்ய சிவகா-
3. ம நாச்சி... குழி... உட்பட எண்ணூறும் பொளிப்பாக்கமான காலுக்கு கிழக்கும் புரத்திலகு வட வரம்புக்கு தெற்குங்கண்டி குண்டில் தென் வரம்பு தெற்கும் வடக்கில் கோவன் தோட்டத்து வடவரம்புக்குத் தெற்கு... கீழ்வரம்புக்கு மேற்கு தெற்கு... இந்நான்கெல்லை உட்பட்ட காடுகளும் மேடுங்
4. குழியும் உட்பட விட்டேன் இதுக்குட்பட்ட நிலத்துக்கு நீர்பாயுங் கால்வாய் விட்டு அல்லாத நிலம் தேவதானமாக விட்ட குழி 1530-ம் நீக்கி அல்லாத நிலம் நாயனாற்கு திருநாமத்துக் காணியாக விட்டோம் இந்த நிவந்தம் சோமநாத தேவ-
5. பெங்காண்டேயன் பொன் குடுத்துக் கொண்டு திருநாமத்துக் காணியும் இறையிலியுமாக விட்டது தாண்டை தாங்கல் கரைக்கு வடக்கு நகையாழ்

வான் குழிக்கு கிழக்கு அருளாகர விளாகத் தெல்லைக்கு தெற்கு புறத்தி பற்றில் தென்கீழ் மூலை குளக்குழி உட்பட இந்நேர் வடக்குற நாற்பாற் கெல்லை-

6. க்கு உட்பட்ட நிலம் அஞ்சுவேலியும் காடும் களறும் கரம்பும் திருத்தி பயிர் செய்து... குடுத்துக் கொண்டு காணியும் இறையிலியுமாக விட் டேன்...ண்டையேன் இத்தேவர்க்கு 14-வது மணவில் ஊரவர் பக்கல் திரு வாலங்காட்டில் எழுந்தருளியிருக்கும் முதலியார் பிரசன்ன தேவர் மாடை எட்டுக்கு விலை கொண்ட நம்பார்த்தாங்கல் கீழ்பாற்கெல்லை

7. ஆற்றுக்காலுக்கு மேற்கும் தென்பாற்கெல்லை பெண்ணாகடத்தெல்லை யும் உறத்தூர் எல்லையுறவும் மேல்பாற்கெல்லை ... வடபாற்கெல்லை நம் பாக பெருஞ்செறுவுக்கு தெற்கும் இந்நாற்பாற்கெல்லைக்கு உட்பட்ட ... காடும் தோட்டமும் களறும் வடக்கு செய்காலிலே இரை நிலம் குழி 3000 முதலிடா காணியாக கொள்கையில் இவ்வூர் நாயனார் சோமநாத தேவர்க்கு இந்நிலம் தேவதானமாக இப்பிரமாணப்படி உட்பட்ட நிலத்தில் எட்டும்

8. பாட்ட கடமையும் சிறுபாடிக்காவல் உள்ளிட்ட ஆயமும் இந்நாயனார்க்கு விட்டேன் பெங்காண்டயேன் மணவில் ஊரவர் பாக்கல் ஊரவர் பிரசன்ன தே...



படம் 21:2 பட்டலூர் வீரராசேந்திரன் கல்வெட்டு

# 21. பட்டலூர்க் கல்வெட்டுகள் -2

*அ. பழனியப்பன், சண்பை.*

## 21:1

இடம : ஈரோடு மாவட்டம், பவானி வட்டம் பட்டலூர் ஈசுவரன் கோயில் முன்புறமுள்ள பலகைக்கல்.

காலம் : கி.பி.12-13ஆம் நூற்றாண்டு.

செய்தி : இறுதி வரியை இடமில்லாது கல்வெட்டின் மேல் பகுதியில் வெட்டியுள்ளனர். இவ்வூரில் கொங்குச் சோழர் கல்வெட்டுகள் உள்ளதால் இக்கல்வெட்டில் குறிக்கப்படும் பரகேசரி கொங்குச் சோழர் எனக் கொள்ளலாம். சிவபிராமணக் காணியாளர், தாநத்தார் தொடர்புடைய அரசாணையான இக்கல்வெட்டு கொங்கு நாட்டில் இருந்த 20 நாடுகளின் பெயர்களையும், கொடுமுடி, கரூர், திருமுக்கூடல், வஞ்சிமான்கூடல், திருமுருகன் பூண்டி முதலிய சிறப்பு வாய்ந்த சிவத்தலங்களையும், வணிகச் சிறப்புடைய பெருவழித்தளமான இராசராசபுரத்தையும் (தாராபுரம்) குறிப்பிடுவது சிறப்பாக உள்ளது. கல்வெட்டில் பட்டிலூரும் குறிக்கப்பட்டிருக்க வேண்டும். அதன் காரணமாகவே இக்கல்வெட்டு இவ்வூரில் உள்ளது எனலாம். கல்வெட்டின் பின்பகுதி காணாமற் போனதால் அதனை உறுதி செய்ய இயலவில்லை.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ நன்மங்கலஞ் சிறக்க
2. ஸ்ரீபரகேசரி திருபுவநச்சக்கரவ-
3. த்தி கோநேரின்மை கொண்டான் வடகொங்கி-
4. ல் நரையனூர் நாட்டில் அடிக்கீழ்த்தளமான
5. இராசராசபுரமும் பொங்கலூர்கா னாட்டிற்
6. கானூருள்ளிட்ட ஊர்களும் அலங்கையம் தநிச்சி
7. யம் பொங்கலூர்காநாடு தென்கரை நாடு அண்-
8. டநாடு தலையூர்நாடு வடகரை மணலூர் நாடு சு-
9. ரைய நாடு கீழங்கநாடு வெங்கலநாடு கட்டையூர் நாடு
10. இடைப்பூதிநாடு காங்கைய நாடு வீரகேரள வழநாடு வலு-
11. ப்புக்காநாடு குறுப்புநாடு வடபரிசாரநாடு கானாரிக்கி கரைக்கி-
12. ...லநாடு பூந்துறைநாடு கீழ்ப்பரநாடு வடகரைநாடு
13. இந்நாடுகளில் சிவபிராமணக் காணியாளர் ...
14. ... ந்தாநத்தாற்குந் திருபாண்டிக் கொடுமு-

15. டியிற் தாநத்தாற்குங் கருவூரிற் தானத்தாற்

16. குங் திருமுக்கூடத் தாநத்தாற்குந் திருவெஞ்சமாகூடத் தாநத்தாற்கும் திரு முருகந்...

17. இது மாறுவான் வழியேழெச்சமறுவான்.

## 21:2

இடம் : ஊரின் மேற்குப்பகுதியில் உள்ள ரெங்கசாமி கவுண்டர் புஞ்சை நிலத்தில் நடப்பட்டுள்ள பலகைக்கல்லில் உள்ளது.

காலம் : கொங்குச் சோழன் வீரராசேந்திரன், யா.28 (கி.பி. 1234)

செய்தி : கல்வெட்டின் மேல்ப்பகுதியில் சங்கும், சக்கரமும் புடைப்புச் சிற்பங்களாக உள்ளன. பட்டிலூரைச் சேர்ந்த ஊரும் ஊராளிகளும் அவ்வூரில் உள்ள அழகப்பெருமாள் கோயிலுக்கு ஏகபோகமாக நிலம் (தறை) கொடுத்ததைக் குறிப்பிடுகிறது. நிலத்தின் எல்லைகளாக ஊராண்மைப் பட்டி, கடறு, வண்ணான்மடை, சவாணி சொக்கன் பொழி, ஆழிக்கல் ஆகியவை சொல்லப்பட்டுள்ளன.

1. ஸ்வஸ்தி ஸ்ரீரி வீரராசே-
2. ந்திரதேவற்கு யியாண்டு
3. இருபத்தெட்டாவது பட்டிலூரு-
4. ம் ஊராளிகளோம் எங்களிலிசை-
5. ந்து பட்டில் எம்பெருமா அழகப்
6. பெருமாளுக்கு னாங்களிறையி-
7. [டு]கிற ஏகபோக நாங்களிட்டத-
8. றை ஊராம்மைபட்டி மேக்கு
9. கடறுக்கு கிழக்கும் வண்ணாந் ம -
10. டைக்கு வடக்கும் கீழ்பால் திருவாழ்-
11. ழிக்கல்லுக்கு மேக்கும் வடக்கு சவா-
12. ணி சொக்கந் பொழிக்கு தெக்கு
13. ம் இந்நாங்கெல்லைக்குட்பட்ட
14. து ஆக்குவாந் பாதம் தலைமேல்
15. யித்தந்மம் அழிப்பாந் ஏழ்ழெச்ச
16. அறுவாந் ஸ்ரீவயிணவ ரக்ஷை.

---

இக்கல்வெட்டுகள் படிக்க தொல்லியல்துறை திரு. பொ. இராசேந்திரன், திரு.சொ. சாந்தலிங்கம், முனைவர் சு. இராசகோபால் மற்றும் முனைவர் ஆர். பத்மாவதி ஆகியோர் உதவினர்.

# 22. பொழிச்சலூர்க் கல்வெட்டு

கு. தாமோதரன், சென்னை.

இடம் : காஞ்சிபுரம் மாவட்டம், சைதாபேட்டை வட்டம் பல்லாவரம் அடுத்துள்ள பொழிச்சலூர் சுடுகாட்டினை அடுத்துச் சாலை ஓரத்தில் உள்ள ஒழுங்கற்ற 4 அடி உயரக் கல்லில் உள்ளது.

காலம் : கி.பி. 12-13 ஆம் நூற்றாண்டு

செய்தி : கல்வெட்டின் இடதுபுறம் குத்துவிளக்கு சம்மட்டிக்கல் அல்லது உடுக்கை போன்ற உருவம் வாள் ஆகியவையும் வலது பக்கம் சற்று மேல்ப்பகுதியில் கலப்பைக் கொழு குத்துவிளக்கு ஆகியவையும் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. இவை கல்வெட்டில் குறிப்பிடப்படும் குளத்தைச் செய்த ஐநூற்றுவர் என்ற பெரிய வணிகக்குழுவின் சின்னங்களாகும்.

ஐஞ்நூற்றுவன்குளம்

---

இக்கல்வெட்டு தமிழ்நாடு அரசு தொல்லியல் ஆய்வுத்துறை இளநிலைக் கல்வெட்டாய்வாளர் திரு. மே. சீனிவாசனால் அறியப்பட்டுக் கல்வெட்டுப் பயிற்சி நிறுவன மாணவர்கள் உதவியுடன் படியெடுக்கப்பட்டது.



படம் 22: பொழிச்சலூர் கல்வெட்டு

# 23. சாத்தனூர்க் கல்வெட்டு

*சீ. இலட்சுமணன், தமிழூர்.*

இடம் : *இராமநாதபுரம் மாவட்டம் திருவாடானை வட்டம் சாத்தனூர் கிராமத்தில், திருவாளுவ ஈசுவரர்கோவில், உபபீடம் வடக்குச்சுவர்.*

காலம் : *மாறவர்மன் குலசேகரன், யா.31 (கி.பி. 1299).*

செய்தி : *திருவாளுவ ஈசுவரர் திருக்கோவில் முப்பத்து வட்டத் துச் சிவப்பிராமணர், கருப்பூருடையான் கருமாணிக்க னுக்குப் பிடிபாடு பண்ணிக் கொடுத்தல். இவர்கள் பெற்றுக்கொண்ட பணத்திற்கு திருவிளக்கு, அமுதுபடி என்றும் முட்டுப்பாடின்றி செய்வதாக ஏற்றல்.*

1. ஸ்ரீமற்க்கீத்திற்கு மேல் ஸ்ரீகோமாரபன்பரான திபுவன சக்கரவர்த்திகள் எம்மண்டலமும் கொண்டருளிய ஸ்ரீகுலசேகர தேவற்கு யாண்டு 30-ஆவதினெதிராமாண்டு ஆடி மாதம் ...
2. யும் புதன்கிழமையும் பெற்றபூசத்துநாள் திருக்கானப்பேற் கூற்றத்து சாத்த னூர் உடையார் வாளவ ஈச்ᴗவரமுடைய நாயனார் கோயில் முப்பது வட் டத்தில் சிவப்பிராமணரோம் மிழலைக்கூற்றத்து [மேல்க்கூ]
3. ற்று கருப்பூருடையான் நாகன் கருமாணிக்கத் தேவற்குப் பிரமாணம் பண் ணிக் கொடுத்த பரிசாவது இந்நா -
4. யனாற்கு இவர்வைத்த சந்தியாதீபம் திருவிளக்கு உடையார் திருவிளக்கு ஒன்றும், திருக்காமக் கோட்ட -
5. ப்பெரிய நாச்சியாருக்கு திருவிளக்கு ஒன்றும், முதலியாருக்குத் திருவி ளக்கு, ஒன்றும் நாயகற்குத் திருவிளக்கு ஒன்றும்
6. ஆக திருவிளக்கு நாலுக்கும் எங்களுக்குச் சந்திராதித்தவர் செல்லக் காணி யாக இவர் தந்த பணம் இப்பணம் இருபத்தைந்து
7. கும் சந்திராதித்தவர் செல்லக் காணியாக கைக்கொண்டு எங்கள் நாள் விழுக்காட்டிலே காணியாக விழுக்காடிட்டுக் கொ
8. ண்டு இத்திருவிளக்கு நாலும் சந்திராதித்தவர் செல்ல எரிப்போமாகவும் இக்கோயிலில் சேத்ரபாலபிள்ளை
9. யாற்கு திருஒத்த சாமத்திற்கு அமுதுபடிக்கு இவர் வைத்த அரிசிநாழிக்கு இவர் எங்களுக்கு சந்திராதித்தவர்
10. செல்லக் காணியாக இவர்தந்த பணம் 15 இப் பணம் பதி னைஞ்சுங் கைக்கொண்டு இந்நாள் முதல் சந்திராதித்தவர் செல்ல
11. அமுதுபடிமுட்டாமல் செலுத்துவோம்மாகவும் இவர் திருக்காமக் கோட் டத்துப் பெரிய நாச்சியாருக்குப் பண்ணிச்சா(ர)

12. த்தின பொன்னின் பட்டம் இரண்டு திருவிளக்கும் அமுதுபடியும் மூட்டா மல் செலுத்துவோமாகவும் இப்படி சம்மதித்து...

13. படிக்கு கருப்பூருடையாரான நாகன் கருமாணிக்க தேவற்கு முப்பது ...

14. இப்படிக்கு இவை அரியவன் தேசமிக்கனான சுந்தரபாண்டிய பிரமாதிரா யன் எழுத்து இப்படிக்கு இவை அரியவனான

15. ... ஈச்0வரமுடையான் எழுத்து இப்படிக்கு சிவதன பொன்னப்பிள்ளை யான திருச்சிற்றம்பலப்பட்டன் எழுத்து

16. இப்படிக்கு இவை அரியவன் கவநாயகன் எழுத்து இப்படிக்கு இவை அரி யவன் பட்டனான திருக்கொண்டப்பட்டன் எழுத்து.

---

# 24. வடகுரங்காடுதுறை சித்திரமேழிப் பெரிய நாட்டார் கல்வெட்டு

*து. கங்காதரன், பழனி.*

இடம் : தஞ்சை மாவட்டம் திருவையாற்றுக்கும் சுவாமிமலைக்கும் இடையில் காவிரியாற்றின் வடகரையில் அமைந்துள்ள வடகுரங்காடுதுறையில் ஆபத்சகாயேசுவரர் கோயில் கோபுரவாசல்.

காலம் : வீரபாண்டியன், யா.10 (கி.பி. 1307).

செய்தி : சிவன்கோவில் வளாகத்திற்குள் சித்திரமேழிப் பெரிய நாட்டாரும், 79 வளநாட்டுப் பதிணென் பூமியாரும், பதிணென் விசயத்தாரும் ஒன்றுகூடி கோயிலின் திருநடை மாளிகை திருப்பணிக்காகக் கீழ்வருமாறு போகம் ஒன்றுக்கு கொடையளித்தல் வேண்டுமென நிச்சயித்தனர்.

ஏர் ஒன்றுக்கு - தூணிநெல்; ஆள் ஒன்றுக்கு - பதக்கு நெல்; கைவினை ஆள் ஒன்றுக்கு - குறுணிநெல்; புடவைக்கட்டு ஒன்றுக்கு - பணம் ½; மிளகுபொதி ஒன்றுக்கு - பணம் ¼; பொன்உரைப்பன ஒன்றுக்கு - பணம் ¼; பொன்நிறை ஒன்றுக்கு - 1 காசு; அரிசிப் பொதி ஒன்றுக்கு - காசு 2; நெல்பொதி ஒன்றுக்கு - காசு 1; தலைச்சுமை நெல்லுக்கு - காசு 1.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோ
2. ச்சடபன்மர்தி-
3. ருபுவனச்சக்கர-
4. வத்திகள் ஸ்ரீவீர
5. பாண்டிய தேவற்கு
6. யாண்டு 10வது விக்கி-
7. ரமசோழவள-
8. நாட்டு விறைக்-
9. கூற்றத்து திருக்குரங்காடு துறை
10. உடைய நாயனார்
11. கோயில் திருநடை
12. மாளிகை திருப்பணி-
13. க்கு எழுபத்தொன்-
14. பது வளநாட்டுப்
15. பதிணெண்பூமி சித்திர-
16. மேழிப்பெரியநா-
17. ட்டாரும் பதினெண்-
18. விஷையத்தாரும்
19. ரகைஷ ஆக நிறை-
20. வறநிறைந்துநிச்ச-

21. யித்தபடி போகம் ஒ-
22. ன்றுக்கு ஏர் ஒன்றுக்கு
23. த்தூணி நெல்லும்ஆ-
24. ள் ன்றுக்கு பதக்கும்
25. கைய்வினை ஆளுக்கு
26. குறுணி நெல்லு தண்-
27. டிக்கொள்ளவும் அள-
28. ப்பன நிறுப்பன மடி-
29. ப்பன உரைப்பன எ-
30. டுப்பன இவையிற்-
31. றுக்கு புடவைக்கட்டு
32. ஒன்றுக்கு பணம் அ-
33. ரையும் மிளகு பொதிஒன்-
34. றுக்குப் பணம் காலும்
35. உரைப்பன பொன் ஒ-
36. ன்றுக்குப் பணம் காலும்
37. நிறைக்கு ஒரு காசும் அரி-
38. சிப்பொதி ஒன்றுக்கு காசு
39. இரண்டும் நெல்பொ-
40. தி ஒன்றுக்கு ஒரு காசும்
41. தலைச்சுமை காசு ஒன்-
42. றும் இவையற்றால் வரு-
43. வனவும் வாங்கிக் கொ-
44. ண்டு இந்தப்பணிமுடி-
45. ப்பதாக நாடும் நகரமும்
46. பதிணெென்விஷைய-
47. த்தோமு கூடிச் சம்ம-
48. தித்து இனாயனார் திருவா-
49. சலிலே கல்வெட்டிக்கு-
50. டுத்தமைக்கு பணியா
51. ல் நாட்டுக்கணக்கு எழு-
52. பத்தொன்பதுநாட்டு
53. வேளான் எழுத்து உ
54. பணியால் நகரக்கணக்-
55. கு ஐனூற்றுவேளான் எ-
56. ழுத்து மலைமண்டல
57. மாதாக்கள் எழுத்து
58. கண்ணனூர் [வீரபாண்]-
59. டியன் மடிகையில் பதி-
60. ணெண் விஷையத்தா-
61. ர் எழுத்து குற்றாலமான
62. வீரபாண்டியன் பட்டீ-
63. ச்$_0$வரத்து பதிணெண்வி-
64. ஷையத்தார் எழுத்து உ

---

# 25. சம்புவராயரின் பாதிரிக் கல்வெட்டு

**கோ. திருமூர்த்தி, சென்னை.**

பாதிரி என்னும் ஊர் காஞ்சிபுரம் மாவட்டம் மதுராந்தகம் வட்டத்தில் மேல்மருவத்தூர் - வந்தவாசி வழியில் 12 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரின் நடுவே உள்ள புளியமரத்தடியில் 1.30 × 0.50 மீ. அளவுடைய பலகை கல்லில் கல்வெட்டு ஒன்று கள ஆய்வின் போது கண்டு பிடிக்கப்பட்டது. இக்கல்வெட்டு சோழ மன்னன் மூன்றாம் இராஜராஜனின் 17வது ஆட்சியாண்டைச் (கி.பி. 1233) சேர்ந்ததாகும். சம்புவராயரின் அரண்மனையில் பணிபுரிந்த பெண்பணியாளரான மிடபிள்ளை என்பவளின் மகன் வன்னிய நாயன் நினைவாக இவள் அண்ணன் வீரப் பெருமாள் செதமரயன் என்பவன் தூம்பு ஒன்றை அளித்ததாக கல்வெட்டு கூறுகிறது.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச்
2. சக்கரவர்த்திகள் ஸ்ரீஇரா
3. சராசதெவர்கு யாண்டு ப
4. தின் ஏழாவது இத்தூ
5. ம்பு சம்புவராயர் அ
6. கம்படிப்பெண்டு
7. களிசெல் மிடபிள்ளை ம
8. கன் வன்னிய நாயனு
9. க்குத் தன்மமாக இவ
10. ள் தமையன் வீரப்
11. பெருமாள் செத
12. மரயன் இட்டான்

---

# 26. புல்வயல் கல்வெட்டு

கரு. இராசேந்திரன், மேலப்பனையூர்.

இடம் : புதுக்கோட்டை மாவட்டம், குளத்தூர் வட்டம், புல்வயல் ஊருக்கு வடமேற்கில் நெடுஞ்சாலைக்கு வடபுறமுள்ள இடிந்த பெருமாள்கோவில் முன்பாக தரையில் கிடக்கும் பலகைக் கல்லில்.

காலம் : குலசேகர பாண்டியன், யா.33 (கி.பி. 1301).

செய்தி : புல்வயல் தாயிலும்நல்ல வண்ணக்கர் என்ற பெருமாள் கோவில் நாயனாருக்கு எண்ணைக்காப்பு சாத்துவதற்கு எண்ணெய் தானமாக அளிக்கப்பட்டது பற்றியது.

1. ஸ்வஸ்திஸ்ரீ குலசேகர தே
2. வற்கு யாண்டு முப்பத்து
3. மூன்றாவது நாள் வயல [கநா]
4. ட்டு புல்வயல் வாண...
5. வாண்டானும் பெரிய-
6. னும் நாயனார் தாயிலு [நல்ல]
7. வண்ணக்கற்கு எண்ணை கா-
8. ப்புக்கு இவ்வூர் செக்கிலாடும் பி-
9. ள வொன்றுக்கு கா[ற்பிடு] எண்-
10. ணை சந்திராதித்தவரை செல்ல-
11. க் கடவதாகவும் த4ர்மமம்.

---

# 27. மேலை நிலை மலம்பட்டி கல்வெட்டுகள்

கரு. இராசேந்திரன், மேலைப்பனையூர்.

## 27:1

இடம் : புதுகோட்டை மாவட்டம், திருமயம் வட்டம், மேல நிலை மலம்பட்டி குமாரஊரணி வடகரையின் பாறை யில் உள்ளது.

காலம் : 11ஆம் நூற்றாண்டு.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ குன்றத்தூர் திருமலை-
2. ப் பம்மதி ஈச்வரமுடைய மஹா
3. தேவர் தே3வதாநப் பற்றில் குமார ஊ-
4. ருணி தேவவயலுக்கு இக்கோயி
5. ல் சி0வப்3ராஹ்மணந் புல்லாலி திரு-
6. வாக்கி ஆதித்தந் நீர்பாய்ச்சிக் கொ-
7. ள்வாந் மற்று விரோதம் பண்ணு-
8. வார் வல்லவரையந் இதுபல்-
9. மாஹேச்0வர ரக்ஷை இதுமீட்-
10. டார் மிறமிண்டந் உ

## 27:2

இடம் : மேலநிலை மலம்பட்டி ஊருக்கு வடபுறமுள்ள மலை யின் மீதுள்ள ஈசுவரன் கோவிலின் கருவறை வடபுறச் சுவரில் உள்ளது.

காலம் : கி.பி.1518

செய்தி : கோயில் பண்டாரத்தாரும் ஊரவரும் சேர்ந்து இருவ ருக்கு கோயிலில் சில முன்னுரிமைகள் கொடுத்தமை.

1. ஸ்வஸ்திஸ்ரீ சகாத்தம் 1442-
2. ஆவது வெகுதானிய வருஷம் ஆவ-
3. ணி மீ 12 கடலூர் நாட்டு மேலைநிலை
4. உடையார் புகழ்மதியீசுரமுடை-
5. ய நாயனார் திருக்கோயில் ஸ்ரீபண்-
6. டாரத்தாரும் ஊரவரும்மும் கடல-
7. டையாதிலங்கை கொண்ட சோ-

8. ழவளநாட்டு தெந்கோனாட்டு
9. ஒல்லையூர் கூற்றத்து சுந்திரசோ-
10. ழபுரத்து தேசிகயுகந்த பட்டினத்து
11. மருதாந்தபுரமுடையான் ஆவுடை-
12. யாரான ஆனைய்பரிபாலர் உள்ளிட்டார்-
13. க்கு இன்னகரத்து கலசமங்கலமு-
14. டையான் பிள்ளையாரான ஆனை-
15. மானார் [அழகிய] மெய்யற்கும் கல்வெ-
16. ட்டிக் குடுத்தபடி இன்னாயினார் திருக்-
17. கோவில் [தே.றும் கா] இவர்கள் தன்மமா-
18. க கல்வெட்டிக் குடுத்தோம் ஸ்ரீபண்-
19. டாரத்தாரும் ஊரவரும்ஓம் இந்த
20. [மகத்தாவக்கு] திருநாள் திங்கட்திவசது-
21. க்கு முன்னொடுக்கும் தீத்தம் திருநீறு-
22. ம்பெறக் கடவாராகவும்.

## 27:3

இடம் : மேலநிலை அதே ஊருக்கு வடபுறம் உள்ள மலைமீது கட்டப்பட்ட அம்மன் கோவில் வடபுறத்து வெளிச்சுவரிலுள்ள கல்வெட்டு.

காலம் : கி.பி.1521

செய்தி : சுந்தரசோழபுரத்துப் பெருமங்கலமுடையான் பிச்சாண்டான் மலைமண்டலமாதா என்பவர் செய்த திருப்பணிகளைப் பாராட்டி அவருக்கு கோவிலில் தீர்த்தம், திருநீறு, முன்னொடுக்கு முதலிய உரிமைகளைக் கொடுத்தமை.

1. ஸ்வஸ்திஸ்ரீ சகாத்தம் 1143ன் மேற் செல்லாநின்-
2. ற விஷு வருஷம் அற்பசி மீ 11உ கடலூர் நாட்டு மேலை
3. நிலை உடையார் புகழ்மதியீசுரமுடைய நாயனார்
4. திருக்கோயில் ஸ்ரீபண்டாரத்தாரும் ஊரவரும்ஓம்
5. கடலையாதிலங்கை கொண்டசோழவளநாட்-
6. டு தென் கோனாட்டு ஒல்லையூர் கூற்றத்து சுந்தரசோ-
7. ழபுரத்து தேசிகயுகந்த பட்டினத்து பெருமங்-
8. கலமுடையான் பிச்சாண்டான் மலைமண்-
9. டல மாதாக்கள் ஆவடையானுக்கு
10. கல்வெட்டிக் குடுத்தோம் உடையா-
11. ர் புகழ்மலையாண்ட நாயனார் நாச்சியார்

12. திருக்கோயில் நவமாக... இவர் தன்மமாக நிறைவேற்றச் செய்கையில் கல்[வெட்டிக் குடு]
13. த்தோம் இந்த தன்மக... இந்த நாச்சியார் திருக்கோயில் பெ[ற்ற] சுவந்திரம் திங்கட் திவ[சங்]
14. களும் திருநாளுக்கு தீத்தம் திருநீறும் முன்னொடுக்கும் பெற்றுப் போக கடவராகவும்
15. இப்படிக்கு இக்கோயிலில்நம்பிமாரில் ஆண்டபிள்ளையான தில்லையாளி
16. பட்டன் எழுத்து இப்படிக்கு இவர்கள் சொல்ல இந்த கல்வெட்டு பிரமா ணம் எழுதினேன்.
17. இக்கோயில் கணக்கு திருக்கைய் வேலழகி[யார்].

## 27:4

*இடம்* : *அதே ஊருக்கு வடபுறமுள்ள மலைமீதிருக்கும் கோவிலுக்குத் தெற்கில் கோவிலுக்குச் செல்லும் பாதையருகில் பாறையில்.*

*காலம்* : *கி.பி.1524*

1. ஸ்வஸ்திஸ்ரீ சகாத்தம் 1446ன் மேற்செல்லாநின்ற தாருண
2. ஷு தை மீ 24 தேதி பொன்னமராபதிநாட்டு வட பற்று
3. மேலைநிலை உடையார் பூமலை ஆண்டநாயனார்
4. பண்டாரத்துக்கு மருங்கோனாட்டு திருமலை சுஞ்[சொத்]து
5. அந்தம்பர் கண்டன் பாப்[பை]யனன் வல்லம்...
6. ரேன் திருநாமத்துக் காணிஆக கல்வெட்டிக் குடுத்தபடி இந்த நயினார்
7. நாச்சியார் பூமலை நாய[கியாரைப்] பிரதிட்டை பண்ணியும்
8. திருமலையிலே அனேகத் திருப்பணி நடத்தியும் பூமலைஊர்
9. நவமாக குடி ஏற்றுவிக்கையாலும் நயினாற்கு இரண்டு நேர-
10. த்துப் பூசைக்கட்டளைக்கும் திருப்பணிக்கும் கோவில் முதலி-
11. ல்லாத படியாலே நயினாற்கு இரண்டு நேரம் பூசைக்கட்டளை
12. க்கு திருப்பணியும் சந்திராதித்தவரை நடக்கவேணுமென்று
13. சுவாமி வீரநரசிஞ்கராய நாயக்கர் பண்டாரத்தார் எனக்கு நா-
14. யக்கத்தனத்துக்கு குடுத்த அமரச்சீர்மை மேலைநிலைப்புரவு பூமலை
15. ஊர் நான்முகக் கல்லுக்கு கீழ்பாற்கெல்லை சென்னாகரம்பாறைக்கு
16. மேற்கும் தென்பாற் கெல்லை பூலாங்குறுச்சி எல்லைக்கு வடக்கும்
17. இன்னயினார் திருமலைக்குத் தெற்கும் ஆக இசைந்த பெருநான்கெல் லைக்[குள்]
18. அகப்பட்ட நஞ்சையும் புஞ்சையும் திருநாமத்து காணியாகவும் இப்புரவி-
19. லேப் புதுக்குளத்தில் உண்டான நஞ்சையுள்ளது குடிநீங்காத் தேவதானமா கவும்

20. மாவடை மரவடையும் பாசிப்பாட்டமும் எப்பேர்ப்பட்டனவும் பொன்மு தல் நெல் முதலும் ெ.ாமட-

21. தமையாக இன்னதன்றிலே இன்னாயனார் ஸ்ரீபண்டாரத்திலே [முதலாக் கக்] கடவராகவும்

22. குடிநீங்காத் தேவதானமான புதுக்குளம்

23. ....

---

# 28. பள்ளக்கொல்லை தேவராயர் கல்வெட்டு

து. துளசிராமன், ஆர்க்காடு.

இடம் : திருவண்ணாமலை மாவட்டம், போளூர் வட்டம், படைவீட்டிற்கு வடக்கிலுள்ள அனந்தபுரம் மதுராபள்ளக்கொல்லை கிராமத்தின் வசந்த புதுமலை அடிவாரத்தில், பெருமாள் மலைக்கு கிழக்கு 'எழுத்தடிச்ச கல்' எனப்படும் பாறையில்.

காலம் : விஜயநகர அரசன் இரண்டாம் தேவராயன், கி.பி. 1436.

1. இராக்ஷச வருஷம் பங்குநி மாதம் ஸ்ரீமன் இராசாதிராசன் இராச பரமேசுவரன்
2. கசவேட்டைகாரன் ஸ்ரீவீரபிரதாப தேவராயர் மஹாராயர் படைவீட்டில் பெருமாள்குலத்து வா-
3. சல் முகைஊர் வாசல் அனுப்பு காவற்காற்கு வயிச்சப்பனும் பள்ளிப்பெருமாள் மாணிக்க னுள்ளிட்டாற்கு
4. கல்வெட்டி குடுத்தபடி இந்த அனுப்பு சீற்மை ஊதுசேற்றி அறகாவல் காற்க கடவார்களாகவும்
5. காற்குமிடத்து இந்த காவலாளியள் தர்மராசர் குப்பத்தில் குடியுமிருந்து இருந்து அடிவாரம் மேல்
6. மலைப்பற்று அம்மருதை ஊர் ஒன்றுக்கு அரைரேகைப்படி பொன் அம்பதும் இறலியூற்-
7. க்கு வடக்கு கொல்லைக்கு பொன் இருபதும் ஆக பொன் எழுபதும் இலக்கை ஆகக் கொண்டு பூறு-
8. வ முதலாக நடந்து வரும் பேறு உள்ளது பற்றிக் கொண்டு இந்த குப்பத்தில் செல்லப்பிள்ளையாற்கு
9. இருபத்துனாலு பணத்தின் கொல்லையும் ஆச்சப்பாலை விறுத்திக்கு அம்பது பணத்தின் கொல்லையும்
10. இறையிலி ஆக விட்டு நின்ற முதலுள்ளது அடங்கலும் தாங்களே அனுபவித்து நாட்டற்றம-
11. திதாரி தீந்து குடுத்த சந்திரா
12. தித்த வரையும் சுகத்திலே
13. இருக்கவும் உ இந்த ஊரி-
14. ல் தோட்டி காத்தான் உ

இது படைவீட்டின் முக்கிய வாசல்களாக விளங்கிய பெருமாள் குளத்து வாசல், முகையூர் வாசல் ஆகியவற்றின் காவல்காரருக்கு கொடுத்த ஊதிய ஏற்பாடு பற்றியது. இக்கல்வெட்டு உள்ள பாறைக்கு மேற்கிலும் கிழக்கிலும் இருமலைகள் முறையே 'பெருமாள் அடி மலை' என்றும் 'மண்மேட்டுமலை' என்றும் அழைக்கப்படுகின்றன. இந்த இரண்டு மலைகளுக்குமிடையில் சுமார் அரை கி.மீ. தூரத்திற்கு 150 செ.மீ. அகலத்திற்கு செங்கல் மதில் சுவர் ஒன்று இருந்தற்கான தடயங்கள் உள்ளன. இந்த மதில் சுவருக்கு இடையில் வாசல் ஒன்று இருந்துள்ளது. இதுவே பெருமாள்குளத்து வாசல் எனப்படும் படைவீட்டின் வடக்கு வாசலாகலாம். கல்வெட்டுப் பாறைக்கு அருகில் சாமியார்குளம் என்ற குளம் ஒன்றும் உள்ளது.

கல்வெட்டில் குறிப்பிடப்பெறும் இடப்பெயர்கள் கீழ்க்கண்டவாறு இப்போது இனங்காணலாம்: 1. அனுப்பு சீர்மை - அனந்தபுரம், 2. ஊது சேற்றி - ஊத்துக்குட்டை, 3. தர்மராசர்குப்பம் - குப்பம், 4. இறலியூர் - இரும்பிலி, 5. அம்மருதை - அமிர்தி, 6. கொல்லை - பள்ளக்கொல்லை, 7. பெருமாள்குளம் - சாமியார் குளம்.

---

இக்கல்வெட்டை ஆய்வு செய்ய உதவிய முனைவர் வெ. வேதாசலம் அவர்களுக்கு நன்றி.

# 29. அரங்காபுரம் கல்வெட்டு

ப. வெங்கடேசன், காவேரிப்பாக்கம்;
ம. காந்தி, வேலூர்.

இடம் : வேலூர் மாவட்டம், வேலூரிலிருந்து 25 கி.மீ. தொலைவில் உள்ள அரங்காபுரம் என்னும் ஊரில், கோவிந்தசாமி என்பவர் நிலத்தில் அமைந்துள்ள கற்பலகையில் இரண்டு பக்கமும் உள்ளது.

காலம் : 16-ஆம் நூற்றாண்டு.

செய்தி : உய்யக்கொண்டான் சோழபுரம் இராசேந்திர சோளிசுரமுடையார் கோயில் தானத்தார் வீரப்பாடியில் குடியேறும் பள்ளிகள் செலுத்தவேண்டிய வரி நிர்ணயம் செய்தது பற்றியது.

**முன்பக்கம்**

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. கீலக வருஷம்
3. வைகாசி மாதம்
4. 5 நியதி உய்யக்
5. கொண்டான் சோ-
6. ழபுரம் உடைய
7. இராசேந்திர சோ-
8. ளீசுரமுடையார்
9. கோயில் தானத்தா
10. ர் நாயனார் திருநா
11. மத்து காணி ஆன
12. தேவதான வீரபாடி
13. யில் குடிஏறும் பள்-
14. ளிகள் பாலாற்று வென்-
15. றார்க்கும் வேங்கடத்துக்-
16. கும் கல்லு வெட்டிகுடு
17. த்தப்படி இவ்வூர் அமுது
18. படியார் குடிஇருந்து
19. ஏற் இறங்கியும் பயிர்
20. செய்து வருகையில் குடி
21. இருக்க வேணும் என்று
22. சொல்லுகையில் எங்க-
23. ளுக்கு தடைப்படாது ஏக
24. மாநியங்களுக்கு வேண்
25. டின

26. குடி ஏறிக்கொள்ள
27. ச்செல்ல இசைவு ஓலை
28. செயது தருகையில்
29. .. இந்த வூரிலே
30 குடிஇருக்கும்
31. இடத்து மலைஆயகட்டு
32. த் தோரை வாசலுக்கு
33. [கை] வினைக்கு 15 பணமும்
34. ஏற் குடிக்கு யிரண்டு பணமும்
35. கொள்ளக் கடவது
36. ஆகவும் கொல்லைக்குத்
37. தொகை கழநி பொன்வ-
38. ரி ஏரிவாய்ப்புறவடை
39. மாவடை, மரவடை புற
40. வரி வாரமாஆகக் கொள்ளக்
41. கடவோமாகவும் இரு-
42. க்கை தொக்க வந்த...
43. தளை பொருள் கொள்ள
44. கடவோமாகவும்
45. செலுத்த மஞ்சாடை
46. வருங் கடங்கும்யிந்த க-
47. ல்லு வெட்டி முரி ஆக கொ-
48. ள்ளக்கடவது ஆகவும்
49. இவை பரமேசுரபட்டன் எழுத்து
50. இவை இரங்கனார் எழுத்து
51. இவை கோபால கணக்
52. கு தீரபதராயன் எழுத்து
53. இவை ...
54. ....
55. எழுத்து இவை வெங்கண்
56. ணாவையர் எழுத்து

---

# 30. பெரியகுளம் மடைக்கல்வெட்டு

**கு. சேதுராமன், மதுரை.**

*தேனி மாவடத்தில் பண்டைய பெருவழியில் அமைந்த முக்கிய வணிக நகரமாக 'பெரியகுளம்' என்ற ஊர் விளங்கியுள்ளது. இங்குள்ள பிற்காலப் பாண்டியர் கல்வெட்டுகளில் இது 'ஆலங்குளமான தேசியறிய எறிவீரபட்டினம்' இதனை உறுதிப்படுத்துகிறது. இவ்வூருக்கு நாயக்கர் காலத்திலேயே 'பெரியகுளம்' என்ற பெயர் ஏற்பட்டிருப்பதைக் கல்வெட்டு தெரிவிக்கிறது. பெரிய ஏரி ஒன்றினைச் சார்ந்த குடியிருப்பு என்ற பொருளில் இப்பெயர் வழங்கப்பட்டிருக்கிறது. இவ்வூரில் அமைந்த பழமையான ஏரியின் முதல்மடையில் (கங்காமடை) தமிழ்க் கல்வெட்டு ஒன்று காணப்படுகிறது. இது அம்மடையைப் பெரியகுளம் தென்கரைப் பகுதியைச் சார்ந்த நரசய்யன் மகன் அம்புலிங்கய்யனவர்கள் கி.பி. 1713-ல் திருத்தி அமைத்ததைத் தெரிவிக்கிறது.*

1. ஸ்வஸ்திஸ்ரீ சாருலி
2. வாகந சகாப்3தம்
3. 1635 இதன்
4. மேல் செல்லா நி
5. ன்ற விசய ஹு சி
6. த்திரை மீ 23 உ
7. திங்கள்கிளமை நா
8. ளில் தென்கரை
9. மகாசனங்களில்
10. நரசய்யனவர்கள்
11. புத்திரன் அம்புலி
12. ங்கய்ய னவர்கள் உ
13. பயம்.

---

# 31. உத்தமபாளையம் செப்பேடு

**மா. சந்திரமூர்த்தி, சென்னை.**

தேனி மாவட்டம் உத்தமபாளையத்தில் உள்ள முன்னாள் கோயில் கணக்கர் திரு.எஸ்.கே. நடராசன் அவர்களிடமிருந்து கட்டுரை ஆசிரிய ரால் ஒரு செப்பேடு பெறப்பட்டு மைப்படி எடுக்கப்பட்டது. 950 கிராம் எடையுள்ள இச்செப்பேடு 35 செ.மீ. நீளமும் 6 செ.மீ. அகலமும் உடை யது. முன்பக்கம் தமிழில் 20 வரிகளும் அதனிடையே தெலுங்கில் மூன்று வரிகளும் உள்ளன. பின்பக்கம் தமிழில் 20 வரிகள் உள்ளன. செப்பேட்டின் இடது பகுதி குவிந்து தாமரைமொட்டும் இதழுமாக அமைக்கப்பட்டுத் துளையிடப்பட்டுள்ளது. முன்பக்கம் இதழ்ப்பகுதி யில் சிவலிங்கமும் பீடத்தில் நிறுத்திய சூலமும் கோட்டுருவங்களாகப் பொறிக்கப்பட்டுள்ளன. செப்பேட்டின் இடைப்பகுதியில் 3 வரிகள் உள்ள தெலுங்குப் பகுதி முதலில் பொறிக்கப்பட்டு அதன் பிறகே தமிழ்ப் பகுதிகள் பொறிக்கப்பட்டுள்ளன.

காலம் : மதுரை நாயக்கர், சொக்கநாத நாயக்கர் (கி.பி. 1706-52).

செய்தி : சொக்கநாத நாயக்கர் ஆட்சியில் அமர மாகாணம் பெற் றிருந்த பங்காரு திருமலை நாயக்கருக்குச் சேர்ந்த கெங் கய நாயக்கர் பாளையத்தில் பிச்சகணக்கரால் கட்டப்பட்ட உத்தமபாளையத்தில் உள்ள திருக்காளத்தீ சுவரர் கோயில் அம்மன் ஞானாம்பிகையின் திருப்பல லக்கு மற்றும் திருவிளையாடல் திருவிழாக்களின் செலவுகளுக்காக கருங்காட்டுக்குளம் என்ற ஊர் நிலங் கள் வழங்கப்பட்ட செய்தி இதனில் சொல்லப்பட்டுள் ளது. இச்செப்பேட்டினை முத்தன் ஆசாரி எழுதியுள்ளார்.

**முன்பக்கம்**

1. உ சுா0ப4ஸ்ரீமன் மகாமண்டலேசுரன் ராசாதிராசன் ராசபரமேசுவரன்
2. ராச மாற்த்தாண்டன் ராசகெம்பீரன் பாஷைக்குத் தப்புவராய கண்டன்
3. அரியதள விபாடன் கண்டநாடு கொண்டு கொண்ட நாடு கொடா-
4. தான் மூவராய கண்டன் ஒட்டியதளவிபாடன் ஒட்டியர் மோகந் தவிந்த்தா-
5. ன் துலுக்கர் தளவிபாடன் துலுக்கர் மோகந் தவிழ்த்தான் எம்மண்டல-
6. முந் திறை கொண்டருளிய ராசநரேந்திரன் அசுபதி கெசபதி நரபதி

7. நவகோடி நாராயணன் ஆனைகொந்திராயர் வேங்கிடபதி ரா-
8. யர் விருப்பாட்சிராயர் விட்டிலராயர் கிட்டிணராயர் பிறவுட-
9. தேவராயர் ராமதேவராயர் சீரங்கராயருக்குப் பிறிதி ராச்சியம் ப-
10. ண்ணா நின்ற சாலிவாகன சகாற்த்தம் 1655 இதில் மேல் விசை-
11. நகரத்தில் வீத்திருந்து வீரசிம்மாசனரூடராக பிறுதிவி சாம்பிராச்சியம்
12. பண்ணி அருளாநின்ற காலத்தில் ஆனைகொந்தி உழ்ச்சாவடிக்கு செல்லா
13. நின்ற தாராபுரம் சீர்மையில் விசுவனாத னாயக்கரய்யனவர்கள் தி-
14. ருமலை னாயக்கரய்யனவர்கள் சொக்கனாத னாயக்கரய்யனவர்கள் ரங் கிஷ்ட்டி-
15. ன மு[த்]தி வீரப்பனாயக்கரய்யனவர்கள் விசைரங்ககிஷ்ட்டின சொக்கனா தனாயக்-
16. க ரய்யனவர்கள் ஸ்ரீபங்காருத் திருமலை னாயக்கரய்யனவர்களுக்கு அம ரமா-
17. காணமான தென்மண்டலம் பெரியகுளம் மாகாணத்தில் தென்கரையா–
18. ன அழநாடு பசுமலை (தெலுங்கில் உள்ள 3 வரிகள்)
19. சுரபிநதி உத்தமம் சூழ்ந்த கெங்கய நாயக்கர் பாளையத்தில் பிச்சக் கண–
20. க்கனுக்காக எழுந்தருளிய ஞானாம்பிகா சமேதரான திருக்காளத்தீசுபர சுவாமி

***பின்பக்கம்***

21. ஞானாம்பிகைக்கு பல்லக்குச் சேருவை திருவிளையாடலுக்கு உபைய
22. கட்டளையாக கருங்காட்டுக்குளம் தார ஷாசனப் பட்டையம் ப–
23. ண்ணிக் குடுத்தபடி பிறமாதிட்ஷ வருடம் கார்த்திகை மாதம் 1 தேதி பவற்–
24. ணமையும் ரோகணி நட்ஷெத்திரமும் சுபநாமயோகமும் கவலவாகரண–
25. மும் சோமோபராக புண்ணிய காலமும் சுபயோக சுபகரணமும் பெற்ற சுபை தினத்தில் ஸ்ரீராசாதி ராச–
26. ராசபரமேசுரன் ராசமாத்தாண்டன் ராசகெம்பீரன் ராச மீனாபயங்கரன் மது ராபுரவாராதி சுபாவ
27. அகண்டித லட்சுமிப் பிறசன்னரான மகாராயஷ்திறி வங்காரு திருமலை னாயக்ககரய்யனவர்கள் வி–
28. ட்டது ராயஷத்திறித் தளவாய்யனவர்கள் விக்கிறமபாண்டரயன் கால்ப் போக்கில் கருங்காட்-
29. டுக்குளம் நஞ்சை புஞ்சை சகல சமுதாயமும் ராசாயம் மேற்படித்தி காளத் தீசுபர சுவாமி ஞானாம் பிகைக்குப் ப–
30. ல்லக்குச் சேருவை திருவிளையாடலுக்கு உபையக் கட்டிளையிட்டபடிக்கி ஆசந்திராற்க தாயி ஆயமனு
31. பவித்துக்கொள்ளத்தக்கவும் இந்த கிராமம் னான்கெல்லையிலும் உள்ள பட்டி தொட்டி மா–

32. வடை மரவடை தோட்டம் தொடிகை நிதிநிஷேபம் சகல போகங்களும் அம்மன் பல்–
33. லக்கு சேருவைக் கட்டளைக்கு அனுபவித்துக் கொள்ளத்தக்கவும் இந்தப் படித் தாரபூறுவ ம–
34. ன சாதனம் செய்து குடுத்தபடியினாலே இந்த தன்ம்மத்துக்கு ஆர் விகா தம் செய்யுகிரா–
35. ர்களோ அவர்கள் கெங்கையிலே காறம் பசுவைக் கொண்ண பாவத்திலே போக
36. கடவராகவும் கெங்கையிலே மாதுரு கேமனம் செய்தபாவத்திலே போவா ராகவும்
37. இந்த தன்மம் பரிபாலம் பண்ணினவர்களுக்கு சந்தாண முத்தியும் சகல அசுரி
38. யமும் ராசபிரசாதமும் தெய்வப் பிறசாதமும் உண்டாவதாகவும் ம–
39. துரையிலே சொக்கலிங்கம் மீனாட்சியம்மனைச் சேவித்த பலனை அடை–
40. யக்கடவதாகவும் – முத்தன் ஆசாரி எளுத்து

## தெலுங்குப் பகுதி*

1. ஸ்ரீப3ங்கா3ரு திருமல நாயநிவாரு
2. கரும்க்3கா3ட்டுக் குளம் ஞாநாம்ப்3பி3கா அம்மாவாரிகி தா4ராபூருவ கமுகா3
3. இச்சிநாரம்க3நக ஆசந்த்3 ரார்கம்கா3 அநுப4விந்சு கொநேதி3 ஸ்ரீராமா

*இப்பகுதியைப் படிக்க உதவிய தெலுங்குப் பேராசிரியர் பி.எம். உமா அவர்களுக்கு நன்றி.



படம் 31 உத்தமபாளையம் செப்பேடு.

# 32. கற்பூரச் செட்டி எனப்படும் உப்பிலிய நாயக்கர் மடச் செப்பேடு

கி.ஸ்ரீதரன், திருச்சிராப்பள்ளி.

இடம் : கரூர் மாவட்டம், குளித்தலை வட்டம், நங்கவரத்தைச் சேர்ந்த திரு. வே. பெருமாள் அவர்கள் வசம் செப்பேடு உள்ளது.

காலம் : கி.பி. 1716.

செய்தி : இத் தெலுங்கு மொழிச் செப்பேடு திருச்சிராப்பள்ளி மாவட்டம், திருவரங்கத்தில் உள்ள கற்பூரச் செட்டிகள் (உப்பிலய நாயக்கர்) மடம் பற்றியது. இதன் அளவு 22 × 16 செ.மீ இச்செப்பேட்டின் செய்திச் சுருக்கம் கீழே தரப்பட்டுள்ளது.

(மதுரை நாயக்க அரசன்) சொக்கநாத நாயக்கர் பேரனும் ரங்க கிருஷ்ணமுத்து வீரப்ப நாயக்கரின் மகனுமான விஜயரங்க சொக்கநாத நாயக்கர் அவர்கள் நவராத்திரிக் கொலு விழாவில் வாணப்பட்டரை இயக்கும் கற்பூர செட்டிகளான நங்கபுரம் அம்மணமார நாயுடு, பீம நாயக்கன் பாளையம் திம்ம நாயுடு, ஜைமங்கலம் கஸ்தூரி நாயுடு பெராட்டூர் ஸ்ரீரங்கநாயுடு, கொடுந்தர வட்டல நாயுடு ஆகியோரின் வாண வித்தையைப் பார்த்து மகிழ்ந்து அவர்களுக்கு அன்பளிப்பு வழங்கினார். அதாவது நகரத்தில் திருமுகவாசல் ராயகோபுரத்துக்குக் கிழக்கு ஜம்புகேசுவரத்துக்குப் போகும் வழியில் 16-சாலை மண்டபத்துக்கு 180 அடிக்கு 100 அடி இடம் வழங்கப்பட்டது. இதற்கு மாறாக கற்பூர செட்டி வம்சத்தினர் ஆண்டுக்கு அரண்மனைக்கு வாணம் உப்பு நூறு மணங்கு கொடுத்து வர வேண்டும். இந்தச் செப்பேடு கோவிந்தய்யன் அனுமதியின் பேரில் வெட்கட்ராவு என்பவர் எழுதினார்.

இச்செப்பேட்டினை மொழிபெயர்த்துதவினார் பேரா.எ. சுப்பராயலு.

# 33. மூன்றாம் திருவேங்கடப்பிள்ளையின் விண்ணப்பம்

*ஒர்சே மா.கோபாலகிருட்டினன், பாரிஸ், பிரான்சு.*

பதினெட்டாம் நூற்றாண்டில் புதுச்சேரியில் வாழ்ந்த ஆனந்தரங்கப் பிள்ளையின் நாட்குறிப்பு பற்றி தமிழ்ச் சமூகம் சிறிது சிறிதாக அறிந்து வருகின்றது.

அந்நாட்குறிப்பின் 1760-1761ஆம் ஆண்டுப் பகுதிகள் அவருடைய தம்பி மகனாரான அப்பாவு என்றழைக்கப்பட்ட மூன்றாம் திருவேங்க டப்பிள்ளை தம் கையாலோ, எழுத்தரைக் கொண்டோ எழுதிவைக்கப் பட்டவை என்று கூற இடமிருக்கிறது. மேலும், ஆனந்தரங்கப்பிள்ளை நோய்வாய்ப்பட்டபோது, அவருடைய கடைசி நாள் வரையில் புதுவை யில் இருந்து பணிவிடை செய்து, கடைசிக் கடன்களை முடித்தவரும் இம் மூன்றாம் திருவேங்கடப்பிள்ளையே. இவருடைய குறிப்புகள் வாயிலாக, ஆனந்தரங்கப்பிள்ளையின் கடைசி நாட்களில் நடந்த வையை அறியவும் முடிகின்றது[1].

ஆனந்தரங்கப்பிள்ளையின் நாட்குறிப்புகளை நகலெடுத்து வைத்த எதுவார் அரியேல் (E.Ariel) என்பவரே அவருடைய சந்ததியார்களான மூன்றாம் திருவேங்கடப்பிள்ளையின் நாட்குறிப்பையும் நான்காம் திரு வேங்கடப்பிள்ளையின் நாட்குறிப்பையும் நகலெடுத்து வைத்திருக்கி றார். இவ்விருவர் குறிப்பு நகல்களிலும் பலவிதமான செய்திகள் பரவி யிருக்கின்றன. காட்டாக, பின்னாட்களில் மூன்றாம் திருவேங்கடப் பிள்ளை பிரெஞ்சுக்காரருக்கு எழுதிய விண்ணப்பத்தை இங்கே வெளி யிடுகின்றோம். இதில் சில விவரங்கள் ஏற்கனவே பரவலாகத் தெரிந்தி ருப்பினும் மற்றவை முற்றிலும் புதியவை. 18ஆம் நூற்றாண்டு வரலாற் றாய்வுக்குப் பயன்படக்கூடியவை.

அதில், மூன்றாம் திருவேங்கடப்பிள்ளை தம் குடும்பத்தின் வர லாற்றையும் புதுச்சேரி ஆங்கிலேயர் வசமான பின், தாம் பட்ட துன்பங் களையும் நினைவுபடுத்துகின்றார். 1765இல் புதுவைக்குப் பிரெஞ்சுக் காரர் திரும்பிய பின் தன் மூதாதையர் செய்த வேலையைத் தமக்குக் கேட்டோ அல்லது தமக்கு வரவேண்டிய பணத்தைக் கேட்பதற்கோ அவர் இவ்விண்ணப்பத்தை எழுதியிருக்கவேண்டும். இம்மடலின் கடைசிப் பகுதி கிடைக்காததால், இவருடைய வேண்டுகோள் என்ன வென்பதை தெரிந்துகொள்ள முடியவில்லை. எதிர்காலத்தில் வேறு ஆதாரம் கிடைத்தால் இதைச் சரியான முறையில் தெளிவாக்கமுடியும்.

1749இல் சகன்னாதா வென்ற புதுச்சேரித் தமிழ் எழுத்தர் பெயர்த் தெழுதி, இவரும் தைரியனாதா என்கிற மற்றொரு எழுத்தரும் தொகுத் தது என்று எ.அரியேல் தன் கையால் குறித்துக் கையொப்பமிட்டிருக்கி றார்.

றக்கேத்து (Fr.requête = request)

சிரீ ராம செயம்

1715-1761[2]

புதுச்சேரிப்பட்டணம் தோன்றிய முசே மடுத்தேன் (Mr. Martin)[3] னாள் முதலாக எங்கள் பமீலிலே (Fr.famille = family) கும்பினீர்க் காரியமும் வற்த் தகமும் பாத்துக்கொண்டு வந்தது. இதுக்குள்ளே என் பாட்டனார் திருவேங் கடப்பிள்ளை கும்பினீர் காரியத்துக்கு நிறுவாகியாக இருந்த பெரிய தகப்ப னார் றங்கப்பிள்ளையும் கும்பினீர்க் காரியத்திலே இங்கிறீசுக்காறர் கலாபத் திலே சென்னப்பட்டணம் பிடிக்கப்பட்ட பிறையாசமும் அதுள்ளளவிலே துலுக்கர் விறோதிச்சு சண்டைக்கு ஆரம்பம் பண்ணி நடத்த அதுகளிலே எந் தப் பிறையாசைப்படவேணுமோ அந்தப் பிறையாசப்பட்டு அப்பொ நபாபு அன்வர்தி கான், பின்னை மாப்போசு கான், மமுதல்லி வெகு தளத்துடனே தேவனாம்பட்டணம் இங்கிறீசுக்காறர் ஆதரவு பண்ணிக்கொண்டு வில்லிய நல்லூர் ஆத்து ஒட்டு மட்டும் வந்து இறங்கி சண்டைக்கு ஆரம்பம் பண்ணி நடந்ததுக்கு, தாம் தானே போயி நபாபு மாப்போசு கானுட(ன்) பேசி சமா தான(ம்) பண்ணி, அவரைக் கோட்டைக்குள்ளாக அழைச்சுவந்து முசே திப் பிளேக்கிசு (Mr. Dupleix)க்கும் அவருக்கும் சமாதானம் பண்ணி அனுப்பிவிச் சதும், பிற்பாடு இந்தப் பட்டணத்தின் பேரிலே இங்கிறீசுக்காறர் சண்டை பண்ணபோது பட்ட பிறையாசமும் உடனே இராயத்து மோதீனு கான், சந்தா சாயபு அவர்கள் வந்தபோது அப்பொ நடந்த காரியத்திலே பிறையா சப்பட்டு கும்பினீருக்கு சாகீராக வில்லியநல்லூர் சீமை வாகூர்ச் சீர்மை வரப் பிறையாசைப்பட்டு வாங்கினதும், அப்பொ குடுத்த பணத்துக்கு தனக்கா வாக சிறுது சீமையும் குத்தகை சிறுது சீமை நடந்துக்கொண்டு வரச்சே, உடனே நாசர் சங்கு லஷ்சம் குதிரையுடனே வந்தபோது இராயத்து மோதீனு கானை பிடித்துக்கொண்டு காவல் பண்ணிக்கொள்ள சந்தா சாயபு புதுச்சே ரிக்கு வந்துவிட்டார்.

அப்பொ வழுதாவூ ரண்டையிலே இறங்கியிருந்த நாசரு சங்கு ஆற்க் காட்டுக்கு போகச்சே நம்முட ஊருக்கு ஒரு துரும்பாகிலும் வரவொட்டா மல் சுத்திலும் பந்தோபஸ்து பண்ணி இருக்க, அப்பொ மறிக்கி துப்பிளீக்கிசு (Marquis Dupleix) அவர்கள் சந்தா சாயபுவை அழைச்சு சீமையை கட்ட வேணு மெண்ணு சொல்லி அவர் தமக்குள்ளெ இல்லையெ எண்ணு

சொல்ல, இருவரும் என் பெரிய தகப்பனாரைப் பாத்து துலுக்கர் இத்தனை பிலமாய் தங்கள் மனுஷரை வைத்து பத்திரப்படுத்திக் கொண்டு இருக்குறார் களே அதுக்கு உம்முட மனுஷரை அனுப்பிவித்து அவர்கள் றாணுவுகளை துரத்திவிட்டு அமுல் பந்தோபஸ்து பண்ணவேணு மெண்ணார்கள். அதுக்கு றாணு முதலான சாமான்கள் குடுத்தால் சத்துராதிகளைத் துரத்தலா மென்று சொன்னார். அதுக்கு இப்பொ இருக்குற றாணுவு கொஞ்சம் இந்த வேளை கோட்டையைப் பத்திப் படுத்திக் கொள்ள வேணும், நீர் தானே றாணு வைத்து சத்துரு றாணுவை துரத்தி சீமா மூலமும் பந்தோபஸ்து பண்ண வோணு மெண்ணு சொல்ல, அப்படியே மறக்கி துப்புளெக்கிசு அவர்கள் உத்தாரப்படிக்கு அமுல்தாரரையும் றாணுவையும் அனுப்பி முகிவாய் றாணுவை யடித்து ஓட்டிவிட்டு அமுல் பந்துபஸ்து பண்ணிக்கொண்டு வரு கையில், இந்த கபுறு நாசறு சங்கு கேட்டு முப்பதினாயிரம் குதிரையும் இரு பதுனாயிரம் றாணுவும் இங்கிறீசுக்காறர் கொப்பையும் இந்த மம்முதல்லி கானையும் கூட்டி அனுப்பினார்கள். அவர்கள் திருவதி அண்டையிலே சேந்து கலகம் பண்ணினார்கள். அதியமாக சிப்பந்தி வைச்சு புதுச்சேரியிலெ இருந்து சிறுது றாணு முதலான சாமான்களும் அனுப்பி மம்முதல்லியுடனெ சண்டை போடுகையில் அஞ்சு குதிரையுடனெ ஓடிப்போனான். கருங்குழி, செங்கல்ப்பட்டு அவடங்களுக்கு துலுக்க துமாசு தான், டசுபுசிக்கன் கான், மகம்மது அமிறால் பக்ஷி இப்படிப்பட்ட சறுதார்களையும் குதிரை றாணுக ளையும் மனுப்பி கலாபம் பண்ணச்சொன்னார். அவடத்திலேயும் சுவாமியு டைய தயவுனாலே பிறாஞ்சு மகாராசாவுனுடைய காரியமெல்லாம் அனுகூ லமாச்சுது. இதிலெ எங்கள் சுய செனத்திலெ நாற்பத்தஞ்சு பேர் சேதம் பிற் பாடு நாசறு சங்கு ஆற்காடு விட்டு பிறப்பட்டு, செஞ்சி அண்டையிலெ வந்து இறங்கினவிடத்திலெ அவர்களுக்கும் பிறாஞ்சுக்காறருக்கும் சண்டை யாய் நாசறுசங்கு செத்தான்.

பிற்பாடு இதயத்து மெதினு கானவர்கள் புதுச்சேரிக்கு வந்து பட்டங் கட்டிக்கொண்டு, ஆற்காட்டு சுபா என் பெரிய தகப்பனாருக்கு குடுக்க பேசி நிண்ணையம் பண்ணி பறவானா எழுதுகுற சமையத்திலே, இந்த சேதி சந்தா சாயபு அறிந்து கடப்பை கந்தனூரானையும் பின்னையும் பெரிய மனு ஷரையும் அழைத்துக்கொண்டு மறிக்கி துப்பிளேக்கிசு அவர்களுக்கு சொல்லி, அவர்களையுங் கொண்டு இராயத்து மோதீனு கானுக்கு சொல்லி, தீராத பட்சமாய் ஆர்காட்டு சுபா சந்தா சாயபுக்கு குடுத்தார். பிற்பாடு இதா யத்து மோதீனு கானும் துப்பிளெக்கிசும் என் பெரிய தகப்பனாரை அழைப் பித்து மெத்தவும் உச்சாகப்படுத்தி, மூவாயிரம் குதிரைக்கு மனுசுபாவும் சாகீ ரும் குடுத்தார்கள். இதுள்ளளவிலெ சந்தா சாயபு விறோதிச்சு, மதாம் துப்பு ளேக்கிசுக்கு சொல்லி, எங்கள் மாரிபத்திலெ ஒண்ணும் நடவாமல் தாங்கள் விசாரித்துக்கொண்டு சீமைக்கு பாப்பாய பிள்ளையை வைச்சுக்கொண்டு நடந்து வரப்பட்ட காரியங்களிலெ நடந்ததும் தங்களுக்கு தெரிஞ்சே இருக்

கும். பிற்பாடு முசே குதை[4] (Mr. Godeheu) அவர்கள் வந்து, இதையெல் லாம் விசாரித்து, சீமை உள்பட சகல காரியம் எங்களுக்குள்ளெ நடப்பிச் சார். அவருக்கு பிற்க்காலம் முசெ லெறி (Mr. Leyrit) அவர்களும்[5] அந்தப் படியே நடப்பிச்சுக் கொண்டு வரச்செ, சிறுது மனுஷர் சேந்து சீமை காரியத் திலெ விறோதம் பண்ணிக்கொண்டு வந்தார்கள். அது சங்கதிகளும் தங்க ளுக்குத் தெரிந்திருக்கும். அதனாலெ கும்பினீர் காரியத்துக்கும் பட்டணத் துக் காரியத்துக்கும் தாட்சியுண்டு. ஆனால் முசெ லலி (Mr. Lally) அவர்கள்[6] வந்த பிற்பாடு சண்டைமுகத்திலெ எல்லா காரியமும் பல விதத்திலும் நடந் துகொண்டு வந்துது. அதுகளும் தங்களுக்குத் தெரிஞ்சிருக்கும். அப்பொ என் பெரிய தகப்பனாருடனெ னானும் கூட காரியம் பாத்தேன். அப்பொ சிலவுக்கு கும்பினீரிலெ பணமில்லாமல் பட்டணத்திலெ யுண்டாகிய பேர் கையிலெ பணம் வாங்கின போது, ரெண்டு தடவையாக இருபதுனாயிரம் றூபாய் குடுத்திருக்குறோம். இதிலெ எங்கள் வீட்டிலெ இருந்த குதிரை, ஒட் டகம், வண்டிமாடுகள் — றூபாய் மட்டுக்கு வரவேணும். இதல்லாமல், எங் கள் பமீலுகளுடைய (Fr.famile = family) தட்டு முட்டு உள்பட ஒரு மால்ப் ((Fr.male) பொட்டியிலெ போட்டு இங்கிறீசுக்காறர் பசும்போடுதும்பேரிலெ ஒரு படகு சாபா எண்கிற பிறசனெர் (Fr.prisonnier = prisoner) எறிப்போன திலெ ஏத்தி சதுரங்கப்பட்டணத்துக்கு அனுப்பிவிச்சது காத்தில்லாமல் ஆலம்பரவைப் பிடிச்சு சாப்பிட யிரங்கினவிடத்திலெ இங்கிறீசுக்காறர் எடுத் துக்கொண்டார்கள். இதல்லாமல் முச்சியன் வீட்டு சந்துலெ சொல்தாதுக ளைக் காவல் வச்சிருந்தவிடத்திலெ அவர்கள் றாத்திரி அவடத்திலெ இருக் கப்பட்ட எங்கள் கிடங்கிலெ இருந்து தந்தக் கொம்பு, பட்டு னூல், நாடா, அபினி முதலாகிய தினுசுகன் பதினாயிரம் ரூபாய் சரக்கு கொள்ளையிட்டுக் கொண்டு போனார்கள். அதை முசே லலி (Mr. Lally) முசே லெறி (Mr. Leyrit) யுடனே சொல்ல, அவர்கள் கும்மாந்தாமை (Fr. commandant) அனுப்பி பாத்து அவர்களையும் தாக்கீது பண்ணார்கள். பட்டணத்திலெ யுண்டான வர்க ளெல்லாரும் வெளியே போகச்செ போக யிடமில்லாமலிருக்கச்செ, துரைகளுடனெ எங்கள் பமீலுக (Fr. famille = family) ளெல்லாரும் இங்கே இருக்குறார்களே வெள்ளக்காறர் பெண்டுகள் போறத்துக்கு பசுப்போடுது அழைப்பிச்சு குடுக்க வேணு மெண்ணு கேட்டதுக்கு, கூடாது நீதானெ பிறேத்தனம் பண்ணிப் பாரெண்ணு சொன்னார். அதும்பேரிலெ சென்னப் பட்டணம் துரை மெஸ்தர் பிக்காட்டு (Major Pigot) மட்டும் பிறேத்தனம் பண் ணோம். அவர் உத்தர் குடுக்கமாட்டோம் மெண்ணு சொன்னார். அந்த சேதி யும் முசே லெறியுடனே சொன்னதுக்கு எப்படியாகிலும் உன்னுட பமீலை (family) வெளியே அனுப்பிவிடு யெண்ணு சொன்னார். அப்போ மதாம் லாசு (Mme Law) பசுப்போடுதும்பேரிலெ போகச்செ அவரைக் கண்டு பேசு னொம். அவர் அப்பறம் கொண்டுபோய் விட்டுவிடுகுறொ மெண்ணு சொன்னத்திலெ யெங்கள் பமீலையும் கூடக் கூட்டி அனுப்பிவிச்சொம்.

குண்டுத்தாழையிலெ மடக்கிக்கொண்டு போட்டுக்கொண்டு இருந்தது. கையிலே யிருந்த தட்டு முட்டுகளுள்பட பிடவை, குதிரை, டோலிகள் பதி னாயிரம் வராகனுது பரிச்சுக் கொண்டு திரும்பி விட்டார்கள். பிற்பாடு கறண்ணால் கோட்டு (Cl.Coote) மட்டும் பிறெத்தனம் பண்ணி ரெண்டாயிரம் வராகன் குடுக்கப் பேசி, அதுக்கு என் மைத்துனனை பிணை வச்சு எங்கள் பமீலை தயங்கம்பாடி சேர அனுப்பிவிச்சோம். பிற்பாடு அந்தப்பணம் நாகப்பட்டணத்து குடுத்தியோர் (courtier) குடுத்து அழைப்பிச்சுக் கொண்டார். இத்தனை அவதிப்பட்டுக் கொண்டிருக்கச்செ பட்டணத்திலுண்டாகிய சகல செனங்களும் போய் விட்டார்கள். யெங்களை மாத்திரம் தங்களுக்கத்த பிற கார மெண்ணு இருக்கச் சொன்னார்கள். நாங்கள் கூட இருந்து பட்டணம் ஒப்பிக்க மூணு னாளெண்ணச்செ யென் பெரிய தகப்பனார்[7] இறந்து போனார். கோட்டை இங்கிரீசுக்காறர் வசம் ஆன பிற்பாடு முசே லெறி அவர்கள் உத்தாரப்படிக்கு கெவுனர் பிக்காட் அவர்கள் (Govr. Pigot) பேட்டி பண்ணிக்கொண்டு தட்டு முட்டு சங்கதியும் கேட்டோம். அவரும் நல்லது உங்கள் பெரியவர்கள் பூறுவம் இருந்தது சென்னப்பட்டணம் அல்லவா, இப்பவும் அவடத்திலே வந்திருந்தால் நண்ணாய் நடப்பிக்குறொ மெண்ணு சொன்னார். யெங்கள் பமீலுகளெல்லாம் தயங்கம்பாடியிலே போயிருக்கு றார்கள். யென் பெரிய தகப்பனார் செத்துப்போயிருக்கிறாரெ, அவருக்கு ஒப்பீசு (religious- office) செய்யவேணும், அவடத்துக்குப் போய், அப்புறம் பாத்துக்கொள்ள வேண்டிய தெண்ணு சொன்னோம். நீ சொல்லுகிறது தெரிஞ்சுது, தயங்கம்பாடிக்குத்தானே போங்கொளெண்ணு பசுப்போடுதும் குடுத்து, தட்டு முட்டுக்கு பட்டணமே பொன பிற்பாடு சொல்லுகுறோம் மெண்ணார். அந்த சேதியும் லெறி அவர்கள் முதலாகிய குமுசலியேருடனெ (councillors) சொல்லி இருக்கச்செ நபாபு மம்முதல்லி கான் ஊருக்குள்ளே வந்து கோட்டை கைவசப்பட்டதுக்கு இப்போ இருக்குற குவறணமாவுலெ அவர்களைச் சேந்தவர்கள் கையிலே நசர் வாங்கினார். அப்போ எனக்கு சொல்லி அனுப்பிவிச்சது நீர் வந்து நம்முட பேட்டி பண்ணிக்கொண்டால் உங்களுக்கு நடந்து வந்த கிறாமம் முதலாகியது விட்டு நடப்பிக்குறோ மெண்ணு வங்காளத்து நபா செக்கு பத்தே ரல்லிகானுடனெ சொல்லியனுப் பிவிச்சார். என் பெரிய தகப்பன் செத்துப் போயிருக்குறபடியினாலெ வரக் கூடாது யெண்ணு சொல்லி அனுப்பிவிச்சேன். அந்த அடத்தின்பேரிலெ பதி னாயிரம் றூபாய்க்கு வாங்கி இருந்த ஆனையை பலொக்காரத்திலெ பிடிச் சுக்கொண்டு போனார். அந்த சேதியை முசெ லெறி அவர்களுடனெ சொன் னதுக்கு முசெ லாசை அனுப்பி கெவுனர் பிக்கட்டுக்கு சொல்லி அனுப்பி னார். அவர் போனவிடத்திலெ – வினால் கேட்டுதாம் உத்தாரம் பண் ணினொ மெண்ணு சொல்லி, இனி குடுத்துவிட்டா ருமக்கு ரொம்ப அவ மான மெண்ணு சொல்லுகுறார், இது மாத்திரம் இருக்கட்டு மெண்ணு சொன் னதாக வந்து சொன்னார். யித்தனையும் குடுத்துப் போட்டு, முசெ லெறி

முதலாகிய குமுசலியெர்கள் இருக்குமட்டும் இருந்து, அவர் பிறப்பட்டு மஞ் சங்குப்பம் போன உடனெ அவர்கள் கையிலெ அனுப்பிவிச்சுக் கொண்டு தயங்கம்பாடி சேந்தேன். இதல்லாமல் இந்தப் பட்டணத்திலெ வீடுகளும் கிடங்கும் முப்பத்தஞ்சு இருக்கப்பட்டது அதுகள் சிறுது சரிப்போனபடி பரிச் சுக்கொண்டுபோனார்கள். சிறுது கொளுத்திப்போட்டார்கள். குடி இருந்த வீடுகளை சிறுது கும்பின் பிரிச்சு சாரம் திருவேங்கடபிள்ளை சாவடி அந்த இடத்தி(ல்) சேத்து வைச்சதிலெ ரெண்டு வருஷத்துக்கு பிற....

Copié sur une feuille détachée par Dja(ga)nnâda, collationné par le même et Dayiriyanâda - 1849, EA. (Copied on a separate paper by Dja(ga)nnatha, collated by the same and Dairiyanatha, 1849, EA)

---

1. பார்க்க: ஆனந்தரங்கப்பிள்ளையின் இறுதி நாட்களும் புதுச்சேரியின் வீழ்ச்சியும் (1760-61), *வரலாறு* 6, திருச்சிராப்பள்ளி, 1996, ப.73-81.
2. இது எ. அரியேலின் குறிப்பு.
3. புதுச்சேரியை முதன்முதல் மலரச்செய்த இவரே முதல் ஆளுனராவார்.
4. துய்பிளேகிசை எடுத்துவிட்டு, இந்தியாவில் பிரெஞ்சிந்தியக் கும்பினி யின் காரியங்களைச் சரிப்படுத்த அனுப்பப்பட்ட இவர் 1754ஆம் ஆண்டு வந்து, 1755இல் கிளம்பிச் சென்றார்.
5. இவர் 1755ஆம் ஆண்டு வந்து, 1761 வரை புதுச்சேரி ஆளுனராக இருந் தார்.
6. பிரஞ்சுப் படைத் தலைவராக 1758ஆம் ஆண்டு புதுச்சேரி வந்த இவர், பல விடங்களில் சண்டை செய்த பின், கடைசியில் ஆங்கிலேயரிடம் 1761 ஆம் ஆண்டு சரணடைந்தார்.
7. ஆனந்தரங்கப்பிள்ளை 1761ஆம் ஆண்டு சனவரி மாதம் 11ஆம் தேதி மர ணமடைந்தார்.

# 34. திருவான்மியூர் பிள்ளையார் கல்வெட்டு

சி. வசந்தி, சென்னை.

இடம் : சென்னையின் ஒரு பகுதியாகிய திருவான்மியூரில் பிள்ளையார் கோயில் தெருவில் ஒரு வீட்டின் முன் உள்ள பலகைக் கல்.

காலம் : 5.12.1776

செய்தி : இக்கல்வெட்டின் மேல்பகுதியில் பிள்ளையாரின் உருவம் பொறிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டு தமிழ், ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளிலும் உள்ளது. கி.பி. 1776ல் திருவான்மியூர், தொண்டை மண்டலத்தில் சந்திரகிரி ராஜ்யத்தில் காஞ்சி தேசத்தில் பூவிருந்தவல்லி சீர்மையில், புலியூர் கோட்டத்தில் கோட்டூர் நாட்டில் இருந்தது எனத் தெரிகின்றது. இதனில் சொல்லப்படும் எல்லைகள் இப்பொழுது கல்வெட்டு உள்ள தெருவில் இருக்கும் பிள்ளையார் கோயிலுக்குப் பொருந்துவதாக உள்ளன. இக்கல்வெட்டு குறிப்பிடும் கைலாசகுளம், தற்போது மருதீஸ்வரர் கோயிலுக்குக் கிழக்கில் பாபநாசினிக்குளம் என வழங்கப்படுகின்றது. இக்கல்வெட்டில் வழங்கப்பட்ட நிலத்தின் அளவு, தமிழ்ப்பகுதியில் 48 அடிக்கோலால் அளந்து வந்த 20 காணி மாறிய நான்கு காணி எனவும், ஆங்கிலப் பகுதியில நான்கு ஏக்கர் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. கி.பி.18ஆம் நாற்றாண்டில் ஆங்கிலத்தில் வழங்கப்படும் ஏக்கருக்குச் சமமாக காணி என்ற பெயரைக் குறித்தனர் என்பது தெளிவாகிறது. பழைய அளவான 5 காணி புதிய அளவான 1 காணி (ஏக்கர்)க்கு நிகர் என்று அறிகின்றோம்.

## 34:1

1. சொஸ்த ஸ்ரீ விசையாற்புத
2. சாலிவாகன சகாப்த்தம்
3. 1699க்கு மேல் கலியாப்த்த(ம்)
4. 4878 பிறவாதி கெதா
5. பத்தம் 30க்கு மேல் செல்லாநின்ற ஏவிளம்பி
6. காற்கிகை மீ 24உ தொண்டை மண்டலத்தில் சந்திரகிரி றா சியத்தில்
7. காஞ்சி தேசத்தில் பூவிருந்தவல்லி சீமையில் புலியூர் கோட்டத்தில்
8. கோட்டூர் நாட்டில் திருவான்மியூர் கிறாமத்தாரனவரும் ஏகோமவச்

9. சு அகிலாண்ட கோடி பிறமாண்னாயகர்ராகிய மருந்தீசுவரா
10. ஸ்தனத்தில் ஊருக்கு வடவண்டை கையிலாச தம்பத்துக்கு தென்-
11. ணண்டை பாட்டை வழிக்கி கீழண்டை காணார் வீட்டுக்கு மேலண்-
12. டை யிந்த சதிரத்தில் எங்கள் கிறாம வெளிப் பிடிக்கடையில் 48 அடி
13. கோலாலளந்து 20க்கு காணி ஆகமாறுகாணி 4 யிந்த காணி
14. னாலும் சென்னபட்டணத்திலிருக்கு வாணுவர் ஆயிரத் தொருவரு-
15. க்குந்தற்மத்துக்கு யெழுதிக் குடுத்தோம்யிந்த நாலு காணி சதிருதி-
16. லே பிள்ளையர் கோவில் கட்டி மாவடை மரவடை நந்தவனம்
17. (வச்சு)தற்மம் பண்ணிக் கொள்ளுகறது யிந்தப்படி நாங்கள்
18. அனைவரும் மனப்பூர்வமாய் எழூத்திக் குடுத்தொம் யிந்த தற்-
19. மம் சந்திர ஆதித்திய புத்திர பவித்திற பாரம் பரியமாய்
20. பண்ணிக் கொள்ளுகிறது யிந்த தற்ம சாதினம் மருந்தீ-
21. சுவரர் சொக்கநாயகியம்மனறிய எழூதிக் குடுத்தொம்
22. சபாபதி குருக்கள் கையெழுத்து வேதாத்திறி குருக்கள்
23. கை எழுத்து ஆறுமுக குருக்கள் கை எழுத்து முத்து
24. குருக்கள் கை எழுத்து மருந்தப்ப குருக்கள் கை எழுத்து
25. ஊர் கணக்கு வமதப் பிள்ளை கை எழுத்து மருந்தப்பி-
26. ள்ளை கை எழுத்து குருசுவாமி பாதத்துக்கும் ஆயிரத் தொரு-
27. வர் பாதத்துக்கும் தாது மகரிஷி கோத்தரம் முத்து குமரப்ப செ-
28. ட்டி குமாரன் அடியென் குருநாதன் நித்தியகாலம் ஊட்ட.....
29. கைக் கொண்டிருக்கிறான் உ

## 34:2

1. 1776 5th December we the inhabitants of
2. Trivaumboor within District of
3. Poonamallee do hereby grant and
4. Confirm unto one thousand (one)
5. tribes of oilmongers at Madras the
6. four acres of land with a condition
7. that they are to set flower plants
8. of a build charity house of Pillayar Pa-
9. goda of all such kind of charitable
10. works thus we the above inhabitants
11. Unanimously gave this deed of [gift]
12. Under our hands to the above [related]
13. oilmongers signed sabaupathy gu-
14. rucal Vadaudri gurucal Arumuga
15. gurucal Mutu gurucal Marrunda [pa]
16. gurucal Vamada Pillah clerk to the
17. Village Marundapillah.

---

திருவான்மியூர் வழக்கறிஞர் திரு.பி.ஏ. கோபாலகிருஷ்ணன் தந்த தகவலின்படி கல்வெட்டு அறிந்து படியெடுக்கப்பட்டது.

# 35. சிலிமனாபாத்தில் தமிழ்க்கல்வெட்டு

சு. பன்னீர் செல்வம், மைசூர்

இடம் : மத்தியப்பிரதேசம், ஜபல்பூர் மாவட்டம், சிஹோரி வட்டம், சிலிமனாபாத் காவல் நிலையத்தில் உள்ள நினைவுக் கட்டிடம் அருகில் உள்ள இரு கற்களில்*.

காலம் : 1. கி.பி. 1857, நவம்பர்; 2. 1858 மே.

செய்தி : இவ்விரு கல்லறைக் கல்வெட்டுகளிலும் குறிப்பிடப் பட்டுள்ள சிலிமனாபாத் என்ற இடம் ஆங்கிலேயர் அரசின் கீழிருந்த இராணுவப் பிரிவில் கி.பி. 1829-ஆம் ஆண்டு நரபதா என்ற மாவட்டத்தில் குற்றவியல் பிரிவிற்கு ஆணையராக நியமனம் செய்யப்பட்ட சிலமான் கர்னல் டபுள்யூ.எம். ஹென்ஹி[1] என்பவரின் நினைவாக உருவாக்கப்பட்ட இடமாகும். தற்பொழுதும் இக் கல்வெட்டுகள் உள்ள காவல் நிலையத்தில் கர்னல் சிலிமானின் பெயரில் நினைவுக் கட்டிடம் காணப்படுகிறது. முறையே 1857-இலும், 1858-இலும் கிழக்கிந்திய கும்பனிக்குச் சேர்ந்த மதராஸ் (சென்னை) படைப்பிரிவுகளில் பணியாற்றிய இரு தமிழ் வீரர்கள் உயிர்நீத்த செய்தியும் அவர்களுக்கு நினைவுச் சின்னம் எழுப்பப் பட்ட செய்தியும் இவ்விரு கல்வெட்டுகளில் உள்ளன. இந்த வீரர்கள் இருவரும் இறந்த காலம் வட இந்தியாவில் 1857ஆம் ஆண்டைய சிப்பாய்ப் புரட்சி நடந்த காலமாகும்.

## 35:1

1. 1857 வருஷம் நவ-
2. ம்பற் மீ 4தி மடறாஷ்
3. ஆட்டில்லெறி 3-னா
4. பட்டாளம் டி கும்பனி
5. கன்லஷ்க்காற் றாமசாமி
6. முருவாடா சண்ட-
7. யில் குண்டு நெத்தி-
8. யில் பட்டு வெள்ளி-
9. கிழமை காலம்பற

10. $6\frac{1}{2}$ மணிக்கி மறண-
11. மடந்தர் சிலமான -
12. பாதையில் கொண்டு வந் -
13. து அடக்கிலம் செய்தார் -
14. கள் யிது அறியவும
15. வருடைய தம்பி வெம்பிலி செய்தான்.

# 35:2

1. 1858
2. ஷூ 2-அவ -
3. து றிசிமென்-
4. று மதறாஸ் நெ-
5. ற்றி விண்பெ -
6. [றி] பஸ்ட்டு மாட்டின் 3 கம்
7. பணி சிலமானபாத்துக்கு தவு-
8. டு வந்துயிருக்கும் போது 3 கம்ப -
9. பனி சிப்பாயி டானிஏலுக்கு காச்
10. சல் கண்டு ஜன்னிபுரந்து மெய் மீ
11. 29 தேதி சனிக்கிழமைக் கால
12. மே $5\frac{1}{2}$ மணிக்கு ஆ-
13. ண்டவருடைய பர -
14. கதி அடைந்தாற்
15. அதே 3 கம்ப்ப
16. னியில் யிருந்த கி -
17. றிஸ்த்தவர்களு -
18. ம் டென்ற்று லாஸ் -
19. க்கர் கிறாமம் மெக்க
20. யேல் என்ம்பவ -
21. ரும் எல்லாரும் யே -
22. கோப்பித்துக் கூ -
23. டி யிந்தக் கல்ல -
24. ரை கட்டிவைத் -
25. தோம்.

---

* Sleemanabad, Sihore Taluk, Jabbalpore Dt, M.P. இக்கல்வெட்டு 1996-97 ஆம் ஆண்டு இந்திய கல்வெட்டு ஆண்டு அறிக்கையில் சேர்க்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டை வெளியிட அனுமதித்த நடுவண் அரசு (கல்வெட்டியல்) இயக்குநர் எம்.டி. சம்பத் அவர்களுக்கும், கொடுத்துதவிய திரு. ரவிசங்கர் அவர்களுக்கும் நன்றி.

1. James Burgess; Chronology of Modern India 1494-1894. p.324, 354.

# 36. பெரிய ஊர்ச்சேரி விஷமுறிவுக் கல்வெட்டு

**சொ. சாந்தலிங்கம், மதுரை;**
**கரு. இராசேந்திரன், மேலப்பனையூர்.**

மதுரை மாவட்டம் வாடிப்பட்டி வட்டம் அலங்காநல்லூர் அருகில் உள்ள பெரியஊர்ச்சேரியில் காமாட்சி அம்மன் கோயில் அருகில் உள்ள கருடத்தூனில் 22 வரிகளில் ஒரு கல்வெட்டும், அதன்கீழ் இரண்டு வரிகளில் மந்திரச் சொற்களும், கருடன் சிற்பமும் உள்ளன. கருடன் சிற்பத்தின்கீழ் ஆறும் ஐந்துமாக உள்ள முப்பது கட்டங்களில் எழுத்துக்கள் எழுதப்பட்டுள்ளன. இவை 'சரவணபவ', 'ஓம்', 'நமசிவாய' என்ற சொற்களின் எழுத்துக்களாகவும் கூடுதலாக 'ழ', 'யி' எழுத்துக்களாகவும் ஒழுங்கற்று எழுதப்பட்டுள்ளன. பாம்புக்கு எதிரி கருடன் என்பதால் கருடனை வணங்குவதின் மூலம் விஷம் முறிவுபடும் என்று மக்கள் நம்பியதையும், இதுபோன்று மந்திரக்கற்களும், தூண்களும் ஊர்ப் பொதுவில் வைப்பது தர்மமாக இருந்ததையும் இக்கல்வெட்டு தெளிவாக விளக்குகிறது. காலம் கி.பி.18-19 நூற்றாண்டாகலாம்.

## 36:1.

1. விசுவாவசு வருஷம் அப்பி-
2. ய மாதம் ஊறுசரி முத்துக்கா–
3. மாச்சியாபிள்ளை மகன்
4. ராமசாமிபிள்ளை பொருளுத-
5. வி செய்து ஏரசக்க நாயக்க-
6. லூற் லச்சிமிபுரம் பழனி–
7. யாண்டியாபிள்ளை மகன் ம-
8. வுனகுரு சீகன் சுப்பிர–
9. மணிய தேசிகரால் நடத்த-
10. லானது யிந்தக் கெறுட–
11. த்துவசபலன் விசந்தீ-
12. ண்டினவற் வந்து கம்-
13. பத்தை சுத்திவந்து மூன்-
14. றுமுட்டு முட்ட விசமிரங்-
15. கும் விசந்தீண்டினவ-
16. ற் வராதபச்சத்தில் அவ-
17. ரை பாத்தபேர் வந்து கம்-

18. பத்தில் முட்டிவிட்டு வேட்டி-
19. யை நனைத்து பிளிந்து போ-
20. ட்டுகிட்டுபோக வேட்டிகா-
21. ய விசமிரங்கும் குருவே
22. துணை.

## 36:2.

*(இடமிருந்து)*
*மசிநசி யிதழ நீ வசிம்*
(வலமிருந்து)
*மசி வநீழ தயிசிநசி ம.*

## 36:3.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ச | ர | வ | ண | ப | வ |
| ந | ம | சி | ா | ம | ஓம் |
| சி | யி | த | ழ | நி | ச |
| ஓம் | ம் | சி | ந | சி | சி |
| வ | ப | ண | வ | ர | ச |

# 37. துரிஞ்சலாறு கலிங்குக் கல்வெட்டு

**து. துளசிராமன், ஆர்க்காடு.**

திருவண்ணாமலை மாவட்டத்தில் திருவண்ணாமலையிலிருந்து திருக்கோயிலூர் செல்லும் சாலையில் சுமார் 20 கி.மீ. தூரத்தில் உள்ள அந்தோனியார் கோயிலுக்கு பக்கத்தில் பிரிந்து செல்லும் சாலையில் சென்றால் விருது விளங்கினான் என்னும் ஊருக்கு அடுத்து ஐந்து கி.மீ. தூரத்தில் காடகமான் என்னும் சிற்றூர் உள்ளது. இவ்வூருக்கு வடக்கே துரிஞ்சலாறு என்னும் ஆறு பாய்கிறது. இந்தத் துரிஞ்சலாறு திருக்கோயிலூருக்கு அருகில் தென்பெண்ணையாற்றோடு சேர்கிறது.

துரிஞ்சலாற்றுக்கு குறுக்கே ஒரு பெரிய கலிங்கு செவ்வக வடிவ கருங்கற்களை அடுக்கி கட்டப்பட்டுள்ளது. இதற்கு சுண்ணாம்புக் காரை பயன்படுத்தப்பட்டுள்ளது. சில இடங்களில் செங்கல்லும் சுண்ணாம்பும் உள்ளது. இந்தக் கலிங்கு கி.பி.19ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வேட்டவலம் ஜமீன்தாராக இருந்த வாணாதிராயர் என்பவரால் கட்டப்பட்டது. இதனைக் குறிக்கும் கல்வெட்டு ஒன்று இங்கு நடப்பட்டுள்ள பாறைக்கல்லில் வெட்டப்பட்டுள்ளது. இதில் குறிக்கப்பெறும் வாணாதிராயர் சமூக முன்னேற்றத்துக்கு பல நல்ல செயல்களைச் செய்துள்ளதால் 'வசந்த கிருஷ்ண வாணாதிராயர்' என மக்களால் அன்போடு அழைக்கப்பட்டார்.

1. வாணாதிரா-
2. ய முதலியார் அ-
3. வர்கள் கட்டி
4. விச்ச கலிங்-
5. கி

# 38. சிவகாசி ஓலை ஆவணம்

த. இரத்னமாலா, திருத்தங்கல்.

விருதுநகர் மாவட்டம், விருதுநகரிலிருந்து தென்மேற்கில் 30கி.மீ. தொலைவில் உள்ள சிவகாசியில் விசுவநாதசுவாமி கோயிலில் கோயில் விழாக்கள் தொடர்பான செய்திகள், நன்கொடைச் செய்திகள் கோயிற் கட்டளைகள் தொடர்பான பல ஓலைச் சுவடிகள் உள்ளன. அவற்றுள் ஒன்று ஓர் உடன்படிக்கை ஆவணமாக உள்ளது. இச்சுவடி 60 செ.மீ. நீளமும் 3 செ.மீ. அகலமும் பெற்றுள்ளது. எழுத்துக்கள் சில இடங்களில் சிதைந்துள்ளன. இச்சுவடியில் தமிழ் எண்களும், கூட்டெழுத்துக்களும், குறிப்பெழுத்துக்களும் இடம் பெற்றுள்ளன.

காலம் : கொல்லம் 1036 ஆவணி 7 (கி.பி. 1861).

செய்தி : சிவகாசி விசுவனாத சுவாமி கோயிலைச் சேர்ந்த சிந்தம்பர சிந்தமய்ய பட்டர் வாசன வகையறாவினர்க்கு அவ்வூர் வைத்திலிங்க பண்டாரம் மக்கள் மூவரில் சாமினாத பண்டாரம் மக்கள் மூவரும் சங்குலிங்க பண்டாரம், சிவனு பண்டாரம் ஆகிய ஐவரும் எழுதிக் கொடுத்த ஓர் உடன்படிக்கை. அவர்கள் தாயார் மகமாயி அம்மாளுக்கு உணவு, உடைக்கு இவர்கள் ஒவ்வொருவரும் மாதம் ஒன்றுக்கு மூன்று பணம் கொடுக்க வேண்டும்; மகமாயி அம்மாள் வந்து தனக்குப் பணம் கொடுக்கவில்லை யென்று அறிவித்தால் தண்டனைக்குட்படுவோம் என்று ஐவரும் மனம் உவந்து எழுதிக் கொடுத்த உடன்படிக்கை.

1. 1036ம் வருஷம் ஆவணி மாதம் 7ம் தேதி சிவகாசியிலிருக்கும் விசுவனாத கோவில் செல்லப்பட்டற் குமாற சிந்தம்பறப் பட்டற் வாசன வகையாட்டிகள் சகலமான பேறுக்கும் மேற்படி யூறிலிருக்கும் வைய்திலிங்க-
2. ம் பண்டாற மக்கள் மூன்று பேறில் சாமினாத பண்டாற மகன் கறுப்பண்ண பாண்டாறம் 1. மேற்படி தம்பி வெங்கினி யென்று பேற் விளங்கிய வேலாயுதம் பண்டாறம் 1 சிவனு பண்டாறம் 1
3. மேற்படி தம்பி சங்குலிங்கம் பாண்டாறம் 1 நாங்கள் அஞ்சு பேறும் யெளுதிக் குடுத்த உடபடிக்கை யென்ன வென்றால் எங்களுடைய தாயாற் மாகமாயிக்கி அன்ன வஷ்தறத்துக்கு
4. .... .... சிவனு பாண்டாறம் குடுக்குறது சங்குலிங்கம் பாண்டற சாமினாத பாண்டாறம் மக்கள் மூன்று பேறும் அந்த

5. பிறகாறம் குடுப்போமாகவும் மேற்படி வாய்தாவில் யெவனவன் குடுக்கா தவன் விசுவனாத சாமி கோவில் சிவகெங்கையில் காராம் பசுவைக் கொன்ன பாவத்தி....

6. மேற்படி பெரிய மனிசி பணம் குடுக்கவில்லை யென்று வந்து அறி வித்தால் தாங்கள் இட்ட தெண்டணைகியுள் பனிந்து மேற்படி பெரிய மனிசிக்கி தங்களமு .....

7. பணமும் குடுப்போமாகவும் இந்த படிக்கி யெங்கள் மனறாசியாய் யெளு திக் குடுத்தோம் சிந்தம்பறப் பட்டற் முடிகளுக்கு சாமினாத பண்டாற மகன் மூன்று பேறும்

8. சிவனு பாண்டாறம் சங்குலிங்க பண்டாறம் இந்த படிக்கி சிவனு பண்டா றம் இந்த படிக்கி சங்குலிங்கம் இந்த படிக்கி நமசிவாயம் யிந்த படிக்கி வேலாயுதம்

9. இந்த பத்திறம் யெளுதினது தென்காசி நாமறு மகன் அழகிரிசாமி னாடான் அரிவேன் முண்டக னாடான் மகன் சுப்பனாடான் சாச்சி அரி வேன் பண்டிதம் சிதம்பரம் பண்டாறம் சாச்சி அரிவேன் சிவசுப்ரமணிய பண்டாறம் அரிவேன் சுப்பிரமணிய பண்டாறம் சாச்சி அரிவேன் லட்சு மண னாடான் மகன் அய்யனாடான் சாச்சி யரிவேன் சுயந்திப பாண்டா றம்.

# 39. கிள்ளை பக்கிரி வாய்க்கால் மதகுக் கல்வெட்டு

மா. சந்திரமூர்த்தி, சென்னை.

சிதம்பரத்திலிருந்து சுமார் 8 கி.மீ. தொலைவில் உள்ள கிள்ளை என்ற ஊரில் இஸ்லாமிய சமூகத்தினரால் ஒரு தர்க்கா வழிப்படப்பட்டு வருகிறது. கிள்ளையில் உள்ள நிலங்கள் பக்கிரி என்றொரு வாய்க்கால் பாசனத்தில் உள்ளன. இவ்வாய்க்கால் மதகில் உள்ள கீழ்வரும் கல் வெட்டின் மூலம் இம்மதகு 1875ல் சையது ஷா மோயினுதீன் என்பவ ரால் அவரது சொந்தப்பணத்தில் மீண்டும் புதுப்பித்துக் கட்டப்பட்டது எனவும் இம்மதகும் வாய்க்காலும் அவருக்கு 4 தலைமுறை முன்பாக சையத்ஷா ரகமுதுல்லா என்பவரால் அவரது இனாம் நிலங்களின் பாசன வசதிக்காக வெட்டி அமைக்கப்பட்டன என்றும் அறிகின்றோம். இவ்வாய்க்கால் ராஜா வாய்க்கால் பாலமான் பிரிவு மதகிலிருந்து தொடங்கி நிலங்களுக்குப் பாய்ந்து வெள்ளாற்றில் சேர்கிறது. கல்வெட் டில் ரகமதுல்லாவின் இனாம் நிலம் என்று நிலங்கள் சொல்லப்படுகின் றன. இன்று கிள்ளை தர்க்கா அறங்காவலராக உள்ளவர் தகவல் தந்த படி கல்வெட்டில் ரகமுதுல்லாவின் 4வது தலைமுறை என்று குறிக்கப் படும் மோயினுதீனின் மகன் சையது ஷா உலாம் 1905ல் வாரிசு இல்லா மல் காலமானார் என்றும் அது காரணமாக மயிலாடுதுறை நீதிமன்றத் தில் 1909ல் வழக்குப் பதிவாகி 1922ல் தீர்ப்பு பெறப்பட்டு அறங்காவ லர் நியமிக்கப்பட்டார் என்றும் அறிகின்றோம்.

1. ஹஜரத் சைய்யத் ஷா ரகமதுல்லா சாயபுக்கு கிள்ளையிலிறு-
2. க்கப்பட்ட தன் இனாம் நிலங்களில் பாய்ச்சலுக்கு ஆதியி-
3. ல் சொந்தத்தில் பணம் போட்டு வாய்க்கால்
4. வெட்டி இந்த மதகும் கட்டினார் மதகு சி-
5. க[லெ]தாய் போனபடியால் மறுபடி மேற்படியா-
6. றுடைய 4வது தலமுறை பேரபிள்ளை சையது
7. ஷா மோயினுதீன் பார்ஸா ஸாயபு தன் சொந்-
8. த பணம் சிலவு செய்து இந்த மதகை அ[லெ]ஸ்தீபுரீ
9. றம்[மு] புதிதாய் கட்டினார் 1875 வருஷம்
10. மே மாதம் 10 உ

# 40. வெளிமுத்தி தலபுராணக் கல்வெட்டுகள்

**நா. வள்ளி, காரைக்குடி.**

தேவகோட்டைக்குத் தென்கிழக்கில் சுமார் 6 கி.மீ. தூரத்தில் வெளிமுத்தி என்ற ஊரில் இராமநாதபுரம் சமஸ்தானத்தைச் சேர்ந்த சிவன் கோயிலொன்று உள்ளது. இங்குள்ள நான்கு கல்வெட்டுகள் தேவகோட்டை நகரத்தார்கள் இக்கோயிலைத் திருப்பணி செய்த விவரங்களையும் மற்றும் இராஜகோபுரம் கட்டிய செய்தியையும் குறிப்பிடுகின்றன. தேவகோட்டை 'தேவர்கோட்டை' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ராஜகோபுரத்தின் நுழைவாயிலில் உள்ள கல்வெட்டில் வெளிமுத்தி தலபுராண வரலாறு சுருக்கமாகச் சுவைபடச் சொல்லப்பட்டுள்ளது. அது மட்டுமல்லாமல் இத்தலத்தின் வரலாறு திருப்பினவாசல் புராணத்திலும் (திருப்புனல்வாசல் வெளிமுத்திக்குச் சற்று தொலைவில் வைகையாற்றின் கரையில் அமைந்துள்ள பாடல்பெற்ற தலம்) கூறப்பட்டிருப்பதாகவும், இங்குள்ள பழைய கல்வெட்டுகளில் இச்செய்திகள் எழுதப்பட்டிருந்தன என்றும் கல்வெட்டு கூறுகிறது. கல்வெட்டுகளில் மெய்யெழுத்துக்குப் புள்ளி காணப்படவில்லை. இரட்டைக்கொம்பும் காணப்படவில்லை.

## 40:1.

இடம் : இராஜகோபுரம் நுழைவாயிலில் உள்ள கல்வெட்டு.
காலம் : கி.பி.19ஆம் நூற்றாண்டு.

1. இந்த தலம் ஆதிகாலதிலிதற்கு மேற்றி-
2. சையில் நகருடையவராய் மகா சிவபத்தரா-
3. யிருந்த பாண்டிய ராஜா ஒருவரிதற்குக் கீட்டிசை-
4. யிலுள்ள திருப்புனவாயிலென்னுந் திருத்தலத்து-
5. ச்சிவ பெருமானைத் தினந்தோறு மிதுமார்க்-
6. கமாகப் போய்த் தரிசித்து வந்து போசனஞ்
7. செய்வது நியமமாகக் கொண்டு போய்வரு-
8. கையிலொரு தினமிந்த விடத்தில் கால்த்தா-
9. விராஜா கோபித்து விழுந்து கிடக்கச் சுவா-
10. மி யெழுந்தருளித் தெளிவித்து இவடத்தி-
11. லே யுனக்காக நாமெழுந்தருளியிருக்கு-
12. ரோ மின்று முதலிவடத்திலே தரிசனஞ் செ-

13. ய்து கொள்ளென்று கட்டளையிட்டு யெழுந்–
14. தருளிய காரணத்தினா லுண்டானது
15. இது திருப்புனல்வாயில்த் தலபுராணத்தில்
16. சொல்லியிருக்கின்றது அநேகம் பாண்–
17. டியர்கள் முதலிய ராசாக்களாலும் சிவப–
18. த்தர்களாலும் பணிசெய்ததாக முந்தின கல்–
19. வெட்டுகளிலெழுதியிருந்தது
20. தலம் – வெளிமுத்தி
21. சுவாமி – பழம்பதிநாதர்
22. அம்மை – பெரிய நாயகி

## 40:2.

*இடம்* : *இராஜகோபுரத்தில் நுழைந்தவுடன் இடப்புற நிலையில் இராஜகோபுரம் செய்வித்தவரின் உருவம் புடைச் சிற்பமாகச் செதுக்கப்பட்டு அருகில் கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது.*

*காலம்* : *கி.பி.*1873.

1. உ கலியுகாதி 4974
2. ஆங்கிரச வருடம் தைமீ
3. 2 கல்வாசல் நாட்டில் இளையாத்தக்கு–
4. டியான குலசேகரபுரத்தில் கழனிவா–
5. சல்க்குடியான தேவர் கோட்டையிலிரு–
6. க்கும் வணிகர்குலம், ந.மு.அருணாசலச்
7. செட்டியாராகிய யிவர் யிந்த ராசகோ–
8. புரஞ் செய்வித்தவர்
9. ஆலையத்துக்குள்
10. பணிக்கி விரோதமாய் மர–
11. ம் செடி முதலானதை ஒருவ–
12. ரும் வைத்துப் பயிர் செய்ய
13. வேண்டாம்
14. ஸ்தலம் – வ்ருத்3த4 புரி
15. ஸ்வாமி – வ்ருத்3த4 புரீச்0வரார்
16. அம்மை – ப்3 ருஹந்நாயகி

## 40:3.

இடம் : கருவறைக்கு வெளியே இடதுபுறம், துவாரபாலர் சிலைக்கு அருகிலுள்ளது.
காலம் : கி.பி.1896.

1. கலியுகாதி
2. 4997
3. கல்வாச நாட்டில் இளையாத்தக்குடியான
4. குலசேகரபுரத்தில் கிணிகி–
5. ணிக் கூறுடையான் தேவர்
6. கோட்டையிலிருக்கும் வணிகர்குலம் தெ.பழ–
7. னியப்பச் செட்டி யிந்தப்
8. பழம்பதிநாத சுவாமி
9. கோவில்த் திருப்பணி செய்வித்தவர்

## 40:4.

இடம் : அம்மன் சந்நிதி வலதுபுறம் துவாரபாலகி சிலைக்கு அருகிலுள்ளது.
காலம் : கி.பி.1866.

1. கலியுகாதி
2. 4967
3. குரோதன வருஷம் தைமீ
4. கேரள சிங்க வளநா–
5. டாகிய ஏழகப் பெரு–
6. ந்திருவான வீரபா–
7. ண்டிய புரத்தில் சிறு
8. குளத்தூருடையான்
9. ஆவி. கறுப்பன் செட்டி
10. யிந்தப் பெரிய
11. நாயகியம்மை கோ–
12. வில் சோபானங்
13. கூடச் செய்வித்
14. தவர்

---

# 41. மீறான்குளம் கிணற்று ஆவணங்கள்

த.த. தவசிமுத்து, ஆறுமுகநேரி.

தூத்துக்குடி மாவட்டம், சாத்தான்குளம் வட்டம், பேய்க்குளமருகே மீறான்குளம் என்ற ஊர் உள்ளது. இவ்வட்டாரம் வறண்ட பூமியாதலால் மக்கள் தண்ணீர்ப் பயன்பாட்டிற்காக பன்னெடுங்காலமாக பெரிய கிணறுகளை நம்பி வாழ்ந்துள்ளனர். இப்பகுதியில் உள்ள ஊர்களின் பெயர்கள் குளம் என்று முடிந்தாலும், இயல்பாக நீரற்ற வானம் பார்த்த குளங்களாகவே உள்ளன.

இவ்வட்டாரத்தில் நல்ல நீரூற்றுக் கிணறு உடையவர்கள் பெரியதொரு அசையாச் சொத்தினைக் கொண்டவர்களாகக் கருதப்படுகின்றனர். ஏனைய சொத்துக்களை குத்தகைக்கு விடுவது போன்று, ஒரு குறித்த காலத்திற்கு கிணற்றை குத்தகைக்கு விட்டு வந்துள்ளனர். அதற்குப் பிரதிபலனாக பண்டமாற்று முறை வணிகம் போன்று நெல், பனைவெல்லம் பெற்றுள்ளனர் என்பதை சில ஓலை ஆவணத்தால் அறியலாம். இவை மீறான்குளம் திரு.A. தேவதாசன் அவர்களிடம் பெற்றவை. 1928இல் எழுதப்பட்டவை.

கிணறு உடமையாளர்கள் தங்களது கிணறுகளை அடையாளம் காண்பதற்காக அக்கிணற்றில் காணப்படும் பாறைகளின் தன்மை, புற அமைப்பு, நிறம் இவற்றினைக் கொண்டும், அக்கிணற்றின் அடியிலிருந்து வெளிப்படும் நீரூற்றின் வேக அளவினைக் கொண்டு விலாங்கு (மீன்) ஊற்று, எலிவால் ஊற்று, உரல் பாற ஊற்று, குமிழி ஊற்று என்று பெயரிட்டுள்ள தன்மையை இவ்வோலை ஆவணம் காட்டுகின்றன.

## 41:1.

1. 3 ஷூ ஆடி மீ° மீறான்குழம் சொள்ளமுத்து நாடான் மகன் ஏசுவடிய நாடான் கிணத்து சுவந்-
2. திரியம் கணக்கு திற்தது நெல் மரக்கால் 4 பனைக்கி ஒரு வருசத்துக்கு கருப்பு கட்டி இடை 1
3. பெருமாள் குழம் தேவமார்கள் எளுதி கொடுத்த றசுவுதி மேற்படி ஒரு வருசக்கு நெல் பதக்கு பனைக்கி கருப்புகட்டி இடை [7] இந்த கீறல் சுடலை முத்து தேவர், பலவேசதேவர், பெ. கருப்பசாமி தேவர்.
4. எளுதினது

## 41:2.

1. கடவுள் துணை
2. முன்னிட்டு

3. மண் கட்டம் அடி 45 வெள்ளபாறு அடி 3 3/4
காக்கா பொன் பாறு அடி 2 3/4 சந்தன பாறு 1 1/4
கெற்ப பாறு அடி 1/8 நீறுபாறு அடி 3/4
4. ஆத்து ஓட்டம் இசான முக்கில் விலாங்கு ஊத்து கண்ணி முக்கில்
எலி வாலு ஊத்து நடுகிணத்தில் உரல்பாறு கொண்ட
5. ஊத்து இப்படிக்கு சுப்பிரமணிய கடவுள் துணை

---

# 42. கோவிலூர் இராசி மண்டல ஓவியம்

சு. இராசகோபால், சென்னை.

சிவகங்கை மாவட்டம் காரைக்குடி அருகில் கோவிலூரில் உள்ள கொற்றவாளீசுவரர் கோயிலின் தென்புறவாயிலில் கோபுரத்தை ஒட்டி வெளியே அமைந்த ஒரு திறந்த அமைப்புடைய மண்டபத்தின் விதானத்தில் வட்டவடிவில் இராசி மண்டலமும், அதனைச்சுற்றி 25 சிவ மூர்த்தங்களும் அழகுற வரையப்பட்டுள்ளன. இராசிமண்டலம் என்பது பூமி சூரியனைச் சுற்றி வரும் பாதையில் 30°-க்கு ஒன்றாக அமைந்த கற்பனையான 12 பிரிவுகளின் தொகுதியாகும். ஒவ்வொன்றுக்கும் கற்பனையான உருவங்கள் முறையே ஆடு, எருது, மிதுனம், நண்டு, சிங்கம், கன்னி, துலாம், தேள், வில், மகரம், கும்பம், மீன் என்று தரப்பட்டுள்ளன. மேலும் வானவீதியில் உள்ள அசுவனி முதலான 27 நட்சத்திரங்கள் மேற்சொன்ன 12 இராசிகளுக்கு 2 1/4 நட்சத்திரம் வீதம் பகுக்கப்பட்டுள்ளன. தமிழ் மாதங்கள் 12-ம் முறையே மேற்சொன்ன இராசிகள் ஒவ்வொன்றிற்கும் ஒன்றாகவும் கருதப்படுகின்றன. இதுதவிர நாள்தோறும் இப்பன்னிரண்டு ராசிகளும் வருவதாகக் கொண்டு ஒவ்வொன்றுக்கும் ஒரு குறிப்பிட்ட நாழிகை அளவு ஒதுக்கியுள்ளனர். அந்தந்த மாதங்களுக்குரிய இராசிகளே அம்மாத நாட்களில் முதலில் வரும். இப்படி ஒவ்வொரு நாளும் வருபவை இலக்கினம் என்று சொல்வர். இராசிகளை ஆண், பெண் என்றும், பிராமண, வைசிய, வெள்ளாள, சூத்திர வருணம் என்றும், ஒவ்வொன்றும் ஒருசாதி என்றும், ஒவ்வொன்றும் ஒருநிறம் என்றும் ஆரூடக்கணிப்பிற்காகவும் பகுத்துள்ளனர்.[1]

சுமேரியா, மாயா, சிந்துவெளி ஆகிய தொல்நாகரிக மக்கள் இராசி மண்டலப் பகுப்பை அறிந்திருந்தனர் என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.[2] சிந்துவெளிக்குறியீடுகளில் எட்டு இராசிகள் உண்டு என்றும் பண்டைத் தமிழக மரபிலும் எட்டு இராசிகளே இருந்திருக்கும் என்பதும் ஹிராஸ் பாதிரியாரின் ஊகம்.[3] முத்திரைக் காசுகளில் (Punch marked coins) காணப்படும் உஜ்ஜைனி குறியீடு நான்கு பிரதான இராசிகளைச் சுட்டி அமைந்தது என்ற கருத்தும் அண்மையில் சொல்லப்பட்டுள்ளது.[4]

பண்டைத் தமிழ் இலக்கியங்களில் பரிபாடல், வைகையாற்றில் வெள்ளப்பெருக்கு ஏற்படும் காலநிலையைக் குறிக்கும்போது ஏற்றியல் (இடபம்), மிதுனம், வில், மகரம் ஆகிய இராசிகளைக் குறித்துள்ளது.[5] இப்பாடலில் குறிக்கப்படும் இராசி மற்றும் நட்சத்திரங்களில்



படம் 42.1 கோவிலூர் இராசி மண்டல ஓவியம்

நிலையைக் கணித்து, இது கி.பி.7-ஆம் நூற்றாண்டில் இருந்த நிலை என்று ஆய்வாளர்கள் குறித்துள்ளனர்.[6] மணிமேகலையிலும் இடபம், மீனம் ஆகிய இராசிகளைப் பற்றிய குறிப்புகள் உள்ளன.[7] சிலப்பதிகாரத்தில் ஆய்ச்சியர் குரவையில் முல்லைத்தீம்பாணி குறிப்பிடும் இளங்கோவடிகளும், இதற்கு உரையெழுதிய அடியார்க்கு நல்லாரும் 12 இராசிகளில் ஏழு இராசிகளின் நேராக ஏழிசைச் சுரங்களைக் குறிக்கும் வகையில் பெண்கள் நின்றாடும் ஆடல் வகையினைக் குறித்துள்ளனர்.[8] கம்பராமாயணத்தில் இராமன், பரதன், இலக்குமணன், சத்துருக்கனன் ஆகியோர் முறையே புனர்பூசம்-கற்கடகம், பூசம்-மீனம், அரவு-அலவன் (ஆயில்யம்-கடகம்) ஆகிய நட்சத்திர - இராசிகளில் பிறந்ததாகக் கம்பர் தெளிவுறக் குறித்துள்ளார்.[9]

கேரளத்தில் இன்றும் மாதங்களின் பெயர்களை இராசிகளின் பெயர்களைக் கொண்டே மேஷம் (சித்திரை) தொடங்கி மீனம் (பங்குனி) முடிய அழைப்பதைக் காண்கின்றோம். கி.பி.10ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கேரள மன்னன் பாஸ்கர ரவிவர்மன் மற்றும் இராசராசனின் கேரளக் கல்வெட்டுகளில் இவ்வழக்கு இருந்ததைக் கல்வெட்டுகள் காட்டுகின்றன.[10] கல்வெட்டுகளில் வரும் கற்கடக நாயிறு, மகர நாயிறு முதலிய மாதங்களின் பெயர்கள் இன்றைய கேரள வழக்கத்தின் முன்னோடி எனலாம்.[11]

சிற்பங்களில் சிதம்பரத்தில் கிடைத்த கி.பி.12-13ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சூரியன் சிற்பம் குறிப்பிடத்தக்கதாகும். சூரியனைப் பொதுவாக நவக்கிரங்களுடன் காட்டும் மரபு உண்டு. ஆனால் சிதம்பரம் சிற்பத்தில் சூரியன் அருணன் ஓட்டும் ஏழு குதிரைத் தேரில் உஷா, பிரிதித்யுஷா ஆகியோருடன் நிற்க இவர்களது பின்புறமாக அமைந்த தாமரை இதழ்களின் வட்டத்தில் (பிரபை), இதழ் நுனிகளில் இராசிகளின் உருவங்கள் சிற்பங்களாக உள்ளன. இத்துடன் வெளியிடப்பட்டுள்ள படத்தில் மேஷம் மற்றும் மிதுனம் இராசிகள் தெளிவாகத் தெரிகின்றன.[12] மிதுனம் இருபெண் உருவங்களாகத் தோன்றுகிறது. திருநெல்வேலி மாவட்டம் மன்னார்கோயில் இராஜகோபால சுவாமி கோயிலான இராசேந்திரசோழ விண்ணகர மாடக் கோயில் முதல்தள விதானத்திலும் மரச்சிற்பமாக இராசி சக்கரம் 12 சதுரமாகக் காட்டப்பட்டுள்ளது.[13] இதில் மிதுனமாக இசைக் கருவியுடனான ஒரு பெண் உருவம் மட்டும் காட்டப்பட்டுள்ளது. இம்மரச் சிற்பங்களின் மீது வண்ணங்கள் தீட்டப்பட்டுள்ளன. தமிழகத்தில் பல கோயில்களிலும் விதானங்களில் இராசி மண்டலச் சிற்பங்களைக் காணலாம்.

கோவிலூரில் அம்மன் மற்றும் சுவாமி சன்னதிகளின் முன்னாக உள்ள கோபுரவாயில்களின் உள் அருகே திருச்சுற்று விதானத்தில் இராசி மண்டலங்கள் சதுரவடிவிலான சிற்பங்களாக உள்ளன. இவற்

றில் மிதுனம் ஒரு பெண் இசைக்கருவியுடன் உள்ளதாகக் காட்டப்பட்டுள்ளது. இங்கு ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட கோவிலூர் இராசி மண்டலம் சதுரமாக அல்லாது வட்டமாகக் காட்டப்பட்டுள்ளது. இவ்வோவியம் ஏறத்தாழ 6 அடி விட்டமுடைய வட்டத்தின் நடுவில் மஞ்சள் மற்றும் வெள்ளை வண்ணத்தில் ஒரு தாமரைமலரும் அதனை ஒட்டிய வெளி வட்டத்தில் 12 ஆரக் கட்டங்களில் இராசிகளும் அதனை அடுத்த வெளிவட்டத்தில் 25 ஆரக் கட்டங்களில் சிவமூர்த்தங்களும் வரையப் பட்டுள்ளன. 12 இராசிகள் நீலவண்ணப் பின்புலத்தில் மஞ்சள் மற்றும் கருப்புக் கோடிட்ட கட்டங்களின் உள்ளாக வரையப்பட்டுள்ளன. மேஷத்தில் ஆரம்பித்து இடமாக இவை வரையப்பட்டுள்ளன. ரிஷபம், சிம்மம், மீனம் ஆகியவை வெள்ளை நிறத்தில் உள்ளன. கன்னி போலவே மிதுனமும் பெண்ணாகவே காட்டப்பட்டிருப்பினும் அதன் கையில் வீணையொன்றுள்ளது. மிதுனம் என்பது ஆண்பெண் கின்னரப்பறவைகள், இரட்டை என்று கருதப்படும். இங்குப் பெண் கையில் வீணை உள்ளமை இசைப்பறவையான கின்னரப்பறவையை உணர்த்து கிறது எனலாம்.

அடுத்துள்ள வட்டத்தில் 25 கட்டங்களில் முறையே மேஷம் உள்ள இடத்திலிருந்து இடமாக இராசிமண்டலம் அமைந்ததுபோல் கொண்டால் சிவமூர்த்தங்கள் கீழ்வருமாறு அமையும்: 1. லிங்கோத்பவர், 2. கிராதமூர்த்தி, 3. கங்காளர், 4. சண்டேச அனுக்கிரவரமூர்த்தி, 5. நீலகண்டர், 6. சோமாஸ்கந்தர், 7. விக்னேச அனுக்கிரகமூர்த்தி, 8. நீலகண்டர், 9. சோமாஸ்கந்தர், 10. ஏகபாதமூர்த்தி, 11. சுகாசனர், 12. தக்ஷிணாமூர்த்தி, 13. சந்திரசேகரர், 14. உமாசகாயர், 15. இடபாரூடர், 16. நடராசர், 17. கல்யாணசுந்தரர், 18. பிட்சாடணர், 19. காமதகன மூர்த்தி, 20. காலசம்ஹாரமூர்த்தி, 21. திரிபுராந்தகர், 22. சலந்தரமூர்த்தி, 23. கஜசம்ஹாரமூர்த்தி, 24. வீரபத்திரர், 25. ஹரிஹரர், 26. அர்த்தநாரீசுவரர்.[14]

இவ்வோவிய வட்டத்தின் நான்கு மூலைகளிலும் குழந்தையுடன் கால்நீட்டிச் சாய்ந்து அமர்ந்தநிலையில் பெண்கள் காட்டப்பட்டுள்ளனர். ஒரு பகுதியில் மீனாட்சி–சுந்தரர் திருமணக் காட்சி காட்டப்பட்டுள்ளது. மற்றொரு பகுதியில் நாட்டிய மகளது நடனமும் அருகில் வாத்தியக்காரர், நட்டுவர் உருவங்களும் வரையப்பட்டுள்ளன. சக்தியந்திர சக்கரமும் ஒருபீடத்தின்மீது நிறுத்தப்பட்டதாக வரையப்பட்டுள்ளது. கஜலட்சுமி, யானைகள், அன்னங்கள் ஆகியவற்றின் ஒவியங்களும் குறிப்பிடத்தக்கவையாகும்.

இராசி மண்டலத்தைச் சுற்றி வரையப்பட்ட சிவமூர்த்தங்கள் சைவ சித்தாந்த மார்க்கத்தில் சிவஞான சித்தியார் குறிப்பிடும் சகளம் என்ற 25 உருவங்களை ஒட்டி அமைந்துள்ளன.[15] கோவிலூரில் உள்ள மடத்துத்துறவிகளின் சைவமத ஈடுபாடு காரணமாகச் சிவமூர்த்தங்கள்

இராசி மண்டலத்தினைச் சுற்றி வரையப்பட்டது என்று கருதலாம். கோயிலின் உட்புறத்தில் திருச்சுற்று மாளிகையில் 63 நாயன்மார்கள், உருவங்களும் அம்மன் சன்னதி ஒட்டிய கூரையின் கீழான சுவர்ப்பகுதி யில் சிவமூர்த்தங்களும் ஓவியங்களாக வரையப்பட்டுள்ளதும் இங்கு நோக்கத்தக்கதாகும்.

---

**அடிக்குறிப்புகள்**

1. ஆ. சிங்காரவேலு முதலியார், *அபிதான சிந்தாமணி*, 1987 (மறுபதிப்பு) பக்.181, 1366.
2. Michael D. Coe *The Maya*, Thames & Hudson, London, 1984, p.161.
3. H.Heras, *Studies in Proto-Indo-Mediterranean Culture*, (Bombay 1953), Vol.I. p.237-244.
4. Haripriya Rangarajan 'The Significance of Ujjaini Symbol' in *'Studies in South Indian Coins*, Vol.IX, Ed.K.V. Raman , 1999.
5. **பரிபாடல்** (1964) 11:1-15
6. **பரிபாடல்** பக்.185, இதன் காலம் கி.மு.161 என்று குறிக்கும். *நூற்களஞ்சியம்*, தொகுதி 1 பக்கம் 228ல் கி.பி.634 என்று எஸ். வையாபுரிப்பிள்ளை குறித்துள்ளார்.
7. இருது குளவேனிலில் எரிகதிர் இடபத்து
   ஒருபதின் மேலும் ஒருமூன்று சென்றபின்
   மீனத்து இடைநிலை மீனத்து அகவையின்
   போதி தலைவனொடு பொருந்திய போழ் தந்து

   ***மணிமேகலை***, – 15:23-26
8. செந்நிலை மண்டிலத்தாற் கற்கடகக் கைகோத்து
   குரற்கொடி தன்கிளையை நோக்கிப் பரப்புற்ற
   கொல்லைப் புனத்துக் குருந்தொசித்தாற் பாடுதும்
   முல்லைத் தீம்பாணியென்றாள்

   **சிலம்பதிகாரம்**, – ஆய்ச்சியர் குரவை, கூத்துள்படுதல்

   அடியார்க்கு நல்லார் உரைப்பாடல்கள் பாகனேரி த.வை.இ. தமிழ்ச் சங்க வெளியீடு 1966 பக்.405.
9. *கம்பராமாயணம்*, பாலகாண்டம் திருஅவதாரப்படலம் பாடல்கள் 101, 104, 105.
10. *TAS*, தொகுதி : 2 எண் : 7.
11. *தெ.இ.க.* தொகுதி, 17.
12. ஒளிப்படம் தந்துதவிய தமிழ்நாடு அரசு தொல்லியல் ஆய்வுத்துறை இயக்குனர் திரு.கு. தாமோதரன் அவர்களுக்கு நன்றி.
13. S.R. Balasubramaniam, *Middle Chola Temples*, 1978, Plate 328.

14. மதுரை மீனாட்சியம்மன் கோயில் இராணிமங்கம்மாள் கால மீனாட்சி–சுந்தரர் திருமண ஓவியத்தின் அருகில் 27 சிவமூர்த்தங்களின் படங்கள் சிறியளவில் வரையப்பட்டுள்ளமை இங்கு நோக்கத்தக்கது.

15. *சைவசித்தாந்த தேனமுது*, இதழ் – சி.சு. மணி, திருநெல்வேலி, 1996. சிவ ஞானசித்தியார் நூலில் சகளம் என்று குறிப்பிடப்படும் 25 சிவமூர்த்தங்களின் வரிசை ஓவியத்தில் காணப்படும் வரிசையில் பெரும்பாலும் காணப்படுகிறது. லிங்கோத்பவர், திருநீலகண்டர் ஆகியவை இடம் மாறியுள்ளன. இக்கட்டுரை வசதிக்காக மேஷராசியிலிருந்து மூர்த்தங்கள் எண்ணப்பட்டன. சகள வரிசையில் முதலில் சந்திரசேகரர் குறிப்பிடப்பட்டுள்ளது.

## பிற்சேர்க்கை

| | இராசியின் பெயர் | குறியீட்டு உருவம் | மாதம் | இலக்கிண நாழிகை |
|---|---|---|---|---|
| 1. | மேஷம் | வெள்ளாடு | சித்திரை | 4 1/4 |
| 2. | இடபம் | எருது | வைகாசி | 4 3/4 |
| 3. | மிதுனம் | ஆண்–பெண் | ஆனி | 5 1/4 |
| 4. | கடகம் | நண்டு | ஆடி | 5 1/2 |
| 5. | சிம்மம் | சிங்கம் | ஆவணி | 5 1/4 |
| 6. | கன்னி | பெண் | புரட்டாசி | 5 |
| 7. | துலாம் | தராசு | ஐப்பசி | 5 |
| 8. | விருச்சிகம் | தேள் | கார்த்திகை | 5 1/4 |
| 9. | தனுசு | வில் | மார்கழி | 5 |
| 10. | மகரம் | முதலை | தை | 5 1/4 |
| 11. | கும்பம் | குடம் | மாசி | 4 3/4 |
| 12. | மீனம் | மீன் | பங்குனி | 4 1/4 |

# 43. நன்மங்கலத்தில் தொல்பழங்காலக் கற்கருவிகள்

ப. சண்முகம்;
ஜே.எஸ். சிங்காரவேலவன், சென்னை.

தொல்பழங்காலக் கற்கருவிகள் சென்னைக்கு அருகேயுள்ள நன் மங்கலம் ஊரில் ஜே.எஸ். சிங்காரவேலவனால் அண்மையில் கண்டெ டுக்கப்பட்டன.[1] இவ்வூர் பல்லாவரத்திலிருந்து சுமார் 5 கிலோமீட்டர் தெற்கிலும், குரோம்பேட்டை இரயில் நிலையத்திலிருந்து 3 கிலோமீட் டர் கிழக்கிலும் அமைந்துள்ளது. இவ்வூரிலுள்ள நன்மங்கலம் ஏரியில் மணல் எடுப்பதற்காக தோண்டப்பட்ட குழிகளில் இருந்து கற்கருவி கள் பல எடுக்கப்பட்டன. இவ்வேரியையொட்டிய சிறுகுன்றின் அடி வாரத்திலும் கருவிகள் கிடைக்கின்றன.

தமிழ்நாட்டின் வட பகுதிகளில், குறிப்பாக இன்றைய திருவள் ளூர், காஞ்சிபுரம், வேலூர் மாவட்டங்களில் 93 ஊர்களில் தொல்பழங் காலக் கற்கருவிகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. சைதாப்பேட்டை வட் டத்தில் 5 ஊர்களில் மட்டுமே கிடைத்துள்ளதாக இதுகாறும் நடை பெற்ற கள ஆய்வுகளிலிருந்து அறியலாம். இவ்வட்டத்தில் பல்லாவ ரம் தவிர செங்குன்றம், புத்தூர், திருமுல்லைவாயில், ஒரத்தூர் ஆகிய ஊர்களில் கிடைத்துள்ளன. இக் கற்கருவிகள் பல்லாவரத்திற்கு அண் மையில் கிடைத்துள்ளதைச் சிறப்பாகக் குறிப்பிடவேண்டும்.

இப்பகுதியில் முதல் கற்கருவிகளைக் கண்டெடுத்த பெருமை ராபர்ட் புரூஸ் புட் என்ற நிலப்பொதியியல் வல்லுநரையே சாரும்.[2]. இவர் 1863 இல் சென்னை - திருச்சிராப்பள்ளி நெடுஞ்சாலைக்கு மேற்கே அமைந்த ராணுவத் திடலில் ஏற்பட்டிருந்த குழியில் கற்கருவி களைக் கண்டெடுத்தார். அடுத்த ஆண்டிலும் அதே இடத்தில் மீண்டும் பல கருவிகளைக் கண்டெடுத்தார். பின்னர் நடைபெற்ற கள ஆய்வுகளில் இப்பகுதியில் கற்கருவிகளைக் கண்டெடுத்ததாக யாரும் குறிப்பிடவில்லை. இம்மாவட்டத்தில் கள ஆய்வுகளை மேற்கொண்ட அ.சுவாமி பழைய செங்கல்பட்டு மாவட்டத்தில் (இன்றைய காஞ்சிபு ரம், திருவள்ளூர் மாவட்டங்களைக் கொண்டது) மட்டும் 58 ஊர்களில் கற்காலக் கருவிகள் கிடைப்பதாக தம்முடைய ஆய்வேட்டில் குறிப்பிட் டுள்ளார். ஆயினும் அவரால் இப்பகுதியில் தொல்கருவிகளைக் கண் டெடுக்க இயவில்லை.[3] அண்மையில் (1997) து.துளசிராமன் மேற் கொண்ட கள ஆய்வுகளில் திருவள்ளூர் காஞ்சிபுரம் மாவட்டங்களில்[4]

17 ஊர்களில் கருவிகளைக் கண்டெடுத்துள்ளார். இவர் பல்லாவரம் பகுதியில் கள ஆய்வு மேற்கொண்டதாகத் தெரியவில்லை.

கண்டெடுக்கப்பட்ட கற்கருவிகளில் மூலக்கற்கருவிகளும், சில்லுக ருவிகளும் உள்ளன. மூலக்கருவிகளில் கைக்கோடரிகள் அடங்கும். இக்கருவிகளில் சில சுண்ணாம்புப் படிவுகளில் பலகாலம் புதையுண்டு கிடந்ததால் சிலவிடங்களில் வெண்மை வண்ணத்தோடு உள்ளன. இக் கருவிகளின் முனைப்பகுதி உடைபட்டுள்ளன. கருவிகளைப் பயன்ப டுத்திய காலத்தில் இவை உடைபட்டிருக்க வேண்டும். கைக்கோடரிக ளின் சிலவற்றின் மேற்பகுதி முழுதும் சில்லுகள் பேர்க்கப்பட்டுள்ளன.

இங்குக் கிடைத்துள்ள சில்லுகருவிகளில் கீழ்க்கண்ட மூன்று வகை களை அடையாளம் காண இயலும். 1. வாய்ச்சிகள், 2. முனைகள், 3. வட்டுகள். சில்லுகளைப் பேர்த்தெடுத்தபின் வெட்டும் அலகைக் கூராக்குவதற்காக ஓரப்பகுதியில் மீண்டும் சிறு சில்லுகளைப் பேர்த்தெ டுத்துள்ளனர்.

இக்கருவிகள் தவிர உடைபட்ட சில்லுகள் பலவும் கிடைத்துள் ளன. இச்சில்லுகள் பலவற்றை அவர்கள் பயன்படுத்தாமல் விட்டிருக் கலாம். இக்கருவிகள் யாவும் பழங்கற்காலத்தின் இரண்டாம் நிலையைச் (சில்லுகருவிகளைப் பயன்படுத்திய காலம்) சார்ந்தவை என்பது தெளிவு. இக்கருவிகள் யாவும் குவார்ட்சைட் கற்களால் செய் யப்பட்டவை. பழங்காலத் தொல்மனிதர் இக் கருவிகளை வேட்டையாடவும், வெட்டவும், தோண்டவும் பயன்படுத்தினர்.

காலத்தை அறுதியிட்டுரைக்க சான்றுகள் ஏதும் கிடைத்தில. மற்ற பகுதிகளில் கணித்துச் சொல்லப்படும் கால வரையறை இவ்விடத்துக் கும் பொருந்துவதாகும். தோராயமாக தொல்மாந்தர் இப்பகுதியில் ஒரு லட்சம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்திருக்கலாம்.

---

1. கள ஆய்வில் திரு சி.ஆரோக்கியதாஸ் துணைபுரிந்தார்.
2. Robert Bruce Foote, *Prehistoric and Protohistoric Antiquities of India*, 1916, p.vii, 109.
3. A. Swamy, Archaeology of the Chingleput District, Ph.D. Thesis, Madras University, 1976, p.73
4. இவர் 32 ஊர்களில் கருவிகளைக் கண்டெடுத்ததாக குறிப்பிட்டுள்ளபோதிலும், (து.துளசிரா மன், பரிகுளம் பழைய கற்கருவிகளின் தொழிற்கூடம், ஆவணம், 8 (1997), பக் 147-149). அவற்றில் 15 ஊர்களில் கருவிகள் கண்டெடடடுக்கப்பட்டு அ.சுவாமியின் ஆய்வேட்டிலி ருந்து அறியலாம்.



# 44. உசிலம்பட்டி பகுதியில் தொல்லியல் கண்டுபிடிப்புகள்

**வீ. செல்வகுமார், புணே;**
**ம. காந்திராசன், சென்னை;**
**சு. கண்ணன், மதுரை.**

தமிழகத்தின் மதுரை மாவட்டத்தில் அமைந்துள்ள உசிலம்பட்டி பகுதியில் 1998 மற்றும் 1999ம் ஆண்டுகளில் மேற்கொள்ளப்பட்ட கள ஆய்வின் போது, இரண்டு இரும்புக்காலம். முன் வரலாற்றுக்காலம் மற்றும் இடைக்காலத் தடயங்கள் உள்ள ஊரிருக்கைகள், இடைக்காலத்தைச் சேர்ந்த இரண்டு ஊரிருக்கைகள், சமண சமயச் சிற்பங்கள், ஏழு நடுகற்கள் மற்றும் இறந்தவர்கள் நினைவாக எழுப்பப்பட்ட சிலை போன்ற தொல்லியல் சின்னங்கள் கண்டுபிடிக்கப்பட்டன.[1] இத் தொல்லியல் சின்னங்களைப் பற்றிய விபரங்களை இக் கட்டுரை தருகிறது.

### பூதிபுரம்

பூதிபுரம் உசிலம்பட்டிக்கு வடகிழக்கே 5 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரின், கண்மாய்க்கு கிழக்கே உள்ள பாப்பான் காடு என்ற இடத்தில் இரும்புக்காலம்-முன் வரலாற்றுக் காலத்தைச் சேர்ந்த கருப்பு-சிவப்பு பானை ஓடுகள், இடைக்கால பானை ஓடுகள் மற்றும் இரும்புக்கழிவுகள் சுமார் 5 ஏக்கர் பரப்பளவில் காணப்படுகின்றன. மேலும், இவ்வூருக்கு கிழக்கே உள்ள விஷ்ணு கோவிலின் முன்புறம் ஓர் இடைக்கால ஊரிருக்கை உள்ளது. இங்கு தெலுங்கு பேசும் மக்கள் வாழ்ந்து வந்ததாகக் கூறப்படுகிறது. இக்கோவிலுக்கு வடகிழக்கே சுமார் 100 மீ. தொலைவில் உள்ள சுடுகாட்டின் அருகே ஆண் மற்றும் பெண் உருவங்கள் செதுக்கப்பட்ட ஒரு கல் உள்ளது.

### புதூர்

புதூர், உசிலம்பட்டியின் கிழக்குப் பகுதியில் அமைந்துள்ளது. புதூரில் உள்ள அரசு போக்குவரத்துக் கழக பணிமனைக்கு வடக்கே, மதுரை- போடி இரயில் பாதைக்குத் தெற்கே உள்ள அரட்டித் தேவர் தோட்டத்தில் இரும்புக் கால, மற்றும் முன்வரலாற்றுக்கால கருப்பு-சிவப்பு மற்றும் இடைக்கால பானை ஓடுகள் காணப்படும் ஊரிருக்கை அமைந்துள்ளது. இத்தோட்டத்திற்கு தெற்கே, முதுமக்கள் தாழிகள் கிடைத்ததாக கூறப்படுகிறது. இத்தோட்டத்தில் உள்ள ஒரு நவீன கால

கிணற்றின் தென்கிழக்கு மூலையில் சுமார் ஒரு மீட்டர் விட்டமுடைய, அடித்தளப் பாறையைக் குடைந்து அமைக்கப்பட்ட, சிறிய கிணறு காணப்படுகிறது. சில ஆண்டுகளுக்கு முன் கிணறு தோண்டும் போது கண்டுபிடிக்கப்பட்ட இந்தச் சிறிய கிணற்றின் மேல் பகுதியில் சுடுமண் உறைகள் இருந்தனவாகக் கூறப்படுகிறது. இந்தக் கிணறு முன் வரலாற்றுக்காலத்தைச் சேர்ந்ததா அல்லது இடைக்காலத்தைச் சேர்ந்ததா என்று தெரியவில்லை.

**குமாரக்கோவில்**

குமாரக்கோவில் உசிலம்பட்டிக்கு தென்கிழக்கே சுமார் மூன்று கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இங்குள்ள நாயக்கர்காலத்தைச் சேர்ந்த சுப்பிரமணியர் கோவிலுக்கு கிழக்கே சுமார் 100 மீ. தொலைவில் உள்ள குருநாதன் கோவிலுக்கு அருகில் நான்கு நடுகற்கள் காணப்படுகின்றன. கிழக்கு நோக்கி அமைந்துள்ள இந்நடுகற்களின் மேற்பகுதி குறுகிய திருவாசி போன்ற அமைப்புடன் சிங்கமுகத்துடன் செதுக்கப்பட்டுள்ளது. நடுகல் எண் 1 மற்றும் எண் 2 நடைபாதைக்கு வடக்கிலும், நடுகல் எண் 3 மற்றும் எண் 4, தெற்கிலும் உள்ளன. இந்நடுகற்களை புத்தூர் மற்றும் நல்லுத்தேவன் பட்டியைத் சேர்ந்த தேவர் சமூகத்தினர் வழிபடுவதாகக் கூறப்படுகிறது.

நடுகல் எண் 1 ($1.15 \times 0.70 \times 0.55$*மீ)* இதில் பாயும் குதிரைமீது அமர்ந்து உயர்த்திய வலக்கையில் வாளையும், இடக்கையில் குதிரையின் கடிவாளத்தைப் பிடித்தவாறும் அமர்ந்துள்ள வீரனின் உருவம் செதுக்கப்பட்டுள்ளது. குதிரையின் முன்கால்கள் ஒரு யானை உருவத்தை மிதித்தவாறும், குதிரையின் கீழ் குடைபிடித்தவாறு நிற்கும் உருவமும் காணப்படுகின்றன.

நடுகல் எண் 2 (**$1 \times 0.8 \times 0.6$** *மீ)* நடுகல் எண் 1க்கு வடப்புறம் உள்ள இந்நடுகல்லில் வலதுகையில் வாளை உயர்த்திப் பிடித்தும், இடதுகையில் கேடயத்துடனும் நிற்கும் ஆண் உருவம் காணப்படுகிறது. இதன் வலப்புறம் ஒரு பெண்ணின் உருவம் செதுக்கப்பட்டுள்ளது. *(ஒளிப்படம் 2. இடப்புறத்திலிருந்து இரண்டாவது நடுகல்)*

நடுகல் எண் 3 (**$1 \times 0.65 \times ?$***மீ)* நடுகல் எண் 2 ஐப் போலவே அமைந்துள்ளது.

நடுகல் எண் 4 (**$0.90 \times 0.80$** *மீ)* நடுகல் எண் 1 ஐ ஒத்துள்ள இந்நடுகல்லில் யானை உருவம் இல்லை. ஆனால் குடையைப் பிடித்தவாறு உள்ள உருவத்தின் வலப்புறம் ஒரு பெண் உருவம் காணப்படுகிறது.

**மலைப்பட்டி**

மலைப்பட்டி உசிலம்பட்டிக்கு தென் கிழக்கே 4 கி.மீ. தொலைவில் உள்ள புத்தூர் மலைக்கு வடமேற்கே அமைந்துள்ளது. இவ்வூரிலிருந்து விளாம்பட்டி செல்லும் பாதைக்குத் தெற்கே உள்ள சிவனாண்டித் தேவர் தோட்டத்தில் மூன்று நடுகற்கள் மண்ணில் பெருமளவு புதைந்து காணப்படுகின்றன.[2] இம் மூன்று நடுகற்களிலும் உயர்த்திய வலக்கையில் வாளைப் பிடித்தவாறு குதிரைமீதமர்ந்த வீரனின் உருவமும் அவனுடைய தலைக்கு மேல் உள்ள குடையும் தெளிவாகத் தெரிகின்றன.

மலைப்பட்டியிலிருந்து அரை கிலோமீட்டர் தெற்கில் உள்ள புத்தூர் மலையின் அடிப்பகுதியை ஒட்டி அமைந்துள்ள, ஆண்டிக்கல் எனப்படும் ஒரு பெரிய பாறையின் கீழ் உள்ள ஒரு கல்லில் சமணசமய தீர்த்தங்கரர்களான பாகுபலி, ஆதிநாதர், பார்சுவநாதர் மற்றும் மகாவீரர் ஆகியோரின் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இந்தச் சிற்பங்கள் பிற் பாண்டியர் காலத்தைச் சேர்ந்தவைகளாக இருக்கலாம். பாகுபலியின் உருவம் விளக்குத்தூணால் மறைக்கப்பட்டுள்ளது . இச்சிற்பங்களுக்கு இடையே ஒரு பிற்காலத் தமிழ்க் கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டின் எழுத்தமைதி தற்காலத் தமிழ் எழுத்தை பெரிதும் ஒத்துள்ளதால், இதை சென்ற நூற்றாண்டின் பின்பகுதி அல்லது இந்நூற்றாண்டின் முன்பகுதியைச் சேர்ந்ததாக ஊகிக்கலாம். இக்கல் வெட்டில், கள்ளழகர் சாமியை புதிப்பித்ததாகக் கூறும் சொற்றொடரும் மகாவீரர் மற்றும் பார்சுவநாதர் சிற்பங்களுக்கு இடையில் காணப்படும் 'பறம்மா' என்ற சொல்லும் தெளிவாகத் தெரிகின்றன. மேலும் பார்சுவநாதரின் நெற்றியில் வைணவ சமயக் குறியீடு பொறிக்கப்பட்டுள்ளது. இதிலிருந்து இந்த சமணச் சிற்பங்களை இந்து சமயக் கடவுள்களாக மாற்றியமைக்க முயற்சி செய்யப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

**புதுப்பட்டி**

புதுப்பட்டி உசிலம்பட்டிலிருந்து மூன்று கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இவ்வூரில் வடமேற்கே உள்ள ஓர் இடைக்கால ஊரிருக்கையின் கிழக்கே ஒரு நடுகல் உள்ளது (1.15 × 0.7 × 0.2 மீ). உச்சியில் சிங்கமுகத்துடன் கிழக்கு நோக்கி அமைத்த இந்நடுகல்லில் பாயும் குதிரை மீது உயர்த்திய வலக்கையில் வாளுடன் இடக்கையால் குதிரையின் கடிவாளத்தை பிடித்தவாறு அமர்ந்துள்ள வீரனின் உருவம். கீழே குடையைப் பிடித்தவாறு உள்ள உருவம் மற்றும் இரண்டு பெண் உருவங்கள் காணப்படுகின்றன. இந்நடுகல் வாலாந்தூர் மற்றும் பாப்பாபட்டி நாட்டைச் சேர்ந்தவர்களுக்கிடையே ஏற்பட்ட போரில் உயிரி

ழந்த ஒருவரின் நினைவாக எழுப்பப்பட்டதாக மரபு வழிச் செய்திகள் மூலம் தெரிய வருகிறது.

**கண்ணனூர்**

கண்ணனூர் உசிலம்பட்டியிலிருந்து 21கி.மீ. கிழக்கே மதுரைச் சாலையில் உள்ள செக்கானூரணிக்கு வடமேற்கே மூன்று கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரின் வடமேற்கே பட்டசாமி என்றழைக் கப்படும் இரண்டு வீரர்களின் சிற்பங்கள் செதுக்கப்பட்ட $1.2 \times 0.80 \times 0.75$ மீ அளவுடைய கல் உள்ளது. வலப்புறம் உள்ள வீர னின் உயர்த்திய வலக்கையில் குறுவாள் (?) உள்ளது. இடக்கை மார் பின் மீது காணப்படுகிறது. இடது புறமுள்ள வீரனின் உருவம் வலப் புற உருவத்தை விட சற்று குறைந்த உயரத்துடன், இடுப்பளவு உயர்த் திய வலதுகையில் குறுவாளுடனும், இடக்கையை மார்பின் மீது வைத் தவாறும், இடக்கையிடுக்கில் வேலுடனும் செதுக்கப்பட்டுள்ளது. கீழே இரண்டு நாய்களின் உருவங்கள் நின்ற நிலையில் உள்ளன. தேவர் சமூகத்தைச் சேர்ந்தவர்களால் வழிபடப்படும் இச்சிற்பங்கள் கொலையுண்ட அண்ணன்-தம்பி ஆகியோரின் நினைவாக எழுப்பப் பட்டதாக உள்ளூர் மக்கள் கூறுகிறார்கள்.

**நடுகற்கள்**

உசிலம்பட்டி பகுதியில் மூன்று முதல் ஏழு சட்டங்களில் (panel) சிற் பங்களுடன் அமைந்துள்ள நினைவுத்தூண்கள் காணப்படுகின்றன. இவ்வகையான நினைவுத்தூண்களை பெரிதும் தெலுங்கு பேசும் மக் கள் வழிபடுகின்றனர். இக்கட்டுரையில் விவரிக்கப்படும் திருவாசி போன்று சிங்க முகத்துடன் உள்ள நடுகற்கள் தேவர் (பிறமலைக் கள் ளர்) சமூகத்தினரால் வழிபடப்படுகின்றன. இந்த வழக்கத்தின் முக்கி யத்துவத்தையும், இவ்வழக்கம் தமிழகத்தின் மற்ற பகுதிகளில், குறிப் பாக தென் தமிழகத்தில், நிலவுகிறதா என்பதைப் பற்றியும் மேலும் ஆராய வேண்டும்.

---

இந்த ஆய்வு இந்திய வரலாற்று ஆய்வுக் குழுவின் (ICHR) உதவியுடன் மேற்கொள்ளப்பட் டது. கண்ணனூர் நினைவுக் கல் பற்றி தகவல் அளித்த திரு.கணேசன், மலைப்பட்டி சமணச் சிற்பங்கள் பற்றி கருத்துக் கூறிய முனைவர். ஏகாம்பரநாதன் (சென்னைப் பல்கலைக்கழகம்) ஆகியோருக்கு நன்றி.

# 45. சோமங்கலம் - ஒரு பழமையான ஊரிருக்கை

ப.தெ. பாலாஜி, சென்னை.

சோமங்கலம் என்று அழைக்கப்படும் இவ்வூர் திருப்பெரும் புதூர் வட்டம், காஞ்சிபுரம் மாவட்டத்தில் அமைந்துள்ளது. குன்றத்தூருக்குக் கிழக்கே 10 கி.மீ. தொலைவில் செம்பரம்பாக்கம் ஏரிக்கு மிக அருகில் அமைந்துள்ள இவ்வூரில் பல்வேறு காலகட்டங்களில் மேற்கொண்ட கள ஆய்வின்போது மக்கள் இரும்பு காலத்தில் இங்கு வாழ்ந்தனர் என்பது புலனாகிறது. இங்கு தெற்கு திசையில் வயல் வெளிகளுக்கு அருகில் கருப்பு சிவப்பு பானை ஓடுகள். இக்கட்டுரை ஆசிரியரால் ஏற்கனவே கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. தற்போதைய கள ஆய்வின்போது இக்கிராமத்திலுள்ள சோமநாதேசுவரர் கோயிலுக்கு அருகில் வெட்டப்பட்ட பள்ளத்தில் கருப்பு சிவப்பு பானை ஓடுகளும், கூஜாவின் மூக்குப்பகுதிகளும், வட்டவடிவ சில்லுகளும், மணிகளும் கண்டுபிடிக்கப்பட்டன. இவை இரும்பு காலத்தில் இங்கு ஊரிருக்கை அமைந்திருந்ததை உறுதிப்படுத்துகின்றன. குறைந்தது 1 ½ மீட்டர் ஆழத்திற்காகவது பண்பாட்டு எச்சங்கள் கிடைப்பதற்கான வாய்ப்புகள் உள்ளன. இவ்வூருக்குப் பக்கத்தில் ஒரு கி.மீ. தொலைவிலுள்ள சிறுகளத்தூர் என்னும் கிராமத்தில் பெருங்கற்படைச் சின்னங்கள் அமைந்துள்ளது இங்குக் குறிப்பிடத்தக்கது.

இவ்வூர் பல்லவர் மற்றும் சோழர்களது காலத்திலும் சிறந்து விளங்கியுள்ளது. சோழர்களது காலத்தைச் சார்ந்த சோமநாதேசுவரர் என்று அழைக்கப்படும் தூங்கானை வடிவிலுள்ள கோயிலில் உள்ள கி.பி.1174 காலத்திய ஒரு கல்வெட்டு (இக. 1910, எண். 184) இவ்வூரை இராஜசிகாமணி சதுர்வேதிமங்கலம் என அழைக்கிறது. இராஜசிகாமணி என்பது பல்லவன் இராஜசிம்மனின் பட்டப்பெயராகும். ஆக இவ்வூர் பல்லவர் காலத்திலிருந்து பிரம்மதேயமாக இருந்துள்ளது என்பது புலனாகிறது. இதை உறுதிப்படுத்தும் வண்ணம் பல்லவர் காலத்தைச் சார்ந்த சேட்டை மற்றும் சண்டேசுவரர் ஆகியோரின் கற்சிற்பங்கள் மேற்கண்ட கோயிலில் உள்ளன. இக்கோயில் தற்போது சிதைந்து காணப்படுகிறது. தனிச் சிற்பங்களாக ஆங்காங்கே ஒன்பது கன்னியர்கள், முருகர், விஷ்ணு, பிரம்மா (9-10- ம் நூற்றாண்டு), கணபதி (10-ம் நூற்றாண்டு) ஆகிய சிற்பங்கள் கிடக்கின்றன.

---

# 46. வெள்ளனூர் மகாவீரர் சிற்பத்தில் நரி - காகம் கதை

செ. கோவிந்தராஜ், புதுக்கோட்டை.

புதுக்கோட்டை மாவட்ட அரசு அருங்காட்சியகத்தில் வெள்ளனூரி லிருந்து கொண்டுவரப்பட்ட, கி.பி. 14-ம் நூற்றாண்டைச் சேர்ந்த மகா வீரர் சிற்பம் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளது. இச்சிற்பம் தமிழகத்தில் பிற இடங்களில் உள்ள மகாவீரரின் சிற்பம் போன்றே அனைத்து இலக் கணங்களுடனும் காணப்படுகிறது.

பத்மாசனத்தில் தியான முத்திரையுடன் அமர்ந்திருக்கும் இவருக் குப் பின்னால் சிம்ம தோரணமும், இருபக்கமும் சாமரதாரிகளும், தலைக்குப் பின்னால் திருவாசியும், தலைக்கு மேலே முக்குடையும் அதற்கு மேலே கற்பக விருட்சமும் காட்டப்பட்டுள்ளன. 3½ அடி உய ரம், 3 அடி அகலமுள்ள கருங்கல்லில் வடிக்கப்பட்டுள்ள இச்சிற்பத் தின் தலை உடைபட்டுள்ளது.

கற்பக விருட்சம் இலை, கொடி, காய், பூ இவைகளோடு நான்கு வட்டக் கருக்குகளைக் கொண்டுள்ளது. மகாவீரரின் இடப்பக்கம் மேலே உள்ள வட்டத்தில் காட்டப்பட்டுள்ள பூவின் மீது காகம் ஒன்று அமர்ந்துள்ளது. இந்த காகத்தின் நீளம் சுமார் மூன்று அங்குலங்கள் தான். எனவே அதன் அலகில் கவ்விக் கொண்டிருப்பது தெளிவில்லா மல் உள்ளது. மீனாய் இருக்கலாம். கீழே ஒரு நரி உருவம் இதே அள வில் காகத்தினைப் பார்த்துக் கொண்டிருப்பது போல் காட்டப்பட்டுள் ளது. நரியின் வால் மேல் நோக்கிக் காட்டப்பட்டுள்ளது.

காகத்தின் குரல்வளத்தினைப் புகழ்ந்து அதனைப் பாட்டுப்பாடச் சொல்லி அதன் அலகில் கவ்விக் கொண்டிருக்கும் மீனை/வடையை நரி தந்திரமாய் கவர்ந்து கொள்ளும் கதை யாவரும் அறிந்ததே. இக் கதையினை மகாவீரர் சிற்பத்தில் உள்ள கற்பக விருட்சத்தில் காட்டியி ருப்பது இங்கு குறிப்பிடத் தக்கதாகும். ஏனெனில் தமிழில் உள்ள நீதி நூல்கள் பெரும்பாலானவை சமணர்களால் எழுதப்பட்டவையாகும். பல நீதிக் கதைகள் செவி வழிக் கதைகளாய் சொல்லப்பட்டு வரு கின்றன. இக்கதைகளில் ஒன்றான இந்த நரி - காகம் கதையினை மகா வீரர் சிற்பத்தில் அழகுற சித்தரித்துக் காட்டியிருப்பது மிகவும் பொருத் தமானதாய்க் காணப்படுகிறது.

# 47. மராட்டியர் அகழ்வைப்பகக் கலைப்பொருட்கள்

**கு. தாமோதரன், சென்னை;**
**ச. பரணன், தஞ்சாவூர்.**

தமிழ்நாடு அரசு, தொல்பொருள் ஆய்வுத்துறையின் கீழ் தஞ்சாவூரில் அமைந்துள்ள மராட்டியர் அகழ்வைப்பகத்தில் பல கலைப்பொருள்கள் சேகரிக்கப்பட்டு பொதுமக்கள் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளன. அவற்றில் சில செம்பாலான பொருள்கள் தொடர்பான படங்களும் செய்தி குறிப்புகளும் தரப்படுகின்றன.

## 47:1 சூலநாழி

காலம் : கி.பி. 17ஆம் நூற்றாண்டு.

செய்தி : 13 செ.மீ. உயரமும் 30 செ.மீ சுற்றளவும் 9 செ.மீ வாய்ப்பகுதி விட்டமும் உடையது. இதனில் சூலம் வார்ப்பாகப் பதிக்கப்பட்டுள்ளது. அதனை ஒட்டி ஒரு வரியில் "வீரப்ப முதலியார் கட்டளை" என்று எழுத்துப் பொறிப்புள்ளது. பண்டைத் தமிழகத்தில் ஒவ்வொரு கோயிலிலும் ஒரு குறிப்பிட்ட பெயருடைய முகத்தல் அளவு பயன்படுத்தப்பட்டுள்ளது. கல்வெட்டுச் செய்திகளை இங்கு நினைவு கூறலாம்.

## 47:2 சாம்பிராணிக் கலசம்

காலம் : சகம் 1514 (கி.பி.1592).

செய்தி : ஒரு கோலின் மீது பொருத்தித் தூக்கி செல்லும் வகையில் 4 செ.மீ. துளை அமைப்புடையது. வாய்ப்பகுதி 13 செ.மீ. விட்டமுடையது. இதனில் கீழுள்ள எழுத்துப் பொறிப்பும் இறுதியில் சங்கும் வெட்டப்பட்டுள்ளன.

திருவாலுறான் ஆதிகேசவன் 1514 ஐப்பசி 11 உ கண்ண[ார]ன் நில்லமன் நாகேசுரன் நடை வச்ச சாம்பிறாணி கலயம்.

## 47:3 தசாவதார செம்புக் கலசம்

காலம் : கி.பி.17ஆம் நூற்றாண்டு.

செய்தி : 8 செ.மீ. உயரமும் வாய்ப்பகுதி 5 செ.மீ. விட்டமும் உடையது. அதிக அகலமுடைய பகுதியில் 28 செ.மீ. சுற் றளவுடையது. இதனில் திருமாலின் பத்து அவதாரங்கள் புடைப்பு உருவங்களாக வார்க்கப்பட்டுள்ளன. 4 செ.மீ. உயரமும் 2 செ.மீ. அகலமும் கொண்டு ஒவ்வொரு அவ தாரமும் வெட்டப்பட்டுள்ளது. உருவங்கள் மிகத்தெளி வாக இல்லையென்றாலும் ஓரளவு புரிந்து கொள்ளக்கூடிய அளவில் உள்ளன. இக்கலசம் திருமால் கோயில் வைதிகச் சடங்குகளில் பூரண கும்பமாகவோ அல்லது அபிசேகக் கலசமாகவோ பயன்படுத்தப்பட்டிருக் கலாம்.

## 47:4 பல்லாக்குப் பொம்மை

காலம் : கி.பி. 18 ஆம் நூற்றாண்டு.

செய்தி : 5.5 செ.மீ. உயரமும், 4 செ.மீ. அகலமும், 13.5 செ.மீ. நீள மும் உடையது. முன்பகுதி தூக்குக்கோலும் மிக அழகாக வளைத்து தாமரை மொட்டுடன் காட்டப்பட்டுள்ளது. ஒரே வார்ப்பாக வார்க்கப்படாமல் பகுதி பகுதிகளாக வார்க்கப்பட்டு பின்பு ஒன்று சேர்க்கப்பட்டுள்ளன. சேர்க் கப்பட்ட பகுதிகள் நாளடைவில் பழுதானதால் ஆட்டம் கண்டு இணைப்புகள் விடுபட்டுள்ளன.

## 47:5 உண்டியல்கள்

காலம் : சோழர்காலம். கி.பி. 11-12ஆம் நூற்றாண்டு.

செய்தி : 11 செ.மீ. உயரம், 5 செ.மீ. வாய்விட்டம், 9 செ.மீ. உயரம், 6 செ.மீ. வாய்விட்டம் முறையே அளவுள்ள இரண்டு செப்பு உண்டியல்கள். இவை பரவலாகத் தஞ்சைப்பகுதி யில் புதையல்களில் கிடைக்கின்றன. இவற்றில் காசுகள் இருந்தமையால் இவற்றை உண்டியல்கள் என்று கருதுவர். மூடிப்பகுதியில் உள்ள வளையங்களில் கம்பிகோர்த்துக் கட்டி வைக்க இயலும். இவற்றின் வழவழப்பான உருண்டை அமைப்பு பைகளில் வைத்து சுருக்கிக்கட்டி எடுத்துச் செல்வதற்கு ஏற்ப அமைக்கப்பட்டுள்ளது என்று கருதலாம்.

# 48. தெலுங்கு எழுத்து பொறித்த செப்பு

**மா. சந்திரமூர்த்தி, சென்னை.**

விழுப்புரம் மாவட்டம் செஞ்சி வட்டம் சமந்தகுப்பம் மலையில் ஒரு இடுக்கில் செம்பு ஒன்று கிடைத்திருப்பதாகச் சமந்தகுப்பம் திரு.து. ஈஸ்வரன் அவர்கள் அளித்த தகவலின்படி இக்கட்டுரை ஆசிரியர் இங்கு நேரில் சென்று ஆய்வு செய்தார். செம்பில் ஒருவரியில் தெலுங்கு எழுத்தில் எழுத்துப் பொறிப்புள்ளது. வயிறு பெருத்தும், கழுத்து குறுகியும் வாய் விளிம்பு விரிந்துமுள்ள இச்செம்பு மலை மீதுள்ள கோயிலுக்குக் பாலி செட்டி என்பவரால் கொடையாகக் கொடுக்கப்பட்டது. தெலுங்கு வாசகத்தைச் சென்னை பேராசிரியை முனைவர் பி.எம். உமா அவர்கள் அன்புடன் படித்தளித்தார்.

காலம் : கி.பி. 17ஆம் நூற்றாண்டு.

திருவீதி$_3$ பா$_3$லி ச்$_0$ரேஷ்டி த$_4$ர்மம்



# 49. கீழவங்காரம் சமண சிற்பம்

கி. ஸ்ரீதரன், திருச்சிராப்பள்ளி.

இடம் : திருச்சிராப்பள்ளி மாவட்டம், மணச்சநல்லூர் வட்டம், கீழவங்காரம்.

காலம் : கி.பி.11-12 ஆம் நூற்றாண்டு.

செய்தி : போசள மன்னர்களின் தலைநகராக விளங்கிய கண்ண னூர் (சமயபுரம்) அருகில் 6 கி.மீ. தொலைவில் உள்ள கீழவங்காரம் கிராமத்தில் ஏரிக்கரையில் சமணதீர்த்தங் கரர் சிற்பம் காணப்படுகிறது. இதன் அளவு 35 × 16 செ.மீ. வணிகர்கள் இவ்வூரில் இருந்திருக்க வேண்டும் என ஊகிக்க முடிகிறது. இச்சிற்பம் கி.பி.11-12ஆம் நூற் றாண்டைச் சேர்ந்ததாகும்.

---

தகவல் அளித்த தொல்பொருள் ஆய்வுத்துறை கல்வெட்டுப் பயிற்சி நிறுவன மாணவர் திரு. ஜெ. முருகேசனுக்கு நன்றி.



# 50. தேவிகாபுரத் தேர்ச்சிற்பம்

*மி.ஜ. இளங்கோவன், ஒன்றபுரம்.*

திருவண்ணாமலை மாவட்டம் ஆரணி வட்டம் தேவிகாபுரம் பெரியநாயகி அம்மன் கோயில் மதிட்சுவரில் அழகிய தேர்ச்சிற்பம் ஒன்று செதுக்கப்பட்டுள்ளது. தேர் கோயில் போன்றே தள அமைப்புக் கொண்டுள்ளது. பொதுவாகத் தேர்கள் கனமானவை ஆதலால் கனத்தைத் தாக்கும் பொருட்டு வெளியே நான்கு சக்கரங்களும் உள்ளே இரண்டு சக்கரங்களுமாக ஆறு சக்கரங்களுடன் விளங்குவதை இன்றைய பெரிய கோயில் தேர்களைக் கண்டால் அறிய முடியும். அவ்விதமே இச்சிற்பத் தேரும் ஆறு சக்கரங்களில் மூன்று சக்கரங்கள் தெரியும் வண்ணம் செதுக்கப்பட்டுள்ளது. தேரின் அடித்தளப் பகுதி கோயில் அதிட்டான அமைப்பைக் கொண்டுள்ளது. கோயில் பத்திபோல தூண்களும் உள்ளன. மேல் தளப்பகுதியில் மூலைகளில் கூடங்களும் நடுவில் 3 ஸ்தூபிக்குடங்களையுடைய சாலையமைப்பும் உள்ளன. சிகரம் நாகர சிகரமாக உள்ளது. வடம் பிடித்து இழுப்போராக மூவர் காட்டப்பட்டுள்ளனர். அவர்களது கால்களும் உடலும் எதிர்த்திசையில் சரிந்து பலம் கொண்டு இழுப்பதாகக் காட்டப்பட்டுள்லது. தேர்கள் நேராகச் செல்லவும் திரும்பவும் முன்சக்கரங்களில் சரிந்த கட்டைகளைக் கொடுத்து எதிர்திசையில் சக்கரங்களைச் சரிய வைத்துத் திருப்புவர். தேரின் முன் சக்கரப்பகுதியில் அப்படி ஒருவர் பணி செய்வது போலத் தலைப்பகுதி காட்டப்பட்டுள்ளது.

தேவிகாபுரம் கோயில்களில் 56 கல்வெட்டுகள் படியெடுக்கப்பட்டுள்ளன. பழமையான கல்வெட்டு சகம் 1399 (கி.பி. 1577)யைச் சேர்ந்தது. பெரும்பாலான கல்வெட்டுகள் விசயநகர அரசு காலத்தைச் சேர்ந்தன. இக்கோயில் கல்வெட்டுகள் திருவாதிரை, உத்திரட்டாதி, கார்த்திகை நட்சத்திரங்களில் நிகழ்ந்த திருவிழாக்களைக் குறிப்பிட்டுள்ளன. ஆனால் இன்று பங்குனி உத்திரத்திருவிழாவில் ஏழாம் நாள் தேர்த்திருவிழாச் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

இத்தேர்ச்சிற்பம் விஜயநகர அரசு காலத்தைச் சேர்ந்தது என்றும் கி.பி. 15-16ஆம் நூற்றாண்டினது என்றும் கொள்ளலாம்.

---

# 51. எழுத்துப் பொறித்த தூபக்கால்

**மா. சந்திரமூர்த்தி, சென்னை.**

தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை பழம்கலைப் பொருட்கள் பதிவு செய்யும் பணி தொடர்பாகச் சென்னை ஆழ்வார் பேட்டை பகுதியில் மேற்கொண்ட கள ஆய்வில் எழுத்துப் பொறிப்பு டன் கூடிய அழகிய தூபக்கால் ஒன்று இருப்பது அறியப்பட்டுள்ளது. கைப்பிடியுடன் 31 செ.மீ. நீளமும் 8 செ.மீ. உயரமும் உடைய தூபக் கால் மேல்வட்டம் 20 செ.மீ விட்டமும் கீழ்வட்டம் 12 செ.மீ. விட்ட மும் உடையதாகக் கீழ்நோக்கி குவிந்துள்ளது. ஒரே வார்ப்பில் வார்க் கப்பட்ட இந்த செப்புத் தூபக்கால் எழிலான தோற்றமுடையதாக உள் ளது. 10 செ.மீ. நீளம் கீழ் நோக்கி வளைந்த கைப்பிடி பொள்ளலாக உள்ளது. வெளிப்பகுதி பெருத்தும் தூபக்காலோடு இணையும் பகுதி சிறுத்துள்ள இக்கைப்பிடி சேருமிடத்தில் இரண்டு அன்னங்கள் அழ காக வடிக்கப்பட்டுக் கைப்பிடியை இணைத்துள்ளன. இதன் வாய் முகப்பைச் சுற்றிலும் சிறிய இதழ் வரிகள் வரிசையாக வெட்டப்பட் டுள்ளன. கீழ்த்தட்டில் நடுவே 8 இதழ்களை உடைய விரிந்த மலர் பொறிக்கப்பட்டுள்ளது. இதன் எடை 1.5 கிலோகிராம். வெளிப்பகுதி யில் மேலும் கீழுமாக இரண்டிரண்டு விளிம்பு வரிகள் உள்ளன. மேல் பகுதியில் கி.பி. 18 ஆம் நூற்றாண்டு எழுத்தமைதியில் எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளன. இக்கலைப் பொருளைத் தனது சேகரிப்பில் வைத்துள்ள திருமதி லில்லி விஜயராகவன் இதனைப் புதுக்கோட்டைப் பகுதியில் சேகரித்ததாக நினைவு கூர்கிறார்.

வீரைலட்சிமிப் பிறதாவாளன் அடுத்தூரை லட்சிக்கு[ம்] மகாலிங்கம் பிள் ளையவர்களுக்கு ஆவுடையம்மாளது:..

---

ஒளிப்படம் உதவி முனைவர் சு. இராசகோபால்.



# 52. சுவடி கட்டும் பலகைகளில் ஓவியங்கள்

**அர. வசந்தகல்யாணி, சென்னை.**

தமிழ்நாடு அரசு தொல்லியல் ஆய்வுத்துறை சேகரித்த சுவடிகள் பலவற்றில் அவற்றின்மேல் பாதுகாப்பாக வைத்துக் கட்டப்பட்ட பல கைகளில் நல்ல ஓவியங்கள் உள்ளன. பலகைகளின் மீது நேரடியாக வரையப்பட்ட ஓவியங்களாகவும், பலகை மீது துணியினை ஒட்டி அதன்மீது வரையப்பட்ட ஓவியங்களாகவும் அவை உள்ளன. இவற் றில் தீர்த்தங்கரர்களின் உருவங்கள் வரையப்பட்டுள்ளன. சமணத்தில் இந்திரன், தர்மச்சக்கரம் ஆகிய இந்து மதத் தொடர்புடையவையும் வணங்கப்பட்டன. அவையும், அசோக மரமும் இவ்வோவியங்களில் காணப்படுவதைக் கொண்டு இச்சுவடிப் பலகைகள் சமண இலக்கியப் படைப்புகளைப் பாதுகாத்தவை என்று கருதலாம். இவை செஞ்சிவட் டம் கீழ்ச்சித்தமூர் ஜின காஞ்சி சமண மடத்தில் பெறப்பட்ட ஓலைச்சு வடிகளோடு தொடர்புடையவை இவ்வோவியப் பலகைகள். இவற் றின்காலம் கி.பி.18-19 ஆம் நூற்றாண்டெனவும் கருதலாம். ஓலைச்சுவ டிகளுக்கும், கல்விக்கும் நெருங்கிய தொடர்பு இருத்தலால் கல்விக்கு மிகச் சிறந்த இடத்தைத் தந்து கல்வித்தானம் செய்த சமணர்கள் ஓலைச் சுவடியை வரலாற்றுப் பேழையாகக் கருதினர் என்பது வரலாற்று உண்மை. மேலும் அதனை பாதுகாக்க மேலே வைத்து கட்டப்படும் பலகைகளிலும் தீர்த்தங்கரர் உருவங்களை வரைந்ததோடு அறிவுக்கண் திறந்து வைக்கும் ஸ்ருததேவி கல்வி பயிலும் துறவியர் ஆகியோரின் உருவங்களையும் வரைந்துள்ளனர் என்பதும் தெரியவருகிறது. இதனை வெறும் பலகைகளாகக் கருதாது, அவற்றின் மேலுள்ள ஓவியங்களை ஆய்வுக் கண்ணோட்டத்தில் பார்வையிட்ட போது இவ்வுருவங்கள் மட்டுமல்லாது ஓலைச்சுவடிகளை வைத்துப் படிக்கும் முறை, சுவடி களை வைத்துப் படிக்கும் சரஸ்வதி பீட (ஓலைச்சுவடித்) தூக்கு எனப் படும் உரி போன்ற அமைப்பு அனைத்தும் அழகாகக் காட்டப்பட்டுள் ளன என்பது அறியப்பட்டது.

## 52:1

**சுவடிக்கட்டில் மேல் பலகை**

70 செ.மீ. × 5.5 செ.மீ. நீள அகலமும் 0.6 செ.மீ. கனமும் உடையது. துளையேதுமில்லை. கட்டையின் மீது துணி ஒட்டப்பட்டுச் சிவப்பு

நிறப் பின்புறத்தில் மஞ்சள் மற்றும் கருநிறக் கோடுகளால் படங்கள் வரையப்பட்டுள்ளன. முன்புறத்தில் வட்ட வடிவப் பெரிய மலர்களும் இலைகள் குறைவாகவும் உள்ள கொடி அமைப்புமுள்ளது. இடதுபுறம் நான்கு சுடர்கள் உள்ள தர்மச் சக்கரத்தின் உருவம் வரையப்பட்டுள் ளது. அதன் முன்னதாகப் பத்மாசனமிட்ட துறவியொருவர் சரஸ்வதி பீடம் எனப்படும் மடக்குப் பலகையின் மீது ஒரு சுவடிக்கட்டிலிருந்து ஓர் ஏட்டினை எடுத்துப் படிப்பது போலவும், சுவடிக் கட்டில் உள்ள பிணைப்பு நூல் எடுக்கப்பட்ட ஏட்டுடன் இருபுறம் நீண்டுவந்ததாக வும் காட்டப்படுகிறது. ஸ்ருத ஸ்கந்த யந்த்ரம் காட்டப்பட்டுள்ளது. அதன்முன் சரஸ்வதி பீடத்தின் ஒரு சுவடிக் கட்டு அதன் இரு முனைக ளிலும் நடுவிலும் தொங்கல்களும் உள்ளன. இப்பலகையின் பின்புறம் பெரிய 10 மலர்களும் சிறு இலைகளும் அம்மலர்களை இணைக்கும் கொடியமைப்பும் உள்ளன.

**சுவடிக்கட்டின் கீழ்ப்பலகை:**

67 செ.மீ. நீளம் 6செ.மீ. அகலமும் 0.75 செ.மீ, கனமுடையது. துளையேதுமில்லை. ஒரு முனை சிதைந்து உடைந்துள்ளது. துணி ஒட் டப்பட்டுச் சிவப்புப் பின்புலத்தில் மஞ்சள் மற்றும் கருப்பு நிறக் கோடு களால் ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன. தெய்வப் படத்திற்கு மட்டும் பச்சை வண்ணம் உடலுக்குத் தீட்டப்பட்டுள்ளது. வலதுபுறம் நடுவில் மலரும் நான்கு முனைச் சுடர்களும் உடைய தர்மச் சக்கரம் வரையப் பட்டுள்ளது. அதனையடுத்து பீடத்தின் மீது இடது கால் மடிந்து வலது கால் தொங்கவிட்ட நிலையில் ஸ்ருததேவி வரையப்பட்டுள்ளது. கரண் டமகுடம் தலையினை அலங்கரிக்கின்றது. அதனை அடுத்து ஒரு துறவி தனியாகவும் நான்கு துறவிகள் ஒன்றாகவும் பத்மாசனமிட்டு அமர்ந்த நிலையில் முன் சொன்னது போல சரஸ்வதி பீடத்தின் மீதுள்ள சுவடிக் கட்டுகளிலிருந்து ஏட்டை எடுத்த நிலையில் உள்ளனர். அவர்களின் பின்னால் 'அசை' என்று சொல்லப்படும் தொங்கும் ஓலைச்சுவடி வைக்கும் (தூக்கு) மரப் பெட்டியுள்ளது. அதனையடுத்து யானை மீது அங்குசத்துடன் அமர்ந்த உருவம் காட்டப்பட்டுள்ளது. அடுத்த உருவம் சிதைந்துள்ளது. இடையிடையே மரங்கள் வரையப்பட்டுள்ளன. இவ் விரு பலகைகளும் சமணம் சார்புடைய சுவடியைக் கொண்டவையாக இருக்கலாம். காலம் கி.பி. 18ஆம் நூற்றாண்டெனலாம்.

## 52:2

72 செ.மீ. நீளமும் 5.5 செ.மீ. அகலமும் 0.6 செ.மீ. கனமும் உள்ள சுவடி மேல், கீழ்ப்பலகைகள், பலகையின் மீது கருமையான பின்புலத் தில் சிவப்பு மஞ்சள் நிறங்களில் வரையப்பட்டவை. இரு இருதுளை கள் இடப்பட்டு நடுவில் பூரண கும்பமும் அவற்றிற்கு வாலையும்

துதிக்கையையும் உயர்த்திச் சுருட்டி மாலையிடும் அலங்கரிக்கப்பட்ட யானைகளும் காட்டப்பட்டுள்ளன. அவற்றையடுத்துக் கொடிமலர் வேலைப்பாடுகளும் அவற்றையடுத்து மீண்டும் இரண்டிரண்டு அலங் கரிக்கப்பட்ட யானைகள் நீண்டவாகும் மாலைகளை உயர்த்திப் பிடித்த நிலையில் காட்டப்பட்டுள்ளன. ஒரு சுவடியில் ஒட்டப்பட்ட காகிதத் தில் கருமையினால் கிரந்த எழுத்துக்களில் 'ஹோம் மட்ட ஸரங்க ணாட்ச விருத்தி' என்று எழுதப்பட்டுள்ளது.

## 52:3

47 செ.மீ. நீளமும் 4 செ.மீ. அகலமும் உடைய மேல்பகுதி உருண் டும், கீழ்ப்பகுதி பட்டையாகவும் உள்ள சுவடிப் பலகை இரு துளை கள் இடப்பட்டது. பலகையின் மீது கருப்பு மஞ்சள் பின்புலத்தில் மஞ் சள், சிவப்பு, கருப்பு, பச்சை வண்ணங்களில் ஓவியங்கள் வரையப்பட் டுள்ளன. முன்புற மலர்களும் தொங்கல்களும் உள்ளன. பின்புறம் 12 தீர்த்தங்கரர்களின் உருவங்கள் உள்ளன. முதல் ஐவர் பொன்னிறத்தி லும் அடுத்தவர் சிவப்பு நிறத்திலும் அடுத்தவர் பச்சை நிறத்திலும் இறு தியாக உள்ளவர் சிவப்பு நிறத்திலும் உள்ளனர். 5ஆவது உள்ளவர் தவிர மற்ற அனைவரது தலைக்கு மேலாக முக்குடைகளும், தோள்களில் மேலாகச் சாமரங்களும் காட்டப்பட்டுள்ளன. இதுபோல இன்னோர் ஓவியப் பலகை இருந்திருக்க வேண்டும். அதிலும் உட்பகுதியில் 24ல் மீதமுள்ள 12 தீர்த்தங்கரர் உருவங்கள் வரையப்பட்டிருக்கலாம்.

---

இவ்வோவியப் பலகைகள் திரு. ச. கிருஷ்ணமூர்த்தியால் 1979ல் சித்தாமூரிலிருந்து தமிழ் நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறைக்காகச் சேகரிக்கப்பட்டன. அவற்றை இக்கட்டு ரைக்குப் பயன்படுத்த அனுமதித்த இத்துறை இயக்குநர் திரு. கு. தாமோதரன் அவர்களுக்கும் ஒளிப்படம் தந்து உதவிய முனைவர் சு. இராசகோபால் அவர்களுக்கும் நன்றி.



# 53. மூன்றாம் நந்திவர்மனின்(?) காசு

**வெ. ராஜு, கரூர்.**

கரூர் அமராவதி ஆற்றுப் படுகையில் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த ஒரு காசு கிடைத்துள்ளது. அதன் எடை 3 கிராம். முன்புறம் சிங்கமும் அதற்கு மேல் சூலமும், சிங்கத்தின் கீழ் வில், தலையை தாழ்த்தி வாலை கால்களுக்கு இடையில் வைத்த புலி, வாயின் மீது ஒரு பந்து வைத்து அமிழ்த்திய வண்ணமும் மீன் ஆகியன உள்ளன. பின்பக்கம் சக்கரம் பூவிதழ்களால் அலங்கரிக்கப்பட்டுள்ளது. பல்லவ மன்னவர்களின் அரச சின்னம் காளை பொறிக்கப்பட்ட காசுகள்தான் இது வரை கிடைத்துள்ளன. சிறப்பு வெளியீடாக இந்த காசை வெளியிட்டுள்ளார்கள் எனலாம். சேர, சோழ பாண்டியரை வெறியலூர், பழையாறு, வெள்ளாறு, தெள்ளாறு போர்களில் முறியடித்தவனும், வடபுலத்தரசரிடமும் திறை பெற்றவனும் நந்திகலம்பகம் முதலிய வரலாற்றுக் குறிப்புகளில் புகழப்படுபவனும், 'பல்லவர் கோளிரி' 'கழல்சிங்கன்' போன்ற சிறப்பு பெயர்கள் கொண்ட மூன்றாம் நந்திவர்மனே இந்த சிறப்பு மிக்க காசை வெளியிட்டுள்ளான் என்று கருதலாம்.

---



# 54. வட இலங்கையில் கிடைத்த அரிய நாணயங்கள்

**ப. புஸ்பரட்ணம், தஞ்சாவூர்.**

வட இலங்கை வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் இருந்து வரலாற்று இலக்கியங்களில் தனித்து இனங் காணப்பட்டுள்ளது. பாலி இலக்கியங்களில் இப்பிராந்தியம் நாகதீப (M.VXX: 25, C.V.X. III: 62) எனவும் வல்லிபுரத்தில் கிடைத்த கி.பி. 3-ஆம் நூற்றாண்டுக்குரிய பொற்சாசனத்தில் நாகதீவ (Paranavitana, 1983: 81) எனவும் அழைக்கப்பட்டுள்ளது. இப்பெயர் தற்காலத்தில் அநுராதபுரத்திற்கு வடக்கில் அமைந்த வவுனியா, முல்லைத்தீவு, கிளிநொச்சி, மன்னார், யாழ்ப்பாணம் ஆகிய மாவட்டங்களை உள்ளடக்கிய வட இலங்கையைக் குறித்ததாக கருதப்படுகிறது. இப்பிராந்தியத்திற்கு தொன்மையான வரலாறு உண்டு என்பதை அண்மைக் காலத்தில் இங்கு கிடைத்துவரும் தொல்லியற் சான்றுகள் உறுதிப்படுத்துகின்றன. அவற்றுள் பண்டைய சங்க கால நாணயங்கள் குறிப்பிடத்தக்கன. அதில் சிங்க உருவம் பொறித்த நாணயங்கள் பற்றி இக்கட்டுரை ஆராய்கிறது.

இலங்கையில் கிடைத்த நாணயங்களுள் மிகுந்த கலை வேலைப்பாடும், அழகும் கொண்ட நாணயங்களுள் சிங்க உருவம் பொறித்த நாணயங்கள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன. அண்மையில் இவ்வகை நாணயங்கள் பத்து வட இலங்கையில் பூநகரி வட்டாரத்தில் உள்ள மண்ணித்தலை, வெட்டுக்காடு, வீரபாண்டியன்முனை, கல்முனை ஆகிய இடங்களிலும், யாழ்ப்பாணக் குடாநாட்டில் கந்தரோடையிலும் எம்மால் பெறப்பட்டன. இவற்றுள் நான்கு நாணயங்கள் சதுரவடிவிலும், ஏனையவை வட்ட வடிவிலும் உள்ளன. இவற்றில் முன்பக்கத்தில் இடம் அல்லது வலம் திரும்பிப் பார்க்கும் நிலையில் சிங்கம் உள்ளது. இதன் வாய் பிளந்த நிலையிலும், வலது கால் முன்னோக்கிப் பாயும் நிலையிலும், வால் பகுதி மேல் நோக்கி உயர்ந்து வளைந்த அமைப்பிலும் காணப்படுகின்றன. இதன் தோற்றம் சங்க காலச் சோழ நாணயங்களில் வரும் புலியுருவத்தை நினைவுபடுத்தினாலும் இதன் பிடரி மயிர் சிங்க உருவம் என்பதை உறுதிப்படுத்துகிறது. நாணயத்தின் பின்புறத்தில் இரு பக்கங்களிலும் குத்துவிளக்கும் நடுவில் பூரண கும்பமும் காணப்படுகின்றது. இவ்வகை நாணயங்களே கந்தரோடை, மாதோட்டம், அநுநாதபுரம் ஆகிய இடங்களில் கிடைத்துள்ளன. பூநகரியில் இவ்வகை நாணயங்களோடு பூரண கும்பத்திற்கு பதிலாக போதி மரம் காணப்படுகிறது. நாணயங்களின் அமைப்பு, எடை அளவு, சின்

னங்கள் என்பவற்றை அடிப்படையாகக் கொண்டு நான்கு வகையாக பிரிக்கலாம்.

## 54:1

இடம்: பூநகரி வடிவம்: வட்டம் உலோகம்: செம்பு
அளவு: 2.3 செ.மீ. விட்டம் நிறை: 4.8 கிராம்
முன்புறம்: வலப்பக்கம் பார்த்தநிலையில் வாய் பிளந்து நிற்கும் சிங்கம் வலது கால் பாயும் நிலையில் உயர்ந்து காணப்படுகிறது. அதற்கு முன்னால் சங்கு காணப்படுகிறது. வால் பகுதி மேல் நோக்கி உயர்ந்து வளைந்து விளிம்புடன் வரும் அரைவட்ட கோட்டுடன் இணைந்துள்ளது.
பின்புறம்: ஏழு கிளையுள்ள போதி மரம். அதன் இலைகள் கிளையில் நீளத்திற்கு ஏற்ப கூடிக் குறைந்து காணப்படுகின்றன.

## 54:2

இடம்: வெட்டுக்காடு வடிவம்: சதுரம் உலோகம்: செம்பு
அளவு: 2.1 × 2.0 செ.மீ. நிறை: 4.9 கிராம்
முன்புறம்: விளிம்பைச் சுற்றி வட்டமான புள்ளிகள், வட்டத்திற்குள் வலப்புறம் பார்த்த வண்ணம் வலது காலை உயர்த்திப் பாயும் நிலையில் சிங்கம். அதன் முன்னால் சங்கு காணப்படுகிறது.
பின்புறம்: மேல்பக்க விளிம்பைச் சுற்றி வட்டமான புள்ளிகள். கீழே ஆறு கிளையுள்ள போதிமரம். இதன் உயரம் முதலாவது நாணயத்தில் வரும் போதி மரத்தைவிடக் குறைவு.

## 54:3

இடம்: கந்தரோடை வடிவம்: வட்டம் உலோகம்: செம்பு
அளவு: 1.9 கிராம். நிறை: 3.1 செ.மீ.
முன்புறம்: வலது பக்கம் பார்த்த நிலையில் வாயைப் பிளந்து வலது காலை உயர்த்திப் பாயும் நிலையில் சிங்கம் வால் பகுதி மேலே உயர்ந்து இடப்பக்கமாக வளைந்து காணப்படுகிறது.

| | |
|---|---|
| பின்புறம்: | இடப்பக்கம் குத்துவிளக்கு. மத்தியில் மூன்று கிளைகளு டன் கூடிய பூரண கும்பம் வலப்பக்கம் குத்துவிளக்கு. பூரண கும்பத்திற்கு கீழே இரு கோடுகள் இவை மங்க லச் சின்னமாக அல்லது பீடமாக இருக்கலாம். இதன் கீழ் ஐந்து புள்ளிகளை இணைத்து ஒரு கோடு. |

## 54:4

| | | | | | |
|---|---|---|---|---|---|
| இடம்: | கல்முனை | வடிவம்: சதுரம் | உலோகம்: | செம்பு | |
| அளவு: | 1.6 × 1.5 செ.மீ. | | நிறை: | | 3.0 கிராம் |
| முன்புறம்: | வலப்புறம் பார்த்த வண்ணம் வாயைப் பிளந்த நிலையில் சிங்கம். | | | | |
| பின்புறம்: | பூரண கும்பம். | | | | |

இந்நாணயங்கள் எங்கே, எப்போது வெளியிடப்பட்டன என்பதில் அறிஞரிடையே வேறுபட்ட கருத்துகள் உள்ளன. மாதோட்டத்தில் கிடைத்த இவ்வகை நாணயங்கள் ஆய்வு செய்த எட்டி ஆராய்ச்சி இவற் றைப் பல்லவ மன்னர் வெளியிட்டிருக்காலம் எனக் கருத்து தெரிவித் துள்ளார் (Hettiaratchi: 1955:72-76). அண்மையில் அநுநாதபுர அகழ்வாய் வில் இரண்டாவது கலாசாரப் படையிலும் இவ்வகை நாணயங்கள் பெறப்பட்டன. இவற்றோடு கிடைத்த பிற நாணயங்களை அடிப்படை யாக கொண்டு இவற்றை பாண்டிய மன்னர் 9, 10ஆம் நூற்றாண்டில் வெளியிட்டு இருக்கலாம் எனக் கருத்து தெரிவிக்கப்பட்டுள்ளது. (Bopearachchi, 1998: 157). ஆனால் தமிழ்நாட்டிலோ அல்லது இந்தியா வின் பிற இடங்களிலோ இவ்வகை நாணயங்கள் ஒன்று தானும் இது வரை கிடைத்ததற்குச் சான்றில்லை. இவற்றைப் பல்லவர் அல்லது பாண்டியர் வெளியிட்டிருக்கலாம் எனக் கூறக்கூடிய உறுதியான ஆதா ரங்கள் எவையும் இதுவரை காணப்படவில்லை. இந்நிலையில் இலங் கையில் மட்டும் கிடைத்து வரும் இந்நாணயங்களைத் தென்னிந்திய வம்சங்களுடன் தொடர்புபடுத்துவது பொருந்துமாறில்லை.

இலங்கையில் சிங்க உருவம் பொறித்த நாணயங்கள் வெளியிடும் மரபு மிகத் தொன்மையானது. இதன் முன்பக்கத்தில் சிங்கமும், பின்பு றத்தில் நான்கு புள்ளிகளும் அதைச் சுற்றி வட்டமும் உள்ளது. சிங் கத்தை சிங்கள அரச வம்சத்தில் இலச்சினையாகக் கொள்ளும் மர புண்டு. இதற்கு சிங்கள மக்களின் பூர்வீக வரலாறு சிங்கத்தோடு தொடர்புபடுத்திக் கூறப்படுவதும், பிற்காலத்தில் சிங்கள மன்னர் பெயர் பொறித்த நாணயங்களில் சிங்கம் இலச்சினையாகப் பயன் படுத்தப்பட்டுள்ளமையும் சான்றாகக் காட்டப்படுகிறது. ஆனால் இச்

சிங்க உருவத்திற்கும், நாம் மேலே கூறிய சிங்க உருவ நாணயங்களுக் கும் அதிக ஒற்றுமை காணப்படவில்லை. மேலும் பின்புறத்தில் உள்ள சின்னங்களும் வேறுபட்டுக் காணப்படுகின்றன. இதனால் இவற்றை ஒன்று எனக் கூறமுடியாவிட்டாலும் ஒன்றின் தொடர்ச்சியெனக் கூற முடியும். இதன் மூலம் மேலே கூறப்பட்ட நாணயங்கள் இலங்கையில் வெளியிடப்பட்டதாகச் சொல்லலாம். விஷ்ணுகுண்டில வம்சத்தினர் வெளியிட்ட வட்ட, சதுர நாணயங்களில் சிங்கம், ஒரு முக்கிய சின்ன மாக இடம் பெற்றுள்ளது (Sarma, 1980:138). ஆனால் இந்நாணயங்களில் பின்புறத்தில் வரும் சின்னங்கள் இலங்கையில் கிடைத்த நாணயங்க ளில் இருந்து வேறுபடுகின்றன. தமிழ்நாட்டில் கி.பி. 5-ஆம் நூற்றாண் டில் இருந்து வெளியிட நாணயங்களில் சிங்க உருவம் கிடைத்து உள் ளன. இரா. நாகசாமி இவற்றை விஷ்ணுகுண்டி வம்சத்தினர் வெளியி டப்பட்டதாக கூறுகிறார். (Nagaswamy, 1981:126) இரா. கிருஷ்ணமூர்த்தி பல்லவர் வெளியிட்டனர் என்பதற்கு ஆதாரம் காட்டுகிறார். (காசிநா தன், 1995\ 56-57). பல்லவர்க்கு கொடியில் சிங்கம் சின்னமாக இருந்த தற்கு இலக்கியங்களில் சான்றுண்டு. பல்லவ மன்னர்கள் சிம்மவர்மன், நரசிம்மன், இராஜ சிம்மன் முதலான பெயரைத் தாங்கியிருப்பது இக்க ருத்தை மேலும் வலுப்படுத்துகிறது. ஆனால் இவர்கள் வெளியிட்டதா கக் காட்டப்படும் சிங்க உருவம் பொறித்த நாணயத்தின் பின்புறத்தில் சங்கு இடம் பெற்றுள்ளது. இந்த அம்சம் இலங்கையில் கிடைத்த நாணயங்களில் இருந்து பல்லவர் வெளியிட்ட நாணயங்களை வேறுப டுத்துகிறது. ஆனால் பல்லவ மன்னர் பெயரோடு வெளியிட்ட காளை யுருவம் பொறித்த நாணயங்களில் பின்புறத்தில் பூரணகும்பமும், போதிமரமும் இடம் பெற்றுள்ளன. இவை இலங்கையில் கிடைத்த நாணயங்களோடு பெருமளவுக்கு ஒற்றுமையுடையன. எனவே பல்ல வர் வெளியிட்ட நாணயங்களில் இடம் பெற்றுள்ள சிங்கம், பூரணகும் பம், போதிமரம் என்பன இலங்கையில் சிங்க உருவம் பொறித்த நாண யங்களோடு ஒற்றுமை கொண்டிருப்பதினால் பல்லவ வம்சத்திற்கும் இலங்கை நாணயங்களுக்கும் இடையே ஒருவித தொடர்பு இருக்க லாம் போல் தோன்றுகிறது. இத்தொடர்பை பண்பாட்டு அடிப்படையி லும் பார்க்க அரசியல் மேலாதிக்க அடிப்படையில் நோக்குவது பொருத்தமாகத் தோன்றுகிறது.

கி.பி. 3-ஆம் நூற்றாண்டில் இருந்து பல்லவ வம்சம் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்த வரலாற்றை அவர்கள் வெளி யிட்ட செப்புப் பட்டயங்கள் வாயிலாக அறிகிறோம். ஆனால் கி.பி.5ஆம் நூற்றாண்டுக்கு முன் பல்லவர் நாணயங்களை வெளியிட்ட தற்கோ, தமிழ் நாட்டில் பரந்த நிலப்பரப்பை ஆட்சி செய்ததற்கோ சான்றுகள் காணப்படவில்லை. இதே வேளை இலங்கை அரசியல் வர

லாறு கி.பி. 3-ஆம் நூற்றாண்டில் இருந்து மாற்றமடைவதைக் காண லாம். இதுவரை தமிழ்நாட்டிலிருந்து வந்து இலங்கையின் ஆட்சியைக் கைப்பற்றிய நிலை கி.பி. 3-ஆம் நூற்றாண்டில் பின் தொடர்ந்தாலும், இலங்கையில் அரசுரிமை இழந்த சிங்கள மன்னர் சிலர் தமிழ்நாடு சென்று தமிழர் படையுடன் வந்து மீண்டும் ஆட்சியைக் கைப்பற்றும் நிலை தோன்றியது. இதற்கு அபயநாகன் (237-245) மொகல்லாவ (497-514). ஆகியோர் ஆட்சி சிறந்த சான்றாகும். இவர்கள் ஆட்சியைப் பெற பல்லவர் துணையாக இருந்தார்களா என்பது தெரியவில்லை. ஆனால் நரசிம்மன் காலத்தில் வட இலங்கையில் (நாகதீபம்) தஞ்சம் புகுந்த "மாவா" என்ற சிங்கள இளவரசன் பல்லவரிடம் அடைக்கலம் பெற்று பல்லவரைப் போன்று தன் பெயரை "மானவர்மன்" என மாற்றி பல்லவர் மேற்கொண்ட படையெடுப்புக்களில் பங்கெடுத்தார் என கர்நூல் பட்டயம் கூறுகிறது. (இராசமாணிக்கனார். 1977:21) இதற்குப் பிரதியுபகாரமாக நரசிம்ம பல்லவன் இரு தடவை இலங்கைக்குத் தன் படையை அனுப்பி மாறவர்மனை அரசனாக்கினார். இரண்டாவது படையெடுப்பிற்கு நரசிம்ம பல்லவன் மகாபலிபுரம் வரை தலைமை தாங்கி தன் படையை இலங்கைக்கு அனுப்பி வைத்தான். இதன் மூலம் மானவர்மன் மன்னனாக முடிசூட்டிக் கொண்டதுடன் பல்லவரின் மேலாண்மையையும் ஏற்றுக் கொண்டான். இந்நிலை சிறிது காலம் இலங்கையில் தொடர்ந்து நீடித்தது.

இலங்கை அரசியலில் பல்லவருக்கிருந்த மேலாண்மையையும், நாணயங்களுக்கிடையிலான ஒற்றுமையையும் வைத்து நோக்கும் போது இருவகையான முடிவுகளுக்கு வர முடிகிறது. அதாவது பல்லவ மன்னர் உதவியோடு அரசமைத்துக் கொண்ட இலங்கை மன்னர் பல்லவர் மேலாண்மையை ஏற்கும் வகையில் அவர்களது நாணயங்களில் இடம் பெற்றுள்ள சின்னங்களை தமது நாணயங்களிலும் பயன்படுத்தியிருக்கலாம் அல்லது பல்லவர் இலங்கை மீதான தமது மேலாண்மையை நினைவுபடுத்தும் வகையில் இலங்கை நாணயங்களில் இடம் பெற்றிருந்த சின்னங்களைத் தமது நாணயங்களிலும் பயன்படுத்தியிருக்கலாம் அல்லது பல்லவர் இலங்கை மீதான தமது மேலாண்மையை நினைவுபடுத்தும் வகையில் இலங்கை நாணயங்களில் இடம் பெற்றிருந்த சின்னங்களைத் தமது நாணயங்களிலும் பயன்படுத்தியதாக இருக்கலாம். இம்முறை சங்க காலம் தொட்டு தமிழ் நாட்டு அரச வம்சங்களால் பின்பற்றப்பட்டதற்குச் சான்றுகள் உள்ளன. இலங்கையில் சிங்க உருவம் பொறித்த நாணயங்கள் வட்டம், சதுரம் என இரு வடிவங்களில் உள்ளன. பல்லவ நாணயங்கள் வட்ட வடிவில் வெளியிடப்பட்டவை. சதுர வடிவ நாணயங்கள் காலத்தால் முற்பட்டவை. மேலும் இதில் வரும் பூரண கும்பம், சிங்கம் இலங்கையில் கி.பி. 3-ஆம் நூற்

றாண்டுக்கு முற்பட்ட நாணயங்களிலும் இடம் பெற்றுள்ளன. இத னால் இரண்டாவது கூற்றே பொருத்தமாகத் தோன்றுகிறது.

---

## நூற்பட்டியல்


1. இராசமாணிக்கனார், மா., 1971, *கல்வெட்டுகளில் அரசியல் சமயம் சமுதாயம்*, சென்னை
2. காசிநாதன், நடன, 1995, *தமிழர் காசு இயல்*, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.
3. Bopearachchi, O. 1998, "Archaeological Evidence on changing patterns of International Trade Relation of Ancient Sri Lanka" (ed.) Bopearachchi, O. Weerakkody, D.P.M., *Origin and Circulation of Foreign Coins in the Indian Ocean*, New Delhi.
4. *Culavamsa*, 1953 (ed.) Geiger, W. Colombo.
5. Hettiaratchi, D.P.E., "A note on an unpublished Pallava coin". *Journal of the Ceylon Branch of the Royal Asiatic Society*, Vd. IV, Part.1, Colombo., pp.72-76.
6. *Mahavamsa*, 1950 (ed) Geiger, W. Colombo.
7. Nagaswamy, R. 1981 *Tamil Coins - a Study*, Tamil Nadu State Department of Archaeology, Madras.
8. Pasranavitama, S. 1983 *Inscriptions of Ceylon*, Vol. II, part I, The Department of Archaeology Sri Lanka, Moratawa
9. Sarma, I.K., 1980 *Coinage of the Sathavahana Empire*, Agamkala Prakashan, *Delhi*


---






# 55. தஞ்சை மராட்டியர் காசு

**ஆறுமுகசீதாராமன், தஞ்சை.**

தஞ்சை மராட்டிய மன்னர் பிரதாப்சிங் காலத்தில் (கி.பி. 1739- 1763) வெளியிட்ட ஒரு செப்புக்காசு முதன்முறையாக தஞ்சையில் கிடைத்துள்ளது. 2.7 கிராம் எடையுள்ள இக்காசின் முன்பக்கத்தில் வலது பக்கம் நோக்கி நிற்கும் சிங்கமும், பின்பக்கத்தில் இரண்டு வரிகளில் 'த ஜா உ ர்' என்ற நாகரி எழுத்தும் உள்ளன. 'ஞ' என்ற எழுத்து நாகரியில் அதிகமாக உபோயகமாவதில்லை அதனால் காசில் உள்ள எழுத்தை 'தஞ்ஜாஉர்' என்று திருத்திப் படிக்கலாம். பிரதாப்சிங் காலத்தில் வெளியிட்ட கல்வெட்டுகள், செப்பேடுகள், மோடி ஆவணங்களில் தஞ்சாவூர்ச் சக்கரம், தஞ்சாவூர் பணம், தஞ்சாவூர்காசு, செப்பு தஞ்சாவூர் அரைக்காசு என்று பெயர்கள் வருகின்றன. மராட்டியர்களின் தலைநகராக தஞ்சாவூர் இருந்ததால் ஊர்ப்பெயரையே தாம் வெளியிட்ட காசில் பொறித்துள்ளனர்.



# 56. உடையார்பாளையம் சீமைக்காசு

**ஆறுமுக சீதாராமன், தஞ்சை.**

ரங்கப்ப உடையார் கி.பி. 1801-1835 வரை உடையார்பாளையம் சீமையில் குறுநில மன்னராக இருந்தார். இவர் காலத்தில் வெளியிட்ட ஒரு செப்புக் காசு முதன் முறையாக கும்பகோணத்தில் கிடைத்துள் ளது. காசின் எடை 4.750 கிராம். காசின் முன்பக்கத்தில் வட்டத்திற்குள் அனுமன் நின்ற நிலையில் உள்ளான். பின்பக்கத்தில் வட்டத்திற்குள் 'ரங்கப' என்று இரண்டு வரிகளில் பிற்காலத் தெலுங்கு எழுத்துகளில் பொறிக்கப்பட்டுள்ளன. உடையார்பாளையம் மன்னர்கள் தாம் வெளி யிட்ட காசுகளில் தெலுங்கையே பயன்படுத்தி உள்ளனர். ரங்கப்ப உடையார் தன்னுடைய ஆட்சிக் காலத்தில் ஒரு நாணய சாலையை சொந்தமாகவே நிறுவி, அவற்றின் மூலம் காசுகளை அச்சடித்து, புழக் கத்திற்கு வெளியிட்டுள்ளார். உடையார்பாளையத்தில், அமைந்துள்ள அரண்மனை வளாகத்தின் ஒரு பகுதியை 'நாணயச்சாலை கட்டடம்', என்று இன்றும் கூறி வருகிறார்கள். அதை 'செட்டியார் கூடம்' என்றும் அழைக்கிறார்கள். திருச்சிராப்பள்ளி கலெக்டர் வாலஸ்துரை, வரு வாய்த்துறைக் குழுவிற்கு 31.8.1808ல் அனுப்பிய அறிக்கையில் உடை யார்பாளையம் காசைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். சரஸ்வதி மஹாலில் உள்ள கி.பி. 1830க்குரிய இரு மோடி ஆவணக் குறிப்புகளில் 'ஒடையார் பாளையம் பணம்' என்ற காசும் குறிக்கப்பட்டுள்ளது.



படம். 56.1. உடையார்பாளையம் சீமைக்காசு

# 57. இடைக்கால தமிழ்க் கல்வெட்டுகளில் வட்டி விகிதம்

மா. பவானி, தஞ்சாவூர்.

இடைக்காலக் கல்வெட்டுகளின் அடிப்படையில் வட்டி விகிதம் குறித்த ஆய்வு விரிவான அளவில் இதுவரை மேற்கொள்ளப் பெறவில்லை. இது பற்றி ஆய்வு செய்த ஒரு சில ஆய்வாளர்களும் தமிழகக் கல்வெட்டுத் தரவுகளை பயன்படுத்தவில்லை.[1] எனவே இடைக்காலத்தில் (கி.பி. 800 முதல் 1600 வரை) தமிழகத்தில் கிடைக்கும் கல்வெட்டுத்தரவுகளை முழுமையாக ஆழ்ந்து நோக்கி, அவற்றில் காணப்படும் நாணயத் தொடர்புடைய வட்டி (பொலிசை) விகிதத்தை விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

இதுவரை வெளியிடப்பெற்றுள்ள கி.பி. 800-1600 காலகட்டத்தைச் சேர்ந்த தமிழ்க் கல்வெட்டுகளில் நாணயத் தொடர்புடன் வட்டி விகிதம் இடம் பெற்றுள்ள கல்வெட்டுகள் 83 ஆகும். இக்கல்வெட்டுகளில் "பொலிசை" அல்லது "பலிசை" என்ற சொற்கள் வட்டியைக் குறிக்க பயன்படுத்தப் பெற்றுள்ளது. நாம் இன்று வழக்கில் கொண்டுள்ள "வட்டி" என்ற சொல் விஜயநகர ஆட்சிக் காலத்தில் இருந்து தான் இடம் பெற்றுள்ளது.

கிடைக்கப் பெற்ற இக்கல்வெட்டுகளில் பொலிசை விகிதம் 50% தானியமாகவும், பொருட்களாகவும் கொடுக்கப்பெற்றுள்ளது. காட்டாக, திருச்சியிலிருந்து கிடைக்கும் ஒரு கல்வெட்டில் புத்தடி என்பவர் 90 கழஞ்சு பொன்னை திருவரங்கம் கோயிலுக்கு தானமாகக் கொடுத்து, அதிலிருந்து வரும் பொலிசையினைக் கொண்டு பிராமணர்களுக்கு உணவளிக்குமாறு கூறியுள்ளார். இதில் பொலிசையானது ஆண்டுக்கு 1 கலம், 1 தூணி, பழநெல் என்று விதிக்கப்பெற்றுள்ளது.[2] மற்றொரு கல்வெட்டில் 71 கழஞ்சு பொன்னிற்கு பொலிசையாக 5 கரை பீமசேனி கற்பூரம் பெறப் பெற்றுள்ளது.[3] இது போன்று கொடுக்கப்பெறும் கல்வெட்டுகளில் பொலிசை விகிதத்தை சரியாகக் கணிக்க இயலாததால் இவை ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்பெறவில்லை.[4] பொருளோ, நாணயமோ முதலீடும், வட்டியும் ஒரே வகையாக காட்டப்பட்டுள்ள 43 கல்வெட்டுகளே ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்பெற்றுள்ளன.

ஆய்வு வசதிக்காக இந்த 43 கல்வெட்டுக்களும் கி.பி. 8-ஆம் நூற்றாண்டு முதல் 6 காலகட்டங்களாகப் பிரிக்கப்பெற்று அவை இரு அட்டவணைகள் மூலம் விளக்கப்பெற்றுள்ளன.

கல்வெட்டுகளில் நேரடியாக வட்டி விகிதம் கொடுக்கப்பெற வில்லை. தொடர்புடைய சில செய்திகளைக் கொண்டு, நாம் அதன் ஆண்டு விகிதத்தைக் கணக்கிடவேண்டும். எடுத்துக்காட்டாக, தஞ்சாவூரிலிருந்து கிடைக்கும் கல்வெட்டொன்று பல்லவ அரசி 6 கழஞ்சு பொன் கொடை வழங்கி அதிலிருந்து பெறும் வட்டி கொண்டு அமுது படைக்கக் கூறியுள்ளார். இதற்காகக் கொடுக்கப் பெற்றுள்ள பொலிசை ஆண்டுப் பொலிசை 1 கழஞ்சு பொன்னிற்கு ¼ கழஞ்சாகும்.[5] இதிலிருந்து வட்டி 25 விழுக்காடு என்று கணக்கிடப் பெற்றுள்ளது. பெரும் பாலும் முதலீட்டு பொன்னின் அளவு கழஞ்சிலும், பொலிசை மஞ்சாடியிலும் கொடுக்கப்பெற்றுள்ளது. இவ்விதம் கொடுக்கப்பெறும் கல்வெட்டுகளுக்கு "20 மஞ்சாடி: 1 கழஞ்சு" என்று பொதுவாக கணக்கிடப் பெற்றுள்ளது. எடுத்துக்காட்டாக திருமுக்கூடலிலிருந்து கிடைக்கும் கல்வெட்டொன்றில் பல்லவ மன்னன் நிருபதுங்கன் 10 கழஞ்சு பொன் கொடை கொடுத்து, இதிலிருந்து வரும் பொலிசை கொண்டு நந்தா விளக்கெரிக்கக் கூறியுள்ளான். இதில் ஆண்டுக்கு 1 கழஞ்சு 3 மஞ்சாடி என்று பொலிசை உள்ளது.[6] எனவே வட்டி விகிதம் 15% எனக் கணக்கிடப் பெற்றுள்ளது.

இவ்விதம் மற்ற அனைத்து கல்வெட்டுகளுக்கும் வட்டிவிகிதம் கணக்கிடப்பெற்று அது அட்டவணை 1, 2 மூலம் விளக்கப்பெற்றுள்ளது. அட்டவணை 1இல் காலவரிசையின் படி வட்டி விகிதங்கள் விளக்கப்பெற்றுள்ளன. இது கொண்டு நோக்குகையில் முதல் காலகட்டத்தில் 15% என்பது பரவலாகக் காணப்பெறுகிறது. இரண்டாவது காலகட்டத்தில் 12% என்றுள்ளது. பிறகுள்ள காலகட்டத்தில் இவ்விரு சதவிகிதங்களும் அரிதாகவே காணப்பெறுகின்றன. மூன்றாம் காலகட்டத்திலிருந்து, அதாவது 11-ஆம் நூற்றாண்டிலிருந்து 20% என்பது சாதாரண விகிதமாக உள்ளது. 20%ம் அதற்கு மேலாகவும் உள்ள வட்டி விகிதங்கள் 4- ஆம் காலகட்டத்தில் இருந்தாலும் முதல் காலகட்டத்திலும் அதற்கு முன்பும் காணப்பெறுகின்றன. ஒருக்கால் இந்த வட்டி விகித வேறுபாடு, இடத்திற்கு இடம் வேறுபட்டிருக்குமா என்ற ஐயத்தை அட்டவணை 2- தெளிவுபடுத்தும். இது கொண்டு நோக்குகையில் சோழ மண்டலத்திலேயே வேறுபெற்ற விகிதங்கள் காணப்பெறுகின்றன. எனவே இடவேறுபாடு வட்டி விகித வேறுபாட்டிற்கு காரணம் அல்ல என்பது உறுதியாகிறது.

இந்த முடிவுகளை மற்ற ஆய்வாளர்களின் கருத்துகளுடன் ஒப்பிடலாம். ஓ.பி. ஸ்ரீவாஸ்தவா இடைக்கால இலக்கியங்களை, குறிப்பாக தர்மசாஸ்திரங்களை, அடிப்படையாகக் கொண்டு முந்தைய இடைக் காலத்தில் வட்டிவிகிதம் 15% முதல் 24% வரை என்றிருந்தது என்றும்,

ஒரு சிலநேரத்தில் மட்டும் அதிக வட்டி வீதமான 24% அனுமதிக்கப் பெற்றுள்ளது என்றும் கூறுகின்றார்.

எனவே இக்காலகட்டத்தில் தமிழகத்திலும் ஏறக்குறைய தர்மசாஸ்திர விதிப்படியே வட்டிவிகிதம் இருந்துள்ளது என்றும், இதற்கு மேல் வட்டி வாங்குவது பாவச்செயல் என்று அது கூறுவதன் விளைவாக இது இருந்திருக்கலாம் என்றும் நாம் முடிவு செய்யலாம். அல்லது தர்ம சாஸ்திரங்கள் வழக்கில் இருந்த விகிதங்களையே எதிரொலித்தன எனலாம். நமக்கு கிடைத்திருக்கும் தரவுகள் அனைத்தும் மதத்தொடர்பானவையாக உள்ளன. ஒருவேளை, வணிகம் மற்றும் பிற உலகியல் நடவடிக்கைகளுக்கு இதைவிட அதிக வட்டி விகிதம் பெற்றிருக்கக் கூடும்.

## குறிப்புகள்

1. O.P Srivastava, "Rate of Interest During Early Medieval India", *Eassys in Ancient Indian Econamic History*, ed. Brajudulal Chatttopadhyaya, Munshiram Manoharlal Publishers Pvt. Ltd. Delhi, 1987, pp.197- 210.
2. *தெஇக. 4.* எண். 517.
3. *தெஇக.* 24, எண்.12.
4. *தெஇக.* 7, எண் 1037.
5. *தெஇக.* 7, எண் 525.
6. *தெஇக.* 12, எண்.75.

## அட்டவணை: 1
## கால, விகித வரிசையினால் வகுக்கப் பெற்ற வட்டிவிகிதம்

| காலகட்டம்<br>காலம் - விகிதங்கள் | 12% | 15% | 20% | 25% | 30% | 40% | 75% |
|---|---|---|---|---|---|---|---|
| I (846-985) | 1 | 13 | 1 | 2 | 1 | 1 | 1 |
| II (986-1070) | 10 | 2 | 1 | 1 | - | - | - |
| III (1071-1178) | 1 | - | 1 | - | - | - | - |
| IV (1179-1279) | - | - | 1 | - | - | - | - |
| V (13-14ஆம் நூ.) | - | - | 2 | - | - | - | - |
| VI (15-16ஆம் நூ.) | - | 3 | 1 | 1 | - | - | - |
| மொத்தம் | 12 | 18 | 7 | 4 | 1 | 1 | 1 |

அட்டவணை 2:

| காலகட்டம் | வட்டி விகிதம் (%) | சோழ மண்டலம் | தொண்டை மண்டலம் | பாண்டி மண்டலம் |
|---|---|---|---|---|
| I (846-985) | 12 | 1 | - | - |
| | 15 | 2 | 11 | - |
| | 20 | 1 | - | - |
| | 25 | 2 | - | - |
| | 30 | 1 | - | - |
| | 40 | - | - | 1 |
| | 75 | 1 | - | - |
| II (986-1070) | 12 | 9 | 1 | - |
| | 15 | 2 | - | - |
| | 20 | 1 | - | - |
| | 25 | 1 | | - |
| III (1071-1178) | 12 | - | 1 | - |
| | 20 | 1 | - | - |
| IV (1179-1279) | 20 | 1 | - | - |
| V (1279-1350) | 20 | 1 | - | 1 |
| VI (1350-1600) | 15 | 3 | - | - |
| | 20 | 1 | - | - |
| | 25 | - | 1 | - |
| மொத்தம் | | 28 | 14 | 2 |

# 58. செய்தித் திரட்டு

## 58.1. தமிழகத் தொல்லியல் கழக ஒன்பதாம் ஆய்வுக் கருத்தரங்கம்

தமிழகத் தொல்லியல் கழகத்தின் ஒன்பதாம் ஆய்வுக் கருத்தரங்கம் புதுக்கோட்டையில் 1998 சூலைத்திங்கள் 11, 12 ஆகிய இரு நாட்களில் வர்த்தகர் கழக திருமண மண்டபமான சில்வர் ஹாலில் நடைபெற்றது. கருத்தரங்கிற்குத் தேவையான அனைத்து ஏற்பாடுகளையும் திரு. ராஜா முகமது, திரு. கரு. இராசேந்திரன் ஆகியோர் சிறப்புறச் செய்திருந்தனர். தொடக்க விழாவிற்கு முனைவர் கோ.விசயவேணுகோபால் தலைமை தாங்கினார். முனைவர் ராஜாமுகமது வரவேற்புரை நல்க, செயலர் ஆண்டறிக்கை அளித்தார். ஆவணம் 9 ஆம் இதழ் மற்றும் புலவர் செ. இராசு அவர்களின் மணிவிழா ஆய்வுக் கோவையான வரலாற்றுக் கலம்பகம் நூல் ஆகியவற்றை புதுக்கோட்டை மாவட்ட வருவாய்த் துறை அலுவலர் திரு. சு. அறிவுக்கரசு வெளியிட்டு சிறப்புரையாற்றினார். காவல்துறை கண்காணிப்பாளர் திரு. பி. இராமசாமி வாழ்த்துரை வழங்கினார்.

கருத்தரங்கில் கல்வெட்டியல் அறிஞர் ஐராவதம் மகாதேவன் அவர்களுக்கு கழகத்தின் சார்பாக செப்பேடு அளிக்கப்பட்டுச் சிறப்புச் செய்யபட்டது. புதுக்கோட்டை ராணியார், ராஜகுமாரி திருமதி ரமாதேவி அவர்கள் செப்பேடு வழங்கியதைத் தொடர்ந்து முனைவர் எம்.டி. சம்பத், திரு நடன காசிநாதன், முனைவர் சு. இராஜகோபால் ஆகியோர் அன்னாரின் ஆய்வுப் பணிகளைப் பாராட்டி வாழ்த்தினார்கள். ஏற்புரை நல்கிய திரு ஐராவதம் மகாதேவன் அவர்கள் கல்வெட்டாய்வாளர் திரு. தி.ந. சுப்பிரமணியன் அவர்கள் பெயரில் அறக்கட்டளை ஒன்று அமைக்க நல்கை வழங்குவதாக அறிவித்தார். இந்நல்கையை கழகச் செயற்குழு ஏற்றுக் கொண்டு தங்களது நன்றியையும் தெரிவித்துக் கொண்டது.

இரு நாட்களும் ஐந்து அமர்வுகளில் 34 கட்டுரைகள் படிக்கப்பெற்றன. முதல் நாள் மாலை பேராளர்கள் புதுக்கோட்டை அருங்காட்சியகத்தையும் திருமயத்தில் வரலாற்றுச் சிறப்புமிக்க இடங்களையும் பார்வையிட்டனர். நிறைவு விழா பேரா. எ. சுப்பராயலு தலைமையில் நடைபெற்றது. இதில் திரு. பு.கி. தமிழரசன் எழுதிய 'சங்க காலம்' என்ற நூலும், திரு. கரு. இராசேந்திரன் எழுதிய 'முத்து வைரவன் சேர்வை கும்மி' என்ற நூலும் இந்திய தொல்லியல் அளவீட்டுத்துறை (கல்வெட்டியல் பிரிவு) இயக்குநர் முனைவர் எம்.டி. சம்பத் அவர்க

ளால் வெளியிடப்பெற்றது. இறுதியாக திரு.ராஜாமுகமது நன்றியுரை யாற்றினார்.

## 58.2. பல்லவர் காலத்து வெண்கல முத்திரை

கரூர் அமராவதி ஆற்றுப் படுகையில் பல்லவர் காலத்தைச் சேர்ந்த நந்தி உருவம் பொறித்த வெண்கல முத்திரை ஒன்று கிடைத்துள்ளது. எடை 8 கிராம். இந்த முத்திரையில் மாடு மட்டுமே உள்ளது. எழுத் துக்களோ, விளக்கு மற்றும் மங்கல சின்னங்கள் போன்ற உருவங்களோ இல்லை.

**வெ. ராஜு, கரூர்.**





## 58:3. சித்தலிங்கமடம் மண்கெண்டிச் செம்பு

திருவண்ணாமலை மாவட்டம் திருக்கோயிலூர் வட்டம் சித்தலிங்க மடத்தில் உள்ள தெற்குமேடு என்ற பகுதியில் தமிழ்நாடு அரசு தொல் லியல் ஆய்வுத்துறை கல்வெட்டுப் பயிற்சி மாணவி செல்வி பிரசன்னாவினால் பழுப்புச் சிவப்பு நிறத்தில் ஒரு மண் கெண்டிச் செம்பு சேகரிக்கப்பட்டுள்ளது. (படம்). தமிழகத்தில் பல பகுதிகளி லும் உள்ள புதைமேடுகளில் இவ்வகைக் கெண்டிகளின் மூக்குப் பகுதி கள் (sprout) கிடைத்துள்ளன. கடல் கடந்த நாடுகளிலும் கெண்டி மூக்கு

கள் கிடைத்துள்ளன. இங்கு மண்ணால் ஆன முழுக்கெண்டி கிடைத்துள்ளது சிறப்பாகும். மதுரையில் மீனாட்சி கல்யாண ஓவியங்கள் மற்றும் சிற்பங்களில் திருமால் தனது சகோதரி மீனாட்சியைச் சிவபெருமானுக்கு கன்னிகாதானமாகத் தாரை வார்க்கும்போது இவ்வகைச் செம்பாலான கெண்டியைக் கையில் வைத்திருப்பதைக் காணலாம். நாமக்கல் குடைவரைக் கோயில் சிற்பத்தில் மகாபலி வாமனர்க்குத் தாரை வார்க்கும் சிற்பத்திலும் இவ்வகைக் கெண்டியைக் காண்கின்றோம்.

இக்கெண்டி கைப் பிடி ஏதுமில்லாமல் காணப்படுகிறது. இது 11 செ.மீ. உயரமும் வாய்ப்பகுதி 8 செ.மீ. விட்டமும் உடையது. அண்ட வயிற்றுப்பகுதி 40 செ.மீ. சுற்றளவுடையது. கெண்டி மூக்கு 2.5 செ.மீ. உயரமுடையது.

**சு. இராசகோபால், சென்னை.**

## 58:4. சமூக இயலறிஞர் லூயி தூமோ (1911- 1998)

சமூகவியல், மானிடவியல் துறைகளில் மூத்த அறிஞரான லூயி தூமோ (Louis Dumo) 1998 நவம்பரில் தம் எண்பத்தேழாம் வயதில் காலமானார். புகழ்பெற்ற பிரெஞ்சு கல்லூரியில் படித்த இவர் நாற்பதுகளிலும், ஐம்பதுகளிலும் சமூக மானிடவியலாளர்களின் ஆய்வுப் பொருளை, ஆப்பிரிக்காவிலிருந்து இந்தியாவை நோக்கி திசைதிருப்பினார். மதுரை மாவட்டத்தைச் சேர்ந்த பிறமலைக் கள்ளர் சமூகத்தைப் பற்றிய ஆய்வு அவர் ஆய்வுகளில் மிகச்சிறந்ததாகக் கொள்ளப்படுகிறது. 1957ல் பிரொஞ்சு மொழியில் இவ்வாய்வு பற்றி நூல் வெளியிட்டார். பின்பு ஆங்கிலத்திலும் அது மொழிபெயர்க்கப்பட்டது. அவருடைய வேறு இரு சிறந்த நூல்கள் Hemo Hierachicus, (1966), Homo Equali (1977) எனும் நூல்கள் மனித உறவுகளுக்கிடையேயுள்ள ஏற்றத்தாழ்வுகளையு 2. சமநிலையையும் விளக்குவது. இவற்றுள் முந்திய நூலைப் பற்றி பல கருத்து விவாதங்கள் நடந்துள்ளன.

எழுபதுகளுக்குப் பிறகு லூயி தம் ஆய்வு களத்தை இந்தியாவிலிருந்து ஐரோப்பாவிற்கு மாற்றிக் கொண்டார். ஒப்பாய்வு என்பது இரு வேறுபட்ட சமூகங்களுக்கு இடையேயான ஒற்றுமைக் கூறுகளின் அடிப்படையில் அமைய வேண்டும் என்பதைவிட வேற்றுமைக் கூறுகளின் அடிப்படையில் அமைவது பொருத்தமாயிருக்கும் என்று நம்பினார். இந்திய நாகரிகத்தின் அடிப்படை இந்திய மக்களின் எளிமை, மரியாதைப்பண்பு ஆகிய இரண்டுமே என்றார்.

**கி. இரா சங்கரன், தஞ்சாவூர்**

## 58:5. மரபுச் செல்வங்களைக் காப்பதில் அறிவியல் தொழில்நுட்பத்தின் பங்கு

மைய அரசு அறிவியல் தொழில் நுட்பத்துறையின் ஆதரவில் கல் பாக்கம் 'இந்திராகாந்தி அணு ஆய்வு மையம்' 1997 அக்டோபர் 21 முதல் 25 முடிய 'மரபுச் செல்வங்களைக் காப்பதில் அறிவியல் தொழில்நுட்பத்தின் பங்கு' எனும் நோக்கில் பயிற்சி முகாம் ஒன்றை நடத்தியது. இம்முகாமில் பல மாநிலங்களைச் சேர்ந்த பதினைந்து பயிற்சியாளர்கள் கலந்துகொண்டனர். புதுதில்லி தேசிய அருங்காட்சி யகம், தடயவியல்துறை, இந்தியத் தொல்லியல் அளவீட்டுத்துறை, இந் திராகாந்தி அணு ஆய்வு மையம், சென்னை அரசு அருங்காட்சியகம் ஆகியவற்றின் பல்வேறு அறிஞர்கள் பயிற்சி அளித்தனர். இதில் பண் டைய ஓவியங்கள் பராமரிப்பு முறை, நினைவுச் சின்னங்கள் பழுது பார்த்தல், செப்புத் திருமேனிகளில் போலிகளைக் கண்டறிதல் போன்ற தொல்லியல் துறைப் பணியாளர்களுக்குப் பெரிதும் பயன்படும் செய் திகள் ஆராயப்பட்டன. இவற்றிலிருந்து பெறப்பட்ட ஒருசில தகவல்க ளின் சுருக்கம் வருமாறு:

ஒரு செப்புத் திருமேனியை 3 அங்குல சதுர அளவுள்ள படச் சுரு ளில் கதிர் வீச்சுக் கருவியின் மூலம் பதிவு செய்து காட்சிப்படுத்தினால் பதிவு செய்யப்பட்ட திருமேனியில் முப்பரிமாண தோற்றத்தைப் பார்க்க முடியும். இது ஹோலோகிராஃப் (Holography) முறை எனப் படும் இதன மூலம் உண்மையான திருமேனிக்கு இணையான நக லைப் பெறமுடியும். இதன் வழி அருங்காட்சியகங்களில் விலை மதிப்பு மிக்க உண்மையான திருமேனிகளைக் காட்சிப்படுத்துவதைத் தவிர்க்க முடியும். மேலும், திருடுபோதல், சிதைக்கப்படுதல் போன்ற அபாயங்களிலிருந்து கலைப்பொருட்களைப் பாதுகாக்கலாம்.

தளப்பரப்பு வரைபட ஆய்வு (Contour Mapping) என்பது ஒரு செப்புத் திருமேனியின் மேற்பரப்பை வரைபடமாகத் தயாரித்து அதனைப் பாது காப்பதற்கு மேற்கொள்ளும் ஒரு நடவடிக்கையாகும். இவ்வரை படத்தை நுண்ணிய நிழற்படக் கருவி மூலம் படம் பிடிக்கலாம். இத னால் செப்புத் திருமேனியில் மேற்பரப்பில் உள்ள மேடுபள்ளங்களைக் காணலாம். இவை நம் கண்ணுக்குப் புலப்படா. விரல்ரேகை ஆய்வுக்கு (Finger Printing) இவ்வகை ஆய்வும் பெரும் உதவியாக அமையும்.

எக்ஸ்ரே வண்ணப்பட்டை அளவீட்டு முறை (X-ray energy Spectrome-try), லேசர் வெளிப்பாடு வண்ணப்பட்டை ஆய்வு (Leser-excited emission Spectroscopy), நியூட்ரான் செயல்திறன் பகுப்பாய்வு (Neutron activation analysis), ஆகிய ஆய்வுகளின் மூலம் ஒரு செப்புத் திருமேனி அல் லது பழம்பொருளின் கனிமச் சேர்மான விகிதங்களை அறியலாம். மிக நுண்ணிய (சுமார் 1 மில்லி கிராம்) எடையுள்ள துகளைக் கொண்டு

ஆய்வு செய்து முழு உருவத்தின் கனிமச் சேர்மானங்களையும் கணக்கிடலாம். இதனால் அத்தொல்பொருளுக்கு எவ்வித சேதமும் ஏற்பட வாய்ப்பில்லை.

உலோக உள்அமைப்பியல் ஆய்வு (In-situ mettallography) மூலம் ஒரு தொல்பொருளில் அடங்கியுள்ள கனிமங்களின் அமைப்பு முறையை அறியலாம். தொல்பொருளின் மேற்பரப்பில் சிறிய அளவில் வழவழப்பாக்கி அப்பகுதியிலிருந்து ஒரு நகல் (Replica) செல்லுலோஸ் அசிட்டேட் படச்சுருள் (Cellulose acetate film) மூலம் எடுக்கப்படுகிறது. இப்படச்சுருள் பின்னர் உரிய கரைப்பான் மூலம் மென்மையாக்கப்பட்டு காயவைக்கப்பட்டு நுண்ணோக்கியில் வைத்து ஆராயப்படும். இதன் மூலம் அத்திருமேனியின் உலோக உள்அமைப்பியல் கணக்கிடப்படுகிறது. தற்போது படிமங்களின் மேல் நேரடியாகவே நுண்ணோக்கிகளை வைத்து ஆய்வு செய்யத்தக்க அளவில் பல நுண்ணோக்கிகள் வந்துள்ளன.

ஒரு செப்புத் திருமேனியில் எக்ஸ்ரே, காமா கதிர்களையும் நியூட்ரான்களையும் ஊடுருவச் செய்வதன் மூலம் ஒரு இரட்டைப் பரிமாண நிழல்படத்தைப் பெறலாம். இதற்கு எங்கும் எடுத்துச் செல்லக்கூடிய 450 கிலோவாட் திறன்கொண்ட எக்ஸ்ரே கருவிகளைப் பயன்படுத்தலாம். இதன் மூலம் 100 மில்லிமீட்டர் கனமுள்ள திருமேனிகளைப் படமெடுக்க முடியும். ஊடுகதிர்படமெடுப்பிற் (Radiography) மூலம் ஒரு திருமேனியின் உட்புறக் குறைபாடுகளையும் வார்ப்புக் குறைபாடுகளையும் கண்டறியலாம். வார்ப்பின் போது உள்ளே ஏற்படும் சிறு சிறு துளைகளைக் கூட இப்படமுறை நமக்குக் காட்டுகிறது. இதன்மூலம் திருமேனிகளை வார்க்கும்போதே ஏற்பட்ட பழுதுகளை அறிவதோடு தலை, உடல், பீடம் ஆகியவை தனித்தனியே செய்யப்பட்டு பின் இணைக்கப்பட்டமை போன்றவையும் கண்டறியப்பட்டுள்ளன.

**சொ. சாந்தலிங்கம், மதுரை**

## 58.6. பேரூர் பழம்பொருட்கள்

கோயம்புத்தூருக்கு மேற்கே உள்ள பேரூருக்கருகில் வீடுகள் கட்ட மண் எடுக்கும்போது கிடைத்த சில அரிய பழம் பொருட்கள் தொடர்பான செய்தி ஆவணம் இதழ் 9-இல் (பக்.149-152) வெளிவந்துள்ளது. இதன் தொடர்ச்சியாக அங்கு மேலும் சில அரிய தொல் பொருட்கள் இந்த ஆண்டும் (1998-99) கிடைத்துள்ளன. வட்டம், சதுரம், நீள்சதுரம், அரைவட்டம் என பல வடிவங்களைக் கொண்ட பிராமி எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட ஓடுகள் கிடைத்துள்ளன. இவ்வெழுத்துகள் யாவும் ஒருவகை தமிழ் பிராமியெழுத்துகள் எனினும் இடையிடையே இது வரை காணப்படாத எழுத்கள் உள்ளதால் காலம் கணிக்கவும், முற்றி

லும் பொருள் கொள்ளவும் இயலவில்லை. ஆனால், இங்குக் கிடைக்கின்ற அனைத்து ஓடுகளிலும் எருமிநாடு, குமிழியூர் என்ற பெயர்கள் கிடைப்பதால், மிகத் தொன்மையான ஒரு காலத்தில் இப்பகுதி எருமி நாடு எனவும் பேரூர்ப் பகுதி குமிழியூர் எனவும் பெயர் பெற்றிருக்கக் கூடும்.

இங்குக் கிடைத்துள்ள ஓர் ஓட்டில் கப்பல் உருவம், மலையில் விளக்குகள் வீடு போன்றவை வரையப்பட்டுள்ளன. பார்ப்பதற்கு இது ஒரு கடல்துறைமுகம் போல உள்ளது. கடந்த ஆவணத்தில் பறவை முகமுடைய எகிப்தியர்களின் சூரிய கடவுளான 'அமந்-ரா' பற்றி குறிப்புள்ளது. தற்பொழுது பறவை முகம் அல்லாமல் சூரியன் முகம் உள்ள மன் பொம்மை கிடைத்துள்ளது. இங்கு கிடைத்த செங்கல் ஒன்றில் 10.5" × 7.5" × 2.5" மேலை நாட்டுப் பெண் உருவம் வரையப்பட்டுள்ளது. இது பார்ப்பதற்கு எகிப்து நாட்டு மங்கையின் உருவம் போல் உள்ளது. எகிப்து நாட்டு மன்னன் தலை போன்ற உருவம் பொறித்த வெள்ளி பதக்கம் ஒன்றும் மங்கிப் போன நிலையில் கிடைத்துள்ளது.





மனித முகமும், விலங்கின் உடம்பும் உள்ள மாவுக்கல்லால் செய்யப்பட்ட 'ஸ்பிங்ஸ்' (Sphinx) போன்ற உருவங்கள் மூன்று கிடைத்துள்ளன. இவற்றில், இரண்டின் கீழ் உள்ள எழுத்துக்களைப் படிக்க முடியவில்லை. பெரிய அளவில் உள்ள ஒன்றின் கீழ் காணப்படும் இரண்டு வரி பிராமி எழுத்துக்களில் எருமிநாடு, காடகன் என்ற பெயர்கள் காணப்படுகின்றன. மாவுக்கல்லால் செய்யப்பட்ட முத்திரை ஒன்றும் கிடைத்துள்ளது. இம்மாவுக்கல் வகை இப்பகுதியில் கிடைக்கக்கூடியவை அல்ல.

எகிப்து நாட்டிற்குத் தேவையான வாசனைப் பொருட்கள் அக்காலத்தில் சேரநாட்டிலிருந்து சென்றதாக வரலாற்றாசிரியர்கள் கருதுகின்றனர். அவ்வகையில், பேரூர் மேற்குத் தொடர்ச்சி மலையை ஒட்டி அமைந்துள்ளமையும், இங்கு கிடைத்துள்ள இவ்வரிய தொல்பொருட்களும் இப்பகுதியுடன் எகிப்திய வணிகக் குழுக்கள் அக்காலத்தில் கொண்டிருந்த உறவைக் காட்டுவதாகக் கொள்ளலாம்.

**ஐ. இராமசாமி, இக்கரை போளுவாம்பட்டி**

## 58.7. தமிழகத் தொன்மை இயல் ஆய்வு நிறுவனத்தின் அண்மைக்காலக் கண்டுபிடிப்புகள்

காஞ்சிபுரம் மாவட்ட மதுராந்தகம் வட்டம் அச்சரப்பாக்கத்துக்கு அருகில் உள்ள கடைமலைப்புத்தூர் என்னும் ஊரில் இயக்கி மற்றும் இரு அய்யனார் சிற்பங்கள், இவ்வூரிலிருந்து மேற்கே ஐந்து கிலோமீட்டர் தொலைவிலுள்ள மின்னல் சித்தாமூர் என்னும் ஊரில் அய்யனார், துர்க்கை என இரு சிற்பங்கள், களத்தூர் என்னும் ஊரில் மூன்று கல்வெட்டுகள், திருவண்ணாமலை மாவட்டம் பெரணமல்லூரிலிருந்து இரு சிற்பங்கள் அண்மையில் கண்டறியப்பட்டன. இவற்றுள் மிக பழமையானது இயக்கி சிற்பமாகும். இச்சிற்பம் 150 செ.மீ உயரமும், 44.5 செ.மீ அகலமும் உடையதாகக் காணபடுகிறது.

இயக்கியின் வலப்பக்கத்தில் பணிப்பெண்ணொருத்தி ஆபரணப் பேழையைச் சுமந்திருக்கும் நிலையிலும், இடப்பக்கத்தில் மற்றொரு பணிப்பெண் குடத்தைத் தலையில் சுமந்த நிலையிலும் நிற்கின்றனர். இவ்விரு பணிப்பெண்களோடும் இயக்கி உருவத்தைப் பார்க்கையில் இது வளமைத் தெய்வமாகக் கருதப்பட்டிருக்கலாம்.

கி.பி. 4-ஆம் நூற்றாண்டுக்கு முன்பிருந்தே இயக்கி வழிபாடு தமிழகத்தில் இருந்து வந்திருப்பதை சிலப்பதிகாரம் மூலம் உணரலாம். இதன் அடிப்படையிலும் மற்றும் கி.மு. 2-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த அமராவதி இயக்கி சிற்பத்தின் உருவ அமைதி கொண்டும் காண்கையில், கடைமலைப்புத்தூர் இயக்கி நிச்சயமாக கி.பி. 4-ஆம் நூற்றாண்டையோ அல்லது அதற்குச் சற்று முந்தைய காலத்தையோ சார்ந்ததாக

லாம். இவ்வியக்கி சிற்பத்துக்கு அருகில் உள்ள ஐயனார் சிற்பங்களுள் ஒன்று, சுமார் கி.பி. 7-ஆம் நூற்றாண்டையும், இன்னொன்று கி.பி. 8-ஆம் நூற்றாண்டையும் சேர்ந்ததாக இருக்கலாம்.

வடபால் உள்ள அய்யனார் சர்வாங்காசனத்தில் இருகால்களையும் மடக்கி ஒன்றோடு ஒன்றைக் குறுக்காக வைத்து அமர்ந்த நிலையில் காணப்படுகிறார். வழக்கத்துக்கு மாறாக வலக்கையில் குறுவாள் ஏந்தி, கையை மடக்கி மார்போடு அணைத்த நிலையிலும், இடக்கையும் மடக்கி மார்போடு சேர்த்து குறுவாளைத் தொடும் நிலையில் விரல் களை விரித்தும் உள்ளன. இடையில் பிடியுடன் கூடிய குறுவாள் இடையாடைக் கட்டில் செருகி வைக்கப்பட்டிருக்கிறது. இத்தோற்றம் ஐயனார் உருவத்தில் இதுவரை பார்க்காத புதுமைத் தோற்றமாக உள் ளது.

மின்னல் சித்தாமூரில் உள்ள துர்க்கை உருவம் வயல்வரப்பில் கீழ்த் திசையை நோக்கியவாறு பலகைக்கல்லில் புடைச்சிற்பமாகச் செதுக் கப்பட்டுள்ளது. எருமைத் தலைமேல், எண் தோள்களுடன் நேராக நின்ற நிலை. கைகளில் மேலிருந்து கீழாகச் சக்கரம்,சங்கு, அம்பு, வில் குறுவாள், கேடயம், கைமணி ஆகியவற்றோடு, இடுப்பில் கை வைத் தவாறு காட்சி தருகிறது. எண்கரங்களில் ஏழுகரங்கள் கடக முத்திரை யில் ஆயுதங்களைபற்றி உள்ளன. எட்டாவது கரம் கடி முத்திரையில் இடுப்பில் வைக்கப்பெற்றிருக்கிறது.

துர்க்கையின் தலையைக் கரண்ட மகுடம் அலங்கரிக்கிறது. நீண்ட தொள்ளைக்காதுகளில் மலர்க்குண்டலங்கள் அணி செய்கின்றன. கழுத் தில் பதக்கத்துடன் கூடிய கற்கள் பதிந்த ஆபரணம் அழகுடன் விளங்கு கிறது. மார்பில் கச்சை உள்ளது. வலது கையில் எட்டு செருகு வளை கள்; இடது கையில் எட்டு செருகு வளைகள் அணியப்பட்டிருக்கின் றன. இடுப்பிலிருந்து கீழ் தொடைவரை மடிப்புடைய ஆடை அமைய, இடையின் முன்புறம் குறுவாள் செருகப்பபட்டுள்ளது. துர்க்கையின் இடது மார்பில் பூணூலும் இடையில் கடிபந்தமும், மேகலையும், கால் களில் தடித்த தண்டையும் அலங்கரிக்கின்றன. இடது தோளின் பின்பு றம் அம்புகள் நிறைந்த அம்புறாத்தூணி கட்டப்பட்டுள்ளது. இச்சிலை யின் வலக்கை தோளின் மேற்புறம் திரிசூலம் காணப்படுகிறது.

**நடன. காசிநாதன், சென்னை;**
**தாமரைக் கண்ணன், அச்சிறுப்பாக்கம்;**
**மா. சந்திரமூர்த்தி, சென்னை.**

---

# 59. புதிய வெளியீடுகள்

**59:1** B. Arunachalam (ed.) *Essays in Maritime Studies*, Maritime History Society, Mumbai, 1998, 172P.

மும்பையில் 1978ஆம் ஆண்டு தொடங்கப்பெற்ற கடல்சார் வரலாற்றுக் கழகத்தின் கருத்தரங்குகளில் வாசிக்கப்பெற்ற பதினொரு கட்டுரைகள் நான்கு பகுதிகளாகத் தரப்பட்டுள்ளன. 16ஆம் நூற்றாண்டில் இந்தியாவின் மேற்குக் கடற்கரைப் பகுதிகளில் போர்த்துக்கீசியர், இந்திய மன்னர்கள் படையோடு நடத்திய கடற்போர் பற்றிய முதல் பகுதியில் கடற்போர் தற்காப்பில் இந்தியருடைய பலவீனங்கள் பற்றிய விவரங்கள் விரிவாகத் தரப்பட்டுள்ளன. இரண்டாம் பகுதியில் குஜராத் பகுதியில் 17-18ஆம் நூற்றாண்டுகளில் நிலவிய கடல் வணிகம் மற்றும் காலனி ஆதிக்க காலங்களில் மேற்குக் கடற்கரைப் பகுதியில் இருந்த கப்பல் கட்டும் துறைகளைப் பற்றிய செய்திகள் தரப்பட்டுள்ளன. மூன்றாம் பகுதியில் இந்திய கடற்படையின் வரலாறு பற்றிய செய்திகள் தரப்பட்டுள்ளன. மும்பைத் துறைமுகத்தின் வரலாறு, கப்பல் கட்டுமானத்துறைகள், துறைமுக கடற்செலவு ஆகியன பற்றிய ஆய்வுகள் நான்காம் பகுதியில் தரப்பட்டுள்ளன. காலனி ஆதிக்கங்களின் காலத்தில் மேற்குக் கடற்கரைப் பகுதியில் நிலவிய கடல்சார் வரலாற்றைப் பற்றிய செய்திகளைத் தரும் இந்நூல் அடிக்குறிப்புகளின்றி உள்ளது எனினும் கடல்சார் வரலாற்றாய்வாளர்களுக்கு இது சிறந்த துணை நூலாகும்.

**ந. அதியமான், தஞ்சாவூர்**

**59:2** K.T. Ravi Verma, *On the Original Home of Ceras and the Wandering Vanci*, Reading Promotion Foundation of India, Kottayam, 1998, pp.202.

சேரர்களின் தலைநகரமான வஞ்சி தற்போதைய கரூரே என பிசப் கால்டுவெல், மு. இராகவ ஐயங்கார் போன்றோரும் மேலைக் கடற்கரையில் உள்ள திருவஞ்சிக்களமே என வி. கனகசபை, சிவராஜ பிள்ளை, பத்மநாப மேனன், சேஷ ஐயர், கிருஷ்ணசாமி ஐயங்கார், இளங்குளம் குஞ்சன்பிள்ளை போன்றோரும் எடுத்து வைத்த கருதுகோள்களுக்கு மாறாக இந்நூலாசிரியர் சங்ககாலச் சேரர்களின் பிறப்பிடம் முதலில் மேற்குத் தொடர்ச்சி மலைக்கு கிழக்கே தமிழகத்தில் தான் இருந்துள்ளதெனவும் பின்னரே மேலைக் கடற்கரைக்குச் சென்றன ரெனவும் புதிய கருதுகோளை முன் வைக்கிறார். முன்பு குறிப்பிட்ட நூலாசிரியர்களைப் போன்றல்லாது இவர் அண்மைக்காலம் வரை

கிடைத்த தொல்லியல், நாணயம், கல்வெட்டு, இலக்கியம் என அனைத்துத் தரவுகளையும் திரட்டி தமது கருதுகோளுக்கு வலுவூட்ட முற்பட்டிருப்பதை நாம் பாராட்டாமல் இருக்கமுடியாது.

சேரரின் பிறப்பிடத்தை அறிய முயலும் இந்நூலாசிரியரின் அனைத்துத் தரவுகளும் கரூரில் கிடைத்த கி.மு. முதல் நூற்றாண்டிற்குப் பிந்தைய காலத்தைச் சார்ந்த தொல்பொருட்கள், மாக்கோதை, கொல்லிப் பொறை, குட்டுவன் கோதை காசுகள், மற்றும் புகளூர் கல்வெட்டுக் கள் ஆகும். இத்தரவுகள் அனைத்துமே சேரர்களின் தலைநகரம் அமரா வதி ஆற்றங்கரையில் கி.மு. அல்லது கி.பி. முதலாம் நூற்றாண்டிற்குப் பின்பு இருந்திருக்க வேண்டும் என்பதைச் சுட்டுகின்றன என்பது உண் மையே. எனினும் கி.மு.-கி.பி. முதலாம் நூற்றாண்டிற்குப் பிந்தைய காலத்தைச் சார்ந்த இத் தரவுகளின் அடிப்படையில் இவர் வைக்கும் கருதுகோளை ஏற்றுக் கொள்வதில் சில இடர்ப்பாடுகள் உள்ளன.

கி.மு. முதலாம் நூற்றாண்டிற்கு முற்பட்ட தரவுகளைப் பெரும்பா லும் இவர் நோக்கவில்லை. சங்ககாலச் சேர மன்னர்களின் இருப்பி டத்தை காலநிரலில் வகைப்படுத்தி, இலக்கியத்தில் காணப்படும் இருப்பிடம் தொடர்பான செய்திகளைப் பார்க்கவுமில்லை. முற்காலச் சேரர்களின் இருப்பிடமாகக் கருதப்படும் நறவு, குமுழூர், மாந்தை போன்ற இடங்களை அறிவதில் முனைப்புக் காட்டவில்லை.

மௌரியர்களின் சமகாலத்தவரான மெகஸ்தனீஸ் மேற்குக் கடற் கரையில் நாரே (Narae) என்ற இடத்தில் சேரமான் இருந்தான் என குறிப் பிடுவதை ஏற்றுக் கொள்ளும் இவர் சங்க இலக்கியத்தில் சேரர்களின் இருப்பிடமாக நறவு என்னும் ஊர் குறிப்பிடப்படுவதுடன் ஒப்பிட்டுப் பார்க்கவில்லை. மாறாக, விக்ரம் (Wigram) போன்றோர் நாரே என்ற ஊரை முற்றிலும் பிற்காலத்திய நாயர்களுடன் ஒப்பிட்டுப் பார்த்ததை முக்கிய கருத்தாகக் கொண்டு நாயர் என்ற சமூகத்தினர் கி.'பி. 9ஆம் நூற் றாண்டுக்கு முன்பு இல்லை என்றும் இந் நாயர் சமூகம் சங்க இலக்கி யத்தில் குறிக்கப் பெறவில்லை என்றும் வாதங்களை முன் வைத்துச் சங்க இலக்கியத்தில் குறிக்கப் பெறும் 'நறவு' என்ற ஊரிலிருந்து திசை மாறிச் செல்கிறார். சேரருக்குத் தெற்கே பாண்டியர்கள் ஆட்சி புரிந்தார் கள் என்று மெகஸ்தனீஸ் குறிப்பிடுவதைக் கொண்டு, 'பாண்டியர்கள் உள் நாட்டில் மட்டுமே ஆட்சி புரிந்தார்கள். எனவே சேரர்களும் உள் நாட்டிலேயே இருந்திருக்க வேண்டும்' என்ற கருத்தை வலியுறுத்தும் இவர் பாண்டியர்கள் தமிழகத்தின் தெற்குப் பகுதியில் மேலைக் கடற் கரையையும் உள்ளடக்கி ஆட்சி புரிந்தனர் என்பதை எடுத்துக் கொள்ள மறுத்துள்ளார்.

அசோகருடைய கல்வெட்டில் வரும் கேரள புத்ர என்ற குறிப்பு சேர நாட்டை குறிக்கவில்லை, சேர மரபினரையே குறிக்கிறது என்றும்

அது தற்போதைய கொங்குப் பகுதி என்றழைக்கப்படும் கோவை, பெரியார் மாவட்டங்களில் வாழ்ந்த சேர வம்சத்தினரையே குறித்து நின்றது என்றும் குறிப்பிடும் இந்நூலாசிரியர், பிற்காலத்தில் இப்பகுதி சேர நாடு என்று அழைக்கப்படுவதற்குப் பதிலாக கொங்கு நாடு என்று அழைக்கப்பட்டது ஏன் என்பதற்குச் சரியான விளக்கம் அளிக்கவில்லை. தற்போதைய கேரளா என்ற சொல், கி.பி. 9ஆம் நூற்றாண்டிற்குப் பின்பு மகோதையைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்த சேரமரபினரால் ஏற்பட்டது என்று குறிப்பிடுகிறார். கொங்குப் பகுதியில் கிடைக்கும் வீர கேரளமண்டலம், வீரகேரளன் போன்ற பெயர்கள் பிற்காலக் கல்வெட்டுக்களில் வருவதை சுட்டிக் காட்டும் இவர் இப்பெயர்கள் பட்டப் பெயர்கள் என்பதையும் இது போன்ற ஒரு பகுதியைச் சார்ந்த பெயர் வேறொரு பகுதியில் வழங்கி வருவது இடைக்கால வரலாற்றில் மிக அதிகம் என்பதையும் இவர் சரியாக உணர்ந்து கொள்ளவில்லை. கி.பி. 12ஆம் நூற்றாண்டிற்கு முன்பு கேரளா என்ற நிலப் பகுதி மேலைக் கடற்கரையில் உருவாகவே இல்லை என்று இவர் வாதிடுகிறார். (ப.20). சங்க காலத்தில் கொங்குப் பகுதியில் கொங்கர்கள் வாழ்ந்தார்களே தவிர சேரர்கள் வாழ்ந்ததாகக் குறிப்பு ஏதும் இல்லை.

சேரர்களின் ஓரளவு காலவரிசையும், முற்காலச் சேரர்களின் இருப்பிடமான நறவு, மாந்தை, குழுமூர் போன்ற பகுதிகள் பற்றிய குறிப்புகளும், கடலில் போய் கடம்ப மரத்தை அறுத்தது போன்ற சேரர் பற்றிய செய்திகளும், பேரியாறு பற்றிய குறிப்புக்களும் இவர்கள் மேலைக் கடற்கரையில் இருந்து கொங்குப் பகுதியை வென்று பின்னரே கரூரைத் தலைநகரமாகக் கொண்டிருக்க வேண்டும் என்பதை உணர்த்துகின்றன. கி.மு. முதல் கி.பி. முதல் நூற்றாண்டிற்குப் பின்பு சேரர்களின் முதன்மைத் தலைநகரமாகக் கரூர் விளங்கியிருந்ததையே அண்மைக்காலத் தரவுகள் சுட்டுகின்றன. அச்சமயம் மேலைக் கடற்கரையில் ஒரு தலைநகரமும் இருந்திருக்க வேண்டும். இரு தலைநகர்களை ஏற்படுத்திக் கொள்வது சேரருக்கு மட்டுமில்லாது, சோழருக்கும், பாண்டியருக்கும் பொருந்தியதே. எடுத்துக்காட்டாக, உறையூர்-புகாரையும்; மதுரை-கொற்கையையும் சுட்டலாம்.

மேலைக் கடற்கரையில் சேரர்கள் இருந்ததற்கான எவ்வித ஆதாரமும் இல்லை என்ற கருத்தை முன்வைக்கும் ஆசிரியர் எடக்கல் கல்வெட்டுகள், ரோம நாணயங்கள், பெருங்கற்காலப் பண்பாட்டுச் சின்னங்கள் ஆகிய தரவுகளைக் கணக்கில் கொள்ளவில்லை. கரூர், கொடுமணல் போன்ற பகுதிகளில் மேற்கொண்ட அகழாய்வுகளில் கிடைத்த பொருட்கள் அமராவதி ஆற்றுப்படுகையில் கிடைத்த அளவு கிடைக்கவில்லை என்பது ஒரு புறம்; அமராவதி ஆற்றுப்படுகையில் கிடைத்

தவை அனைத்தும் வேண்டுதலாக ஆற்றில் இட்ட உயரிய பொருட்க ளாகவே இருப்பதையும் யாரும் மறுக்க முடியாது. எனவே அகழாய் வுப் பொருட்களும், அமராவதி ஆற்றுப் படுகையில் கிடைத்த தொல் பொருட்களும் இரு வகை நோக்கங்களைக் கொண்டவை. அமராவதி ஆற்றுப் படுகையைத் தவிரக் கொங்குப் பகுதியில் வேறெந்த அகழாய் விலும் இத்தகைய தொல்பொருட்கள் கிடைக்கவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது. எனவே, மேலைக் கடற்கரைப் பகுதியில் தொல் பொருட்கள் அதிகமான அளவு கிடைக்கவில்லை என்பதைக் கொண்டு அவர்கள் வாழ்க்கைத் தரத்தில் கீழ்நிலையில் இருந்தார்கள் என்ற முடி வுக்கு ஆசிரியர் (ப.29) வந்திருப்பது சரியான முடிவாக இருக்க முடி யாது.

கரூரில் கிடைத்த எந்தவொரு தொல் பொருளிலும் இந்நூலாசிரி யரே ஏற்றுக் கொள்வது போல் (ப.48) முற்காலச் சேரர்களின் பெயர்கள் இல்லை. இந்நிலையில் கரூர் பகுதியை அவர்களின் பிறப்பிடமாகக் கொள்வது எங்ஙனம் என்பதை இவர் இந்நூலில் ஆராயவில்லை.

இந்நூலாசிரியரே, ஒரு சேர மன்னன் கரூரை வென்று அதனை தலைநகரமாக்கிக் கொண்டான் என்று கருத்து (ப.102) தெரிவிப்பதால் அது சேரர்களின் பிறப்பிடமாக இருக்கவில்லை என்பது புலப்படு கிறது. சேரர்களின் இருப்பிடமான குழுமூர் மேற்குத் தொடர்ச்சி மலைக்குக் கிழக்கே இருந்திருக்க வேண்டும் என்று ஓர் இடத்தில் கருத் துரைக்கிறார். அப்படியென்றால் அது கரூருக்கும் மேற்கு தொடர்ச்சி மலைக்கும் இடையிலான கொங்கு நாட்டில் இருந்திருக்க வேண்டும். அப்படியென்றால் செல்கெழு குட்டுவன் கொங்குப் பகுதியை வென் றான் என்பதன்மூலம் அவர்களின் தலைநகரமான குழுமூரையே வெற்றி கொண்டான் என்று ஆகிவிடும். எனவே குழுமூர் கேரள மாநி லப் பகுதியிலேயே இருந்திருக்க வேண்டும்.

சேரர்கள் முதலில் நறவு, குழுமூர், குடநாடு போன்ற பகுதியிலி ருந்து உம்பற்காடு, கொங்குநாடு, பூழிநாடு ஆகியவற்றைக் கைக் கொண்டு கரூரில் தமது தலைநகரை அமைத்துக் கொல்லிப் பொறையர் களுடன் திருமண உறவை ஏற்படுத்திக் கொண்டு ஆட்சிபுரிந்தனர். கரூ ரில் பொறைவழி குடும்பத்தினரும் மேலைக் கடற்கரையில் ஆதன்வழி குடும்பத்தினரும் தங்கி ஆட்சி புரிந்திருக்க வேண்டும். இவர்களின் செல்வச் செழிப்பு வணிகத்தின் மூலம் உயர்வுபெற்று விளங்கியிருக் கின்றது. பின்னர் வணிகம் வீழ்ச்சி பெற்றவுடன் தமது பிறப்பிடமான மேலைக் கடற்கரையிலேயே மகோதையைத் தலைநகரமாகக் கொண்டு ஆட்சிபுரிந்திருக்க வேண்டும். எனவே, சேரர்கள் மேலைக் கடற்கரையி லிருந்து கீழ்நோக்கி வந்திருக்க வேண்டுமே தவிர இந்நூலாசிரியர் கரு துவது போலக் கீழ் இருந்து மேலைக் கடற்கரை நோக்கிச் சென்றிருக்க

இயலாது. எதிர்காலத்தில் முற்காலச் சேரர்கள் தொடர்பான தரவுகள் கிடைக்கப் பெற்ற பின்னரே சேரர்கள் பிறப்பிடம் தொடர்பான முடிவு எட்டப்படும். ஆயினும் இந்நூலில் பன்முகத் தரவுகளையும் ஒருமுகப் படுத்தி ஒரு புதிய கருதுகோளை முன்வைத்து ஆய்வினை எடுத்துச் சென்றுள்ள விதம் பாராட்டுதலுக்குரியது. இந்நூல் சேரர்கள் தொடர்பான ஆய்விற்குப் பெரிதும் துணைபுரியும் என்பதில் எவ்வித ஐயமுமில்லை.

**கா. ராஜன், தஞ்சாவூர்.**

**59:3** ஏ. ஏகாம்பரநாதன், *சோழன் காலத்தில் சமண சமய வளர்ச்சி*, ஜைன ஆய்வியல் கழகம், 18, இராமானுஜ அய்யர் தெரு, சவுகார்பேட்டை, சென்னை 1998. 315 பக்கம்.

இந்நூலாசிரியர் சமண சமய வரலாற்றில் தீவிர ஆய்வகளை மேற்கொண்டுள்ளவர். அண்மைக்கால ஆய்வு முறைகள் மற்றும் கள ஆய்வின் அடிப்படையில் அமைந்துள்ள இந்நூல் சோழர் காலத்தில் சமண சமய வளர்ச்சியினைப் பற்றி வரலாறு, தொல்லியல், கலை, சமயம் மற்றும் சமுதாயம் ஆகிய கண்ணோட்டங்களுடன் விளக்குகிறது. சோழர் தங்களது பேரரசுக்கு சமய அடிப்படையாக சைவ சமயத்தையும், அதன் தத்துவத்தையும் கொண்டிருந்தாலும், சமண சமயத்தின் மீது அவர்கள் கொண்டிருந்த ஈடுபாட்டையும், அவர்தம் சமயப் பொறையையும் இந்நூல் சுட்டிக் காட்டுகிறது. சோழர்களது ஆளுகைக்குட்பட்ட பாண்டிய நாடு மற்றும் நடுவில் நாடு பகுதிகளைவிட வடபகுதியாகிய தொண்டை நாட்டில் குகைக் கோயில்களும், கட்டிடக் கோயில்களும் மிகுதியாக உருவாக்கப்பட்டிருக்கின்றன. பல கோயில்கள் செப்பனிடப்பட்டும், புதுப்பிக்கப்பட்டுமுள்ளன. மேலும் சோழர்காலச் சிற்பக் கலையின் உன்னதத் தன்மையினை அறிவுறுத்தும் முதன்மை வாய்ந்த சமணச் சிற்பங்கள் மற்றும் உலோகத் திருமேனிகள் பல கிடைத்துள்ளன.

சமணச் சான்றோர்களின் தமிழ் இலக்கியத் தொண்டும், சமணக் கோயில்கள் சிலவற்றில் காணப்பெறும் கல்வெட்டுப் பாடல்களும் இந்நூலில் இடம்பெறும் சிறப்பம்சங்களாகும். சமயமும், சமுதாயமும் என்ற பகுதியில் சமணக் கோயில்கள், இறைத் திருவுருவங்கள், வழிபாட்டு முறைகள், கோயிற்பணி, மக்கள், நிருவாகிகள், திருவிழாக்கள் ஆகியவற்றைப் பற்றி கல்வெட்டுச் சான்றுகளின் அடிப்படையில் விளக்கப்படுகின்றன. சமணக் கோயில்களுள் சித்தாமூர் கோயிலைத் தவிர, வேறு எவற்றிலும் தேவரடியார்கள் பணி புரிந்ததாகச் சான்றுகளில்லை என்பது ஓர் அரிய செய்தி.

மேலும் இடைக்காலத்தில் தமிழக-கருநாடக சமணத் தொடர்புகள் மற்றும் அவை ஏற்படுத்திய தாக்கங்கள் தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்

ளன. தொல்லியல், கல்வெட்டு, வரலாற்றுச் சின்னங்கள் மற்றும் இலக்கியங்கள் ஆகிய மூலச் சான்றுகளின் அடிப்படையில் அமைந்துள்ள இந்நூல் தமிழக சமய வரலாற்றுக்கு செழிப்பூட்டும் ஒன்று என்பதில் ஐயமில்லை. **சி. கெ. சிவப்பிரகாசம், தஞ்சாவூர்**

**59:4** ச. கிருஷ்ணமூர்த்தி, *கல்லிடைக்குறிச்சிக் கலைக்கோயில்கள்*, ஆ. உண்ணாமலை 12/1, புதுப்பேட்டை, வடக்குத்தெரு, சிதம்பரம். 248 பக்கம்.

தமிழ்நாட்டுக் கோவில்களின் கலை வரலாற்றை அரிய உதவும் ஒரு வழி காட்டு நூல் இது. பதினைந்து உட்தலைப்புகளில் ஒன்பது கோவில்களின் வரலாறு சிறந்த முறையில் ஆராயப் பெற்று பகுத்தும் தொகுத்தும் விளக்கப் பெற்றுள்ளது. தளிகை மடம் தனித்தன்மையுடன் சிறப்பிக்கப்பெற்றுள்ளது. ஆய் மன்னர் காலம் முதல் அண்மைக் காலமாகிய ஆங்கிலேயர் ஆட்சிக்காலம் வரை கல்லிடைக்குறிச்சிக்கு தொடர் வரலாறு உண்டு என்பதை இந்நூல் தெளிவுபடுத்திக் காட்டுகிறது. **அ. கிருட்டிணன், தஞ்சாவூர்.**

**59:5** மோ.கோ. கோவைமணி, *இந்தியக் காலக் கணிதம்*, பாமொழிப் பதிப்பகம், 39, ராசாசி நகர், தஞ்சாவூர் . *144* பக்கம்.

எல்.டி. சாமிக்கண்ணுப் பிள்ளையவர்கள் எழுதிய *An Indian Ephemeris* எனும் நூலின் அடிப்படையில் தமிழில் எழுதப்பட்டுள்ள இந்த நூலில் இந்திய காலக் கணிப்பு முறைகளான கலியுகம், விக்கிரம சகாப்தம், திருவள்ளுவராண்டு, பசலி ஆண்டு மற்றும் கொல்லமாண்டு ஆகியன பற்றிய குறிப்பு தரப்பட்டு அவற்றை ஆங்கில ஆண்டோடு எவ்வாறு கணக்கிடுவது என்பதும் விளக்கப்படுகிறது. ஒரு காலக் கணிப்பினை மற்ற ஆண்டுகளோடு தொடர்புபடுத்தத் தேவையான அட்டவணைகள் நூலின் பின்பகுதியில் தரப்பட்டுள்ளன. இந்தியக் காலக் கணக்கீட்டு முறையை சுருக்கமாக அறிமுகம் செய்கிறது இந் நூல். **ந. அதியமான், தஞ்சாவூர்.**

**59:6** R.S. Sharma, *Advent of the Aryans in India*, Manohar, New Delhi, 1999. 130p.

சிந்துசமவெளி நாகரிகம் ஆரியர்கள் நாகரிகம் என்றும், ஆரியர்கள் சரஸ்வதி ஆற்றுப் பள்ளத்தாக்கினை மையமாகக் கொண்டு வாழ்ந்தனர் என்றும் அண்மைக்காலமாக வற்புறுத்தப்படும் கருதுகோளுக்கு எதிராக ஆரியர் பண்பாடு சிந்து சமவெளிப் பண்பாட்டினின்றும் மாறுபட்டது என்றும் அவர்கள் வடமேற்குப் பகுதியிலிருந்து இந்தியாவிற்

குள் நுழைந்து கங்கைச் சமவெளிப்பகுதியில் குடியேறியவர் என்ற கருதுகோளினை முன்வைத்து தொல்லியல், கல்வெட்டியல், மொழியியல் ஆகியவற்றின் அடிப்படையில் பேராசிரியர் ராம சரண் சர்மா நிறுவ முற்பட்டுள்ளார். அவர் ஆரியப் பண்பாட்டின் முக்கிய கூறுகளான குதிரையின் பயன்பாடு, குதிரைவண்டி, ஆரத்துடன் கூடிய சக்கரம், சோம பானம் ஆகியவற்றை இந்திய எல்லைக்கு அப்பால் இந்தோ-ஐரோப்பிய மொழிகள் பேசப்படும் பகுதிகளில் கிடைப்பதை ஊன்றிப் பார்க்க வேண்டும் என்றும் அவற்றிற்கு இந்திய- ஐரோப்பிய மொழிகளில் எழுதப்பட்ட ரிக் வேதம், ஈரானில் கிடைக்கும் ஜெண்ட் அவெஸ்தா, கிரேக்கத்தில் காணப்படும் ஹோமரின் இலக்கியங்கள் ஆகியவற்றில் காணப்படும் ஒரே மாதிரியான சொற்களை ஒருங்கிணைத்துப் பார்க்க வேண்டும் என்றும் வலியுறுத்துகிறார்.

இந்தியா-பாகிஸ்தான் பிரிவினைக்கு முந்திய இந்தியாவில் காணப்பட்ட பண்பாட்டு எச்சங்களை, பிரிவினைக்குப் பிறகு ஏற்பட்ட எல்லைப் பாகுபாட்டைக் கொண்டு சரஸ்வதி ஆறு இந்தியர்களுக்கு அதாவது இந்துக்களுக்கு சொந்தமானது என்றும் சிந்து ஆறு பாகிஸ்தானியர்களுக்கு அல்லது முகம்மதியர்களுக்கு சொந்தமானது என்ற மதவாதக் கருத்தின் அடிப்படையில் அண்மைக்காலமாக சில இந்தியத் தொல்லியலாளர்கள் (எஸ்.பி. குப்தா, பி.பி. லால்) வைக்கும் கருதுகோள்களை இவர் வன்மையாகக் கண்டிக்கிறார். பெரும் நகரங்களான அரப்பா, மொகஞ்சதாரோ போன்றவை சிந்துவெளியில் அமைந்திருப்பதை சுட்டிக்காட்டி இக்கூற்றை ஏற்க மறுக்கிறார். மேலும் அகழப்பட்ட லோத்தல், தோளவீரா போன்ற பெருநகரங்களுடன் சரஸ்வதி ஆற்றுக்குத் தொடர்பு இல்லாததையும் சுட்டிக் காட்டியுள்ளார். ரிக் வேதத்தில் குறிப்பிடப்படும் சரஸ்வதி இந்தியாவில் ஓடவில்லை என்றும் அது ஆப்கானிஸ்தானத்தில் அவெஸ்த மொழியில் ஹரக்வதி (Harakhwati) என்று அழைக்கப்பட்டதும் தற்போது ஹெல்மண்ட் என்ற பெயருடையதுவும் ஆன ஆறே எனவும் எடுத்துரைக்கிறார். ரிக் வேதத்தில் குறிப்பிடப்படும் பெரும்பாலான ஆறுகளும் இடங்களும் இந்திய எல்லைக்கு அப்பாலே இருந்தன.

குதிரை ஆரியப் பண்பாட்டின் ஒரு முக்கிய கூறு என்றும் 'அசுவ' என்று குதிரையை குறிக்கும் சொல் சமஸ்கிருதம், அவெஸ்தா, கிரேக்கம், லத்தீன் மற்றும் மற்ற இந்திய-ஐரோப்பிய மொழிகளில் காணப்படுவதைக் குறிப்பிட்டு இது சிந்து சமவெளி நாகரிகத்தில் இடம் பெறவில்லை என்பதை உணர்த்துகிறார். மேலும் சிந்து சமவெளி நாகரிகம் ஆரியர் நாகரிகம் என்றால் 215 இடத்தில் குதிரையைக் குறிக்கும் ரிக்வேதம் சிந்துசமவெளி முத்திரைகளில் பெரும்பாலும் காணப்படும் ஒற்றைக் கொம்புடன் கூடிய காளையைப் பற்றி ஏன் ஒரு இடத்தில் கூட

குறிப்பிடவில்லை என்ற வினாவை எழுப்புகிறார். இவை தவிர ஆரியப் பண்பாட்டுக் கூறுகளான குதிரை, குதிரைவண்டி, ஆரத்துடன் கூடிய சக்கரம், சோமபானம், விலங்குப்பலி போன்றவற்றை ரிக்வேதம் குறிப்பிடுவதும் சிந்துசமவெளிப்பயன்பாட்டுக் கூறுகளான கோட்டை, செங்கல் கட்டிடம், களஞ்சியம், எழுத்து, முத்திரை போன்றவற்றை ரிக்வேதம் குறிப்பிடாததையும் குறிப்பிட்டு இவையிரண்டும் இரு கால கட்டத்தைச் சார்ந்த இருவேறுபட்ட பண்பாட்டுக் கூறுகளை உட்கொண்டது எனவும் ஆரியப்பண்பாடு ஆண் ஆதிக்க சமுதாயத்தைக் கொண்டதாகவும் சிந்துசமவெளி தாய்த்தெய்வ வழிபாட்டின் அடிப்படையில் காணப்படும் பெண் ஆதிக்க சமுதாயம் கொண்டதாகவும் உணர்த்துகிறார். இவ்விரு பண்பாடுகளும் ஒன்றே என்றால் ஆரியப் பண்பாட்டின் உறைவிடமான கங்கைச்சமவெளிப் பகுதியில் சிந்து சமவெளிப் பண்பாட்டிற்கு முற்றிலும் மாறுபட்ட பானை ஓடுகளும், அதன் வடிவமைப்பும் இருப்பது ஏன் என்ற வினாவை எழுப்புகிறார். சிந்து சமவெளி மக்கள் ஆரிய மொழியையே பயன்படுத்தினர் என்றால் ரிக்வேதம் ஏன் அவர்கள் மாறுபட்ட மொழியில் பேசுகிறார்கள் என்று குறிப்பிடவேண்டும்? வேதமொழியில் திராவிடர்களின் தொடர்பின்றி எங்ஙனம் அம்மொழியின் கூறுகள் உட்புகுந்தன என்ற வினாவினை எழுப்பி இது இரு மொழிபேசும் மக்களின் தொடர்பினைக் காட்டுவதாகக் குறிப்பிடுகிறார். இன்றும் பிராஹுவி போன்ற திராவிட மொழிகள் ஆப்கானிஸ்தான், பாகிஸ்தான் பகுதிகளில் பேசப்படுவதை சுட்டிக் காட்டுகிறார்.

ஆரியர்கள் இந்தியாவில் அடியெடுத்து வைப்பதற்கு முன்பு அவர்கள் வட ஆப்கானிஸ்தானத்தில் ஜோப் (Zhob), கோமல், சுவாத் ஆற்றுப் பள்ளத்தாக்குகளிலும், போலன் கணவாய்ப் பகுதியிலும் இருந்தனர் என்பதை பெரியானகுண்டை, கும்லா, காந்தாரா போன்ற இடங்களில் கிடைக்கும் ஆரியப் பண்பாட்டுக் கூறுகளை சுட்டிக்காட்டி ரிக் வேதத்தில் குறிப்பிடப்படும் பெரும்பாலான பகுதிகள் இப்பகுதியைச் சார்ந்தவையே என எடுத்துரைக்கிறார். ஆரியர்கள் இப்பகுதிக்கு பாக்டீரியா-மார்ஜியானா பகுதியிலிருந்து வந்தனர் என்றும் பின்னர் மேற்குறிப்பிட்ட பகுதிகளின் வழியாக சிந்து சமவெளிப்பகுதியில் திராவிட மொழி பேசி வந்த மக்களை தவிர்த்து வேதமொழியை உருவாக்கினர் என்றும் ஆரியர்கள் வருகைக்கு முன்பு இந்தியாவில் பெரும்பான்மையினர் திராவிட மொழியே பேசி வந்தனர் என்றும் ஆசிரியர் கூறுகிறார்.

**கா. ராஜன், தஞ்சாவூர்.**

# 60. புதிய கருத்துகள்

## 60:1. பூம்புகாரில் சிங்கள- பிராமி எழுத்துப் பொறித்த மட்கலத்துண்டு

பூம்புகாரில் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை மேற்கொண்ட அகழாய்வில் கிடைத்த பிராமி எழுத்துப் பொறித்த மட்கலத் துண்டு பற்றிய ஒரு குறிப்பு ஆவணம் 9, ப.152-53 இதழில் திரு. நடன. காசிநாதன் அவர்களால் வெளியிடப்பட்டுள்ளது. அவர் கொடுத்துள்ள பாடம் வருமாறு:

[அ]ஹாபாககே$_3$தரோ

இப்பானை ஓட்டில் உள்ள வாசகத்தை பின்வருமாறு படிக்கலாம்.

அபி$_3$மக$_3$ ததோ.

முதல் எழுத்து 'அ' என்பதில் எந்தவித ஐயப்பாடும் இல்லை. இவ்வெழுத்தமைதி இலங்கை பிராமிக் கல்வெட்டுகளில் பயின்று வந்துள்ளது. (Deraniyagla, *The Pre history of Sri Lanka, An Ecological Perspective*, 1992, p.741.)

இரண்டாவது எழுத்து பி$_3$ ஆகும். 'அபி$_3$' என்னும் சொல் உயர் நிலையில் உள்ள பெண்களைக் குறிக்கும் மதிப்பு மிக்க சொல். 'இளவரசி' என்பதற்கு அச்சொல் வழக்கில் இருந்ததை இலங்கை பிராமிக் கல்வெட்டுகளில் காணமுடிகிறது. அபி$_3$-தில்லெ; அபி$_3$-அநுரதி; அபி-சருவர, அபி-சோணா.

மூன்றாவது எழுத்து அசோகன் பிராமி எழுத்து 'ம', இந்த ஓட்டில் சாய்வாக எழுதப்பட்டுள்ளது. நான்காவது ஐந்தாவது எழுத்துகள் முறையே 'க$_3$த' என்பதிலும் எந்தவித கருத்து வேறுபாடும் இருக்க வாய்ப்பில்லை. இறுதி எழுத்து வடிவத்தை 'தோ' என்று படிக்க வேண்டும். இதில் மூன்று, நான்காம் எழுத்துக்கள் 'மக$_3$' நட்சத்திரப் பெயர். நட்சத்திரங்களைப் பெயர்களாகக் கொண்ட ஆட் பெயர்கள் இலங்கைக் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. பண்டைய வணிக உறவைக் காணும் வகையில் தமிழ்நாட்டு அகழாய்வுகளில் சில சிங்களச் சொற்கள் பிராமி எழுத்தில் ஏற்கெனவே கிடைத்துள்ளன. (Iravatham Mahadevan, 'Old Sinhalese Inscriptions from Indian Ports, New Evidence, for Ancient India- Sri Lankan Contacts', *Journal of the Institute* of Asian Studies, XIV, 55-65.)

**சு. இராசவேலு, சென்னை.**

## 60:2. சம்புவராயர் நாணயம் குறித்து மறுப்பு

ஆவணம் 9, ப.120இல் திரு.ப. வெங்கடேசன் வெளியிட்டுள்ள சம்புவராயர் நாணயத்தை முழுவதும் நிகர்த்த காளை உருவங்கொண்ட நாணயத்தை திரு. இரா.நாகசாமி *Tamil Coins* என்ற தம் நூலில் (ப.169-171) மதுரை நாயக்கருக்குரியதாக விளக்கியுள்ளார். அதனால் சம்புவராயர் நாணயம் என்று சொல்வதற்கு வேறு உறுதியான சான்றுகள் தேவை.

**மு.ம.கோபாலன், திருச்சிராப்பள்ளி.**

## 60:3. குகைக் கல்வெட்டுகள் - ஒரு திருத்தம்

1998 மேத்திங்கள் நடந்த இந்தியக் கல்வெட்டியல் கழக 24-ஆம் ஆண்டு மாநாட்டில், கல்வெட்டறிஞர் திரு. ஐராவதம் மகாதேவன், அவர்கள் தலைமையுரையாற்றி கேரளத்துத் தொன்மைக் கல்வெட்டுகள் குறித்த ஒரு கட்டுரையை ஆங்கிலத்தில் படித்தளித்தார். இக்கட்டுரை எடக்கல் மலையில் உள்ள ஏழு கல்வெட்டுகள் பற்றியும், நீலாம்பூர் காட்டுப்பகுதியில் செருபுழா ஆற்றங்கரையில் நீரில் மூழ்கியுள்ள ஒரு கல்லில் உள்ள கல்வெட்டுப் பற்றியும் விரிவாகவும், தெளிவாகவும் விளக்குகிறது. இச்செயற்கரிய செயலுக்கு இப்பெருந்தகையும் அவர் குழுவினரும் மிகவும் பாராட்டப்பட வேண்டியவராவர். ஆங்கிலக் கட்டுரையை ஒட்டி தமிழில் ஆவணம் இதழ் 9-இல் எடக்கல் குகைக் கல்வெட்டுகள் என்ற கட்டுரை வெளியிடப்பட்டது.

ஒரு கல்வெட்டு (3:6) *'பல்புலி தாத்த காரி'* என்று படிக்கப்பட்டுள்ளது. பல்புலி என்பதற்கு பலபுலிகள் என்று பொருள் இருந்தபோதிலும் இங்கு இடப்பெயரைக் குறிப்பதாக இருக்கவேண்டும் என்று திரு. ஐராவதம் மகாதேவன் ஆங்கிலக் கட்டுரையில் குறித்துள்ளார்.

இக்கல்வெட்டில் உள்ள முதல் எழுத்து 'வ' என்றேயுள்ளது. மூன்றாவது எழுத்தாக உள்ள 'பு' எழுத்தில் உள்ள 'ப' அமைப்பிலிருந்து இம்முதல் எழுத்து மாறுபட்டுச் சற்று வளைந்து காணப்படுகிறது. எனவே இக்கல்வெட்டை *'வல்புலி தாத்தகாரி'* என்று படிக்க வேண்டும். புலியைப் போல வலிமை மிகுந்த தாத்தகாரி என்பவனை இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது என கொள்ளலாம்.

**நடன. காசிநாதன், சென்னை.**

---

# கட்டுரையாளர்கள்

**திரு. ந. அதியமான்**
இணைப்பேராசிரியர்
நீரகழாய்வு மையம்
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் 613 005

**திரு. ஆறுமுக சீதாராமன்**
12 ராஜராஜன் நகர்
மானோஜிபட்டி (தெற்கு)
தஞ்சாவூர்

**முனைவர் சு. இராசகோபால்**
இராஜாஜி இல்லம்
4எ, முதல் தெரு
வெங்கடேஸ்வரா நகர்
அடையாறு, சென்னை 600 020

**திரு. சு. இராசவேலு**
முதுநிலைக் கல்வெட்டாய்வாளர்
தென்மண்டலக்
கல்வெட்டியல் பிரிவு
இந்தியத் தொல்லியல்
அளவீட்டுத் துறை
கோட்டை, சென்னை 600 009

**திரு. கரு. இராசேந்திரன்**
ஆசிரியர்
மேலப்பனையூர் அ.நி.
விராச்சிலை வழி
622 420

**திரு. சீ. இலட்சுமணன்**
உலகத் தமிழ்க் கல்வி இயக்கம்
தமிழூர்
அடைக்கலப்பட்டணம்
திருநெல்வேலி 627 808

**திரு. மி.ஜ. இளங்கோவன்**
4-1 பி மேட்டுத் தெரு, ஒண்ணுபுரம்
திருவண்ணாமலை மாவட்டம்
632 315

**திரு. கோ. உத்திராடம்**
ஆசியவியல் கழகம்
செம்மணஞ்சேரி
சென்னை 600 119

**முனைவர் து. கங்காதரன்**
வரலாற்றுத்துறை
பழனியாண்டவர் கலைக்கல்லூரி
பழனி

**திரு. சு. கண்ணன்**
மதுரை

**திரு. நாக. கணேசன்**
காப்பாட்சியர்
அகழ்வைப்பகம்
த. அரசு தொல்லியல் ஆய்வுத் துறை
ஜவஹர் பஜார், கரூர் 639 001

**முனைவர் தெ. கல்யாணி**
திருச்சிராப்பள்ளி

**திரு. நடன. காசிநாதன்**
136, 5ஆவது குறுக்குத் தெரு
மல்லீஸ்வரி நகர்
சேலையூர்
சென்னை 600 073

**திரு. ம. காந்தி**
காப்பாட்சியர்
அரசு அருங்காட்சியகம்
வேலூர் 632 004

**திரு. ம. காந்திராசன்**
ஆய்வாளர்
தொல்வரலாறு, தொல்லியல் துறை
சென்னைப் பல்கலைக் கழகம்
600 005

**திரு. ச. கிருஷ்ணமூர்த்தி**
தொல்லியல் அலுவலர்
த. அரசு தொல்லியல் ஆய்வுத் துறை
ஓ.எஸ். தீன் லாட்ஜ்
சிதம்பரம் 608 001

**முனைவர் அ. கிருட்டிணன்**
இணைப்பேராசிரியர்
கல்வெட்டியல், தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் 613 005

**திரு. கி. குமார்**
சென்னை

**முனைவர் ஒர்சே.மா. கோபால கிருட்டினன்**
பாரிசு, பிரான்சு

**திரு. மு.ம. கோபாலன்**
24 பஞ்சவர்ணசுவாமி கோயில் தெரு
உறையூர்
திருச்சிராப்பள்ளி 620 003

**திரு. செ. கோவிந்தராஜ்**
புதுக்கோட்டை

**திரு. கி.இரா. சங்கரன்**
ஆய்வாளர்
கல்வெட்டியல், தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் 613 005

**முனைவர் ப. சண்முகம்**
பேராசிரியர்
தொல்வரலாறு, தொல்லியல் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
600 005

**திரு. மா. சந்திரமூர்த்தி**
பதிவு அலுவலர்
த. அரசு தொல்லியல் ஆய்வுத் துறை
3ஆவது குறுக்குத் தெரு
சிபிடி வளாகம், தரமணி
சென்னை 600 113

**திரு. சொ. சாந்தலிங்கம்**
தொல்லியல் அலுவலர்
த. அரசு தொல்லியல் ஆய்வுத் துறை
திருமலை நாயக்கர் மகால்
மதுரை 625 001

**திரு. ஜே.எஸ். சிங்காரவேலவன்**
23, ஸ்ரீகிருஷ்ணாநகர்
முடிச்சூர் சாலை
மண்ணிவாக்கம்
வண்டலூர்
சென்னை 600 048

**முனைவர் சி.கே. சிவப்பிரகாசம்**
பேராசிரியர்
வரலாற்றுத் துறை
பூண்டி புஷ்பம் கல்லூரி
தஞ்சாவூர்

**முனைவர் எ. சுப்பராயலு**
பேராசிரியர்
கல்வெட்டியல்,
தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் 613 005

**முனைவர் சு. சுவாமிநாதன்**
உதவி கல்வெட்டியல்
கண்காணிப்பாளர்
இயக்குநர் (கல்வெட்டியல்)
அலுவலகம்
இந்தியத் தொல்லியல்
அளவீட்டுத் துறை
மைசூர் 570 005

**முனைவர் வீ. செல்வகுமார்**
ஆய்வாளர்
தொல்லியல் துறை,
தெக்கணக் கல்லூரி
புணெ 410 006

**முனைவர் ஜி. சேதுராமன்**
கலை வரலாற்றுத் துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை 625 021

**திரு. த.த. தவசிமுத்து**
ஓவியர்
36 பூவரசூர் மெயின் ரோடு
ஆறுமுகநேரி 628 202

**திரு. கு. தாமோதரன்**
இயக்குநர்
த. அரசு தொல்லியல் ஆய்வுத் துறை
3 ஆவது குறுக்குத் தெரு
சிபிடி வளாகம், தரமணி
சென்னை 600 113

**திரு. இல. தியாகராசன்**
முதுநிலை வரலாற்று
விரிவுரையாளர்
வரலாற்றுத் துறை
அரசு கலைக் கல்லூரி
அரியலூர் 621 704

**திரு. கோ. திருமூர்த்தி**
தொல்லியல் ஆய்வாளர்
இந்தியத் தொல்லியல்
அளவீட்டுத் துறை
கோட்டை
சென்னை 600 009

**திரு. து. துளசிராமன்**
காப்பாட்சியர்
த. அரசு தொல்லியல்
ஆய்வுத் துறை
13 சித்திவிநாயகர் கோயில் தெரு
ஆர்க்காடு 632 503

**திரு. ச. பரணன்**
காப்பாட்சியர்
மராட்டியர் அரண்மனை
தஞ்சாவூர் 613 001

**செல்வி மா. பவானி**
ஆய்வாளர்
கல்வெட்டியல்,
தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் 613 005

**திரு. அ. பழனியப்பன்**
தமிழாசிரியர்
75 பழனி ஆண்டவர் கோயில் தெரு
சண்பை
ஈரோடு மாவட்டம்

**திரு. க. பன்னீர்செல்வம்**
உதவி கல்வெட்டாய்வாளர்
இயக்குநர் (கல்வெட்டியல்)
அலுவலகம்
இந்தியத் தொல்லியல்
அளவீட்டுத் துறை
மைசூர் 570 005

**முனைவர் ப. தெ. பாலாஜி**
தொழில்நுட்ப அலுவலர்
தொல்வரலாறு,
தொல்லியல் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை 600 005

**திரு. ப. புஸ்பரட்ணம்**
வரலாற்று விரிவுரையாளர்
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்
இலங்கை

**திருமதி மங்கையர்க்கரசி வீரராகவன்**
66 முத்துவேல் லே அவுட்
கே.கே. சாலை
விழுப்புரம் 605 606

**முனைவர் க. ராஜன்**
இணைப்பேராசிரியர்
கல்வெட்டியல்,
தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் 613 005

**திரு. சி. வீரராகவன்**
66 முத்துவேல் லே அவுட்
கே.கே. சாலை
விழுப்புரம் 605 606

**முனைவர் த. ரத்னமாலா**
183 நாடார் நடுத்தெரு
திருத்தங்கல் 626 130

**திரு. ஐ. ராமசாமி**
இக்கரை போளுவாம்பட்டி
தொண்டாமுத்தூர் வழி
கோவை - 641 109

**திரு.வெ. ராஜு**
ஓவியர்
கரூர் 639 001

**திருமதி அர. வசந்தகல்யாணி**
சிறப்புநிலை கல்வெட்டாய்வாளர்
த. அரசு தொல்லியல் ஆய்வுத் துறை
3ஆவது குறுக்குத் தெரு
சிபிடி வளாகம், தரமணி
சென்னை 600 113

**திருமதி சீ.வசந்தி**
தொல்பழங்கால அகழாய்வாளர்
த. அரசு தொல்லியல் ஆய்வுத் துறை
3ஆவது குறுக்குத் தெரு
சிபிடி வளாகம், தரமணி
சென்னை 600 113

**முனைவர் நா. வள்ளி**
1/1 கிருஷ்ணன் செட்டியார் சந்து
காரைக்குடி

**திரு. ப. வெங்கடேசன்**
3/78 கம்பர் தெரு
பெல்லியப்பா நகர்
வாலாஜாப்பேட்டை
632 513

**முனைவர் வெ. வேதாசலம்**
கல்வெட்டாய்வாளர்
த. அரசு தொல்லியல் ஆய்வுத் துறை
திருமலை நாயக்கர் மகால்
மதுரை 625 001

**திரு. கி. ஸ்ரீதரன்**
9 ஏ மேல் அடையவிளஞ்சான் வீதி
திருவரங்கம்
திருச்சிராப்பள்ளி

# அஞ்சலி



குடந்தை என். சேதுராமன்

(பிறப்பு 3-11- 1930 மறைவு 25-6-1999)

தமிழகத் தொல்லியல் கழகத்தின் தலைவரும், கல்வெட்டியல் அறிஞரு மான குடந்தை திரு. என். சேதுராமன் அவர்கள் அண்மையில் காலமானதை ஆழ்ந்த வருத்தத்துடன் பதிவு செய்கிறோம்.

கல்வெட்டாய்வில் தனக்கென்று ஒரு தனி வழியை வகுத்துக்கொண்ட என். சேதுராமன் அவர்கள் அறிவியல் முனைப்புடன் வரலாற்று ஆய்வு செய் வதில் மிகுந்த நாட்டம் காட்டினார். வானியல் முறைக் காலக்கணிப்பு ஆய்வை மேற்கொண்டு தமிழக வரலாற்றில் இருந்த சில முரண்பாடுகளை விலக்கினார். பாண்டியர், சோழர் கால வரலாற்றுக்கு சிறப்பான காலக்க ணிப்பு முறையை அளித்தார். இந்தியக் கல்வெட்டியல் கழகத்தில் ஒரு முன் னோடி உறுப்பினராக இருந்து பல ஆய்வுக்கட்டுரைகளை அக்கழகத்தின் கருத் தரங்குகளில் வெளியிட்டார். கல்வெட்டு ஆய்வுடன் ஆட்பெயராய்வு, ஊர்ப் பெயராய்வு ஆகியவற்றிலும் இவர் நாட்டம் செலுத்தினார். இவருடைய கட் டுரைகள் பல தினமணி நாளிதழ் மற்றும் தருமை ஆதீனத்தின் பருவ இதழான ஞானசம்பந்தம் ஆகியவற்றிலும் வெளியாகியுள்ளன. கூடவே பல நூல்களும் ஆக்கித்தந்துள்ளார். இவரது நூல்களில் குறிப்பிடத்தக்கவை: (தமிழில்) பாண் டியர் வரலாறு, சங்கரசோழன் உலா குலோத்துங்கசோழன் கோவை, (ஆங்கி லத்தில்) சோழர், இடைக்காலப்பாண்டியர் ஆகிய அரச மரபுகளின் காலக்க ணிப்பு பற்றிய நூல்கள். இவரது சிறந்த நூலகத்தை வேண்டியோர் பயன்படுத் திக் கொள்ள அனுமதி நல்கி இளம் ஆய்வாளர்களை மிகவும் ஊக்குவித்துவந் தார்.

இவரது 25 ஆண்டு கால ஆய்வுப்பணியைப் பாராட்டி இந்தியக் கல்வெட் டியல் கழகம் சிறந்த கல்வெட்டறிஞர் என்ற விருதும், செப்புப் பட்டயமும் அளித்துப் பெருமைப்படுத்தியது. கும்பகோணத்தில் அமைந்துள்ள இராமன் அண்ட் இராமன் கம்பெனியின் நிருவாகத்தை மேற்கொண்டு அதன் உயர் வுக்கு பலகாலம் உழைத்தார். இவருக்கு மனைவி, மகன், மூன்று மகள்கள் உள்ளனர்.

# TAMIL NADU ARCHAEOLOGICAL SOCIETY,
## Thanjavur.

*RECEIPTS AND PAYMENTS ACCOUNT FOR THE YEAR ENDED 31.3.99.*

| RECEIPTS | | PAYMENTS | |
|---|---|---|---|
| Cash in hand | 1,189.15 | Printing charges | 14,135.00 |
| Cash at Bank | 667.00 | Typing & Stationery | 1,256.00 |
| Cash at State Bank of India | 11,972.00 | Audit fees | 400.00 |
| Fixed Deposit | 95,000.00 | Salary | 400.00 |
| Sale of books | 4,948.00 | Postage | 851.00 |
| Membership fees | 37,060.00 | Bank charges | 237.00 |
| Interest | 10,715.41 | Freight | 238.00 |
| | | General Expenses | 3,355.81 |
| | | **Closing Balance** | |
| | | Fixed deposit SBI., Thanjavur. | 1,30,000.00 |
| | | Indian Bank, TNJ | 696.00 |
| | | Cash at SBI, TNJ | 9,379.41 |
| | | Cash in hand | 603.34 |
| | 1,61,551.56 | | 1,61,551.56 |

# TAMIL NADU ARCHAEOLOGICAL SOCIETY, Thanjavur.

*INCOME AND EXPENDITURE ACCOUNT FOR THE YEAR ENDED 31.3.99.*

| | Expenditure | | | Income | |
|---|---|---|---|---|---|
| To | Printing charges | 14,135.00 | By | Sale of books | 4,948.00 |
| " | Typing & Stationery | 1,256.00 | " | Membership fees | 37,060.00 |
| " | Audit Fees | 400.00 | " | Interest | 10,715.41 |
| " | Salary | 400.00 | | | |
| " | Postage | 851.00 | | | |
| " | Bank Charges | 237.00 | | | |
| " | Freight | 238.00 | | | |
| " | General Expenses | 3,355.81 | | | |
| " | Excess of Income Over Expenditure | 31,850.60 | | | |
| | | 52,723.41 | | | 52,723.41 |

*BALANCE SHEET AS ON 31.3.99.*

| LIABILITIES | | | ASSETS | |
|---|---|---|---|---|
| Opening Balance | 1,08.828.15 | | Fixed deposit | 1,30,000.00 |
| **ADD:** Excess of Income Over Expenditure | 31,850.60 | | **Cash at Bank** | |
| | | 1,40,678.75 | Indian Bank, TNJ | 696.00 |
| | | | S.B.I., TNJ | 9;379.41 |
| | | | Cash in hand | 603.34 |
| | | 1,40,678.75 | | 1,49,678.75 |

Sd./- **V. RAMASAMY**, B.Com., A.C.A.,
Chartered Accountant,
1137, East Main Street
Thanjavur – 613 001.

**உறுப்பினர் கட்டணம்**

தமிழகத் தொல்லியல் கழக வாழ்நாள் உறுப்பினர் கட்டணத்தை ரூ.(600/- ) **பொருளாளர், தமிழகத் தொல்லியல் கழகம், மே/பா. கல்வெட்டியல் துறை, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 613 005** என்ற முகவரிக்கு அனுப்ப வேண்டும். காசோலை, வரைவோலைகள், தமிழகத் தொல்லியல் கழகம் என்ற பெயரில் இருத்தல் வேண்டும்.

பிற தகவல்களுக்கு செயலர், தமிழகத் தொல்லியல் கழகம், மே/பா. கல்வெட்டியல் துறை, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 613 005. என்ற முகவரியில் தொடர்பு கொள்ளவும்.

# ஆவணம்

## தமிழகத் தொல்லியல் கழகத்தின் ஆண்டு இதழ்

ஆவணம் தமிழக வரலாற்றை வளப்படுத்தும் எல்லா அடிப்படைச் சான்றுகளையும் வெளியிடும் நோக்கம் கொண்டது. இதுவரை வெளியிடப் படாத கல்வெட்டுகள், செப்பேடுகள், ஓலைச்சுவடிகள், காகித ஆவணங் கள், தொல்பொருள்கள், காசுகள், கலைப்பொருள்கள் ஆகியவற்றைப் பற் றிய செய்திகளையும் கட்டுரைகளையும் ஏந்தி வருகிறது. இது தமிழக வர லாற்றில் ஈடுபாடுடைய யாவருடைய நூலகங்களுக்கும் இன்றியமையாத வரலாற்றுக் கருவூலம்.

| | |
|---|---|
| ஆவணம் 1, 2 | இருப்பு இல்லை |
| ஆவணம் 3 - 10 | ரூ.100.00 (இதழ் ஒன்றுக்கு) |
| நொபொரு கராஷிமா, வரலாற்றுப் போக்கில் தென்னகச் சமூகம் (சோழர் காலம்) | ரூ.100.00 |

தமிழகத் தொல்லியல் கழக இதழ்களைப் பெற விழைவோர், சரியான தொகையை வரைவோலையாகவோ காசோலையாகவோ **பொருளாளர், தமிழகத் தொல்லியல் கழகம், மே/பா. கல்வெட்டியல் துறை, தமிழ்ப் பல் கலைக் கழகம், தஞ்சாவூர், 613 005** என்ற முகவரிக்கு அனுப்ப வேண்டும். வரைவோலை, காசோலைகள், தமிழகத் தொல்லியல் கழகம் என்ற பெய ரில் இருத்தல் வேண்டும். காசோலையாக இருந்தால் மேற்கண்ட தொகையு டன் ரூ.20/-ஐச் சேர்த்து அனுப்பவும்.

பிற தகவல்களுக்கு செயலர், தமிழகத் தொல்லியல் கழகம், மே/பா கல் வெட்டியல் துறை, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர் 613 005 என்ற முக வரியில் தொடர்பு கொள்ளவும்

**For Further Information:**

Secretary, Tamizakat Tolliyal Kazakam,
(Tamil Nadu Archaeological Society),
C/o, Department of Epigraphy and Archaeology,
Tamil University, Thanjavur - 613 005.